# பொருளடக்கம்

# முன்னுரை

இசைக் கலைஞர்களைப்பற்றி நான் எழுதி வரும் வரலாற்று வரிசையிலே இது நான்காவது முயற்சி. இதற்கு முன் இந்த வரிசையில் 'செம்பைச் செல்வம்', 'அரியக்குடி', 'பிடாரம் கிருஷ்ணப்பா' ஆகிய மூன்று நூல்கள் வெளி வந்துள்ளன.

சுமார் இருபது ஆண்டுகளுக்குமுன் 1936-இல் தமிழ்ப் பெரியார் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் மூன்று இசை மேதைகளைப் பற்றிய வரலாறுகளை எழுதி வெளி யிட்டார். கனம் கிருஷ்ணையர், மகா வைத்தியநாதையர், கோபால கிருஷ்ண பாரதி ஆகியோரின் வரலாறுகளே அவை. அதற்குப் பத்து ஆண்டுகளுக்குப் பின் 1946-இல் 'சங்கீத நவமணிகள்' என்ற ஒரு புத்தகம் வெளியாயிற்று. சுதேசமித்திரன் உதவி ஆசிரியராகப் பணியாற்றி வரும் ஸ்ரீ. எஸ் நீலமேகம் அவர்கள் அதன் ஆசிரியர். புத்தகம் தினமணி வெளியீடாக வந்தது. அதே நூல் இப்போது 'சங்கீத கலாமணிகள்' என்ற பெயரில் இரண்டாம் பதிப் பாக மங்கள நூலகத்தின் வெளியீடாக வந்துள்ளது. 'கல்கி' அவர்கள் விமரிசன முறையில் சிலரைப் பற்றி எழுதிய நூல் ஒன்று வெளி வந்தது. இவற்றைத் தவிர நூல் வடிவில் வேறு எதுவும் வெளி வந்ததாகத் தெரிய வில்லை. சில பத்திரிகைகளில், விசேஷ மலர்களில் யாரா வது அறிஞர்கள் எழுதும் கட்டுரைகள், வித்துவான்களின் வாழ்க்கைக் குறிப்புகள் வெளி வருகின்றன; அவ்வளவே. டாக்டர் வே. ராகவன் அவர்கள் செம்பைச் செல்வம் முக வுரையில் கூறியிருப்பதுபோல இது வரையில் விரிவான முழு வரலாற்று நூல் வெளி வந்ததில்லை என்று தெரி கிறது.

டாக்டர் ஐயர் அவர்கள் தமிழிலும், இசையிலும் பாண்டித்தியம் பெற்றவர்கள். கனம் கிருஷ்ணையர் அவர்களின் உறவினர். தாம் வரலாறு எழுதிய மூன்று மேதைகளோடும் நெருங்கிப் பழகியவர். பல விஷயங்களை நேரில் அறிந்தவர். உள்ளத்தில் தேங்கி நின்ற விஷயங்களை எழுத்தில் உருவாக்கினர். மற்றவர்களைப் பற்றியும் எழுதும் எண்ணம் அவர் உள்ளத்தில் இருந்ததோ என்னவோ, எழுதவில்லை.

ஸ்ரீ நீலமேகம் சிறந்த ரசிகர். தெளிவான இசை ஞானம் உடையவர். இசையிலே ஆழ்ந்த கருத்தும் அளவற்ற பக்தியும் இசைக் கலைஞர்களிடம் நெருங்கிய நட்பும் நல்ல நினைப்பும் உள்ளவர்.

அவர் முதலில் ஒன்பது பேருடைய வரலாற்றுச் சுருக்கங்களை எழுதித் தொகுத்து வெளியிட்டார். அந் நூலின் பெயர்தான் 'சங்கீத நவமணிகள்.'

அரியக்குடி ராமானுஜ ஐயங்கார், மகாராஜபுரம் விசுவநாதையர், மழவராயனேந்தல் சுப்பராம பாகவதர், முசிரி சுப்பிரமணிய ஐயர், சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, செம்மங்குடி ஸ்ரீநிவாசையர், ஜி. என். பாலசுப்பிரமணியம், மதுரை மணி ஐயர், பாலக்காடு மணி ஐயர்—ஆகியோரின் வரலாற்றுச் சுருக்கங்கள் அதில் இடம் பெற்றுள்ளன.

பின்னர் வெளி வந்துள்ள மறு பதிப்பில் டைகர் வரதாச்சாரியார், முடிகொண்டான் வேங்கடராமையர், கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை—ஆகிய மூவரின் வரலாற்றுச் சுருக்கங்களையும் சேர்த்திருக்கிறார். அந்த மறுபதிப்பு நூலின் பெயர்தான் 'சங்கீத கலாமணிகள்.'

விமரிசன முறையில் அமைந்துள்ள அவருடைய நூலில் மேற்குறித்த வித்துவான்களின் கலைத்திறன் ஆராய்ச்சி பூர்வமாக, நுட்பமான பல விஷயங்களைத் தெள்ளத் தெளிய எடுத்துக் கூறுகிற முறையில் விளக்கப்

பெற்றிருக்கிறது. பிறப்பு, வளர்ப்பு முதலிய வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் சுருக்கமான முறையில் இணைக்கப் பெற்றிருக்கின்றன. ரசிகர்களுக்கும் இசைத் துறையில் ஈடுபாடு கொண்டுள்ள இளைஞர்களுக்கும் உதவும்படியாக, மிக ரசமாக, படிப்பதற்கு அலுப்புத் தட்டாத வகையில் ஒவ்வொருவரின் பிறப்பு வளர்ப்பு, வாழ்க்கை ஓட்டம், இசைப் புலமை ஆகிய அம்சங்களைச் சுருக்கமாகவும், விமரிசன முறையிலும் நன்றாக எழுதி யிருக்கிறார்.

இந்த வரிசையில் என்னுடைய முயற்சி மூன்றாவது நிலையில் உள்ளது. முன் இரு மேதைகளையும் என்னை யும் ஒப்பிடும் இடத்தில் அவர்களுடைய நிலைக்கு நான் குறைந்தவன். அவர்கள் காட்டிய வழியில் தளர்நடை போடுபவன்.

இந்தத் துறையில் என்னை ஈடுபடுத்திய என் தலைவர் ஸ்ரீ. ரா. ஸ்ரீ. ஸ்ரீகண்டன் அவர்களின் உள்ளம் கடலைப் போன்றது. கடல் உறங்குவதில்லை. எப்போதும் அங்கே ஓயாத அலைகள். அவை ஒன்றை ஒன்று முந்தி முரண்டு கின்றன. கர்நாடக சங்கீத உலகில் மேதைகளாகத் திகழ்ந் தவர்கள் எத்தனை பேர்? திகழ்ந்துகொண்டிருப்பவர்கள் எத்தனை பேர்? நாளை திகழக் கூடியவர்கள் எத்தனை பேர்? அவ்வளவு பேர்களுடைய வரலாறுகளையும் விரைவாக எழுதிக் குவிக்க வேண்டும் என்ற எண்ணம் அவர் உள்ளத்தில் எழுந்து எழுந்து புரண்டுகொண்டே இருக் கிறது.

அவருடைய மனோவேகத்திற்கு என்னால் ஈடு கொடுக்க முடியவில்லை. இதற்காக அவர் என்னை வேலையினின்றும் தற்காலிகமாக விடுதலை செய்தார். நானும் கற்பனைக் கதைகள் எழுதுவதைக் குறைத்துக் கொண்டேன். வாழ்க்கையோடு ஒட்டிய மற்ற அலுவல்களையும் நிறுத்திக் கொண்டேன். உண்ணும் வேளை, உறங்கும் வேளை தவிர மீதிப் பொழுதெல்லாம் இசை அறிஞர்களைக் காண்பதும்

செய்திகளைக் கேட்பதும் அறிந்தவற்றை எழுதுவதுமாக இருக்கிறேன். கலை அறிஞர்களிடம் சென்று செய்திகளைத் திரட்ட முயலும்போது குறிப்பிட்ட ஒருவரைப் பற்றியோ அல்லது ஒரு சிலரைப் பற்றியோ மட்டும் வித்துவான்கள் பேசுவது இல்லை. பேச்சு வாக்கிலே சந்தர்ப்பங்கள் குறுக்கிடும்போது காலமானவர்கள், இருப்பவர்கள் யார் யாரைப் பற்றி எல்லாமோ செய்திகள் வெளி வருகின்றன. அனைத்தையும் குறித்துக்கொண்டே வருகிறபோது ஒரு சிலரைப் பற்றிய செய்திகள் மிகுதியாகச் சேர்ந்து விடுகின்றன. சற்று ஏறக்குறைய ஒருவருடைய முழு வாழ்க்கை வரலாற்றுக்கு வேண்டிய அளவு செய்திகள் சுலபமாகச் சேர்ந்து விடும்போது அத்தகையோரைப்பற்றி உடனடியாக எழுத முடிந்து விடுகிறது. அப்படி அல்லாத சிலருடைய செய்திகளைச் சிதற விடாமல் சேகரித்து வைத்துக்கொண்டு தக்கபடி அவற்றைப் பயன்படுத்தி வருகிறேன்.

சம்பிரதாயம், வழிமுறை என்பன அநேகமாக எல்லாக் காரியங்களிலுமே உண்டு. என்றாலும் சில விஷயங்களில் சந்தர்ப்பத்தை ஒட்டி அவற்றை மீறிச் செயல் புரியவும் நேரும். உதாரணமாக, கர்நாடக சங்கீத உலகில் மறைந்தவர்கள், பிரகாசித்துக் கொண்டிருப்பவர்கள் இவர்களில் வயது, கலைத்திறன், செல்வாக்கு முதலிய அம்சங்களில் பெரியவர்கள் மிகப்பலர். அவர்களை வரிசையிட்டுக் கூறுவது எளிதான செயல் அன்று. வரிசைப்படி வாழ்க்கை வரலாறுகளை உருவாக்குவதும் அப்படித்தான். சந்தர்ப்பத்தை ஒட்டி நூல்கள் முன்பின்னாக வெளி வந்தால் அதை ஒரு குறைபாடாகக் கருதுவதற்கில்லை.



இந்த வரலாறு 'மாலா' மாத இதழில் தொடராக வெளி வந்தது. இதற்கு முன் 'பிடாரம் கிருஷ்ணப்பா' வரலாற்றையும் 'மாலா' தொடராக வெளியிட்டது. இசைக் கலைஞர்களின் வாழ்க்கை வரலாற்றைத் தொடர்

நாவலைப் போலப் பத்திரிகையில் பிரசுரிப்பது நடைமுறையில் இல்லாத ஒரு செயல் என்றே சொல்ல வேண்டும். தவிர, இசைக் கலைஞர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த சுவையான சம்பவங்களை—நான் அவ்வப்போது சேகரித்து எழுதி வருபவற்றை—'அமுதசுரபி', 'குமுதம்', 'தினமணிக் கதிர்'' 'ஆனந்த விகடன்', 'தினகரன்', 'மாலா', 'காவேரி', 'மஞ்சரி' முதலிய பத்திரிகைகள் வெளியிட்டு வருகின்றன. இந்தச் செயலால் என் பணி ஒரு நல்ல சூழ்நிலையையும் சிறப்பையும் பெற்று வருகிறது. மாலாவைப் போலவே முழு நீள வரலாற்றை வெளியிட மற்றும் சில பத்திரிகைகளும் முன் வந்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். மேற்குறித்த பத்திராதிபர்கள், ஆசிரியர்கள் அனைவருக்கும் என் மன முவந்த நன்றியும் வணக்கமும்.

இந்த நூல் உருவாகப் பல வகைகளிலும் உதவிய அன்பர்கள் பலர். கதா காலட்சேப விற்பன்னர் மதுரை ஸ்ரீ நாராயண ஐயங்கார், சங்கீத வித்துவான்கள் உமையாள் புரம் ஸ்ரீ கல்யாணராமையர், பத்தமடை ஸ்ரீ சுந்தரமையர், ஸ்ரீ ராஜம் ஐயர், களக்காடு ஸ்ரீ ராமநாராயணையர், ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமணியம், மதுரை ஸ்ரீ மணி ஐயர், கீரனூர் ஸ்ரீ மு. ராமசாமி பிள்ளை முதலியவர்களுடன் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அவர்களின் நண்பர்களான மயிலாப்பூர் ஸ்ரீ எம். சுப்பிரமணிய முதலியார், கோட்டூர் ஸ்ரீ ராதாகிருஷ்ணையர், அறிஞர் பெ. தூரன், எழுத்தாளர் ஸ்ரீ டி. ஆர் குருஸ்வாமி, மற்றும் பிள்ளை அவர்களின் மாணவர்கள் ஆகிய பலர். இவர்களுக்கெல்லாம் என் மனமார்ந்த நன்றியும் வணக்கமும். எனக்கு மேலும் மேலும் உற்சாகமூட்டி இந்தத் துறையில் நான் வெற்றியைக் காண உதவி வரும் அன்பர்கள் அனைவருக்கும் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

விஜய விலாசம்<br>சென்னை–4<br>19–10–'57

—எல்லார்வி

# பொருள் அடக்கம்

# ராஜமாணிக்கம் பிள்ளை

## அறிமுகம்

கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையை நான் முதல் முதலாகப் பார்த்தது 1930-இல். இன்றைய நாகரிக வசதிகள்—வீட்டிற்கு வீடு ரேடியோ, தெருவிற்குத் தெரு சங்கீத சபை, ஊருக்கு ஊர் சினிமாக் கொட்டகை, எங்கு பார்த்தாலும் மின்சார விளக்கொளி, பஸ் வசதிகள் முதலியன—அந்த நாட்களில் கிடையா. சுற்று வட்டாரத்தில் சுமார் பத்து மைல் எல்லையில் எங்காவது சிறந்த சங்கீதக் கச்சேரி, மேளக் கச்சேரி, பரத நாட்டியம் முதலியன நடைபெற்றால் மக்கள் வெயில், மழை, பனி முதலியவற்றைச் சற்றும் பொருட்படுத்தாமல் கால்நடையாகவே செல்வர். பசி, தாகம், தூக்கம் எல்லாம் மறந்து கலையின்பத்தை நுகர்வர். பெரிய ஆலயங்களிலே நிகழும் திருவிழாக்களிலும், தனிகர்கள் நடத்தும் வைபவங்களிலுமே மக்கள் அப்போது கலை இன்பத்தை அதிகமாகப் பெற முடிந்தது. இது தவிர, புகழ் பெற்றவர்களால் நடத்தப்பெறும் தெருக்கூத்து, பொம்மலாட்டம் முதலியவற்றைக் கண்டு களிப்பதற்காகவும் பலர் ஊர் ஊராகச் செல்லும் வழக்கமும் இருந்தது. சென்று வந்தபின் பலகாலம் வரையில் தாங்கள் கண்டு,

கேட்டு, அநுபவித்தவற்றைப்பற்றித் தங்களுக்குள்ளே விமரிசித்துப் பேசிக்கொள்வார்கள்.

தஞ்சை ஜில்லாவில் உள்ள மலைக்குடி என்ற கிராமத்தில் மிராசுதார் ஒருவர் வீட்டுக் கல்யாணத்திலே சிறந்த பாட்டுக் கச்சேரியும், உயர்ந்த மேளக் கச்சேரியும் நடக்கும் செய்தியைக் கேள்விப்பட்டதும் நாங்கள் நாலைந்து இளைஞர்கள் புறப்பட்டோம். அங்கே மகாராஜபுரம் விசுவநாத ஐயர் கச்சேரி என்று கேள்விப்பட்டிருந்தோம்.

மாலை நாலு மணி சுமாருக்கு 'ஜல் ஜல்' என்று சதங்கை ஒலி முழங்க, உயர்தரமான மேற்கத்திக் காளைகள் பூட்டிய அழகிய வில் வண்டி ஒன்று வேகமாக ஓடிவந்து கிராமத்திற்குள் நுழைந்தது. இசைக் கலைஞர்களை அழைத்துவர மங்கநல்லூர் ரெயிலடிக்குச் சென்றிருந்த வண்டி அது என்பது தெரிந்தது. வண்டிக்குள் கலைஞர்கள் அமர்ந்திருப்பதைக் கண்டோம்; களிநடம் போடலானோம்.

வண்டி மிராசுதார் வீட்டின் முன் நின்றது. கலைஞர்கள் இறங்கினார்கள். வாட்டசாட்டமான ஒருவரைச் சுட்டிக் காட்டி, "அதோ, அவர்தாம் மகாராஜபுரம்" என்றான் எங்கள் குழாத்தில் விஷயம் தெரிந்தவன்போல் பேசும் ஓர் இளைஞன்.

அங்கே போன பிறகுதான் மகாராஜபுரம் விசுவநாத ஐயர் கச்சேரி இல்லை என்பது தெரிந்தது; இதற்கு மாறாக அங்கே வந்திருந்தவர்கள் வாய்ப்பாட்டு வித்துவான் செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர்; வயலின் வித்துவான் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை; மிருதங்க வித்துவான் உமையாள்புரம் கோதண்டராம ஐயர் ஆகியவர்கள் என்பது விளங்கிற்று.

நாங்கள் குறிப்பாக எங்கள் அருகே இருந்த 'விஷயம் தெரிந்த' நண்பனைப் பார்த்தோம். அவன் அங்கிலையிலும் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளவில்லை. "அதற்கு என்ன செய்வது? ராஜமாணிக்கம் பிள்ளை வண்டியிலிருந்து இறங்குகிறபோது தொலைவிலிருந்து பார்த்த எனக்கு அவருடைய பின்புறம்—பிடரி, தலைமுடி முதலிய பிரதேசங்கள்—மகாராஜபுரத்தைப்போல் இருந்தன. அதனால்தான் சொன்னேன். அது என் பிழையா?" என்றான். இதற்குள் கலைஞர்கள் மேடையை அடையவும் எங்கள் பேச்சு நின்றது.

பந்தல் நிறைய, தெருவெங்கும் ஜனக் கூட்டம். வயது முதிர்ந்த ரசிகர்கள், 'அந்த நாட்களில்' தாங்கள் கேட்ட மகாவித்துவான்களைப்பற்றிப் பேசினார்கள். நடுத்தர வயதினர் 'இந்த நாட்களில்' தாங்கள் ரசித்து வரும் கலைஞர்களை விமரிசித்தார்கள். அங்கங்கே ஒரு சிலர் அப்போது மேடைமீது அமர்ந்துள்ள வித்துவான்களைப் புகழ்ந்தார்கள். இதை எல்லாம் கடந்து வேறு எது எதையோ பற்றிப் பேசினவர்களும் உண்டு. ஆனால் தம்பூரா ஒலிக்கத் தொடங்கினதுதான் தாமதம்; அனைவர் பேச்சும் 'கப்' என்று அடங்கிவிட்டது.

கச்சேரி தொடங்கிற்று. ரசிகர்களின் ஆனந்தத்திற்கு அளவே இல்லை. 'ஆகா! பலே! பேஷ்! சபாஷ்!' என்ற உற்சாக மொழிகள் உதிர்ந்தவண்ணம் இருந்தன.

'சக்கனி ராஜ மார்க்கமு', 'மாருபல்க', 'மானஸ சஞ்சரரே' முதலிய கிருதிகளையும், 'ஆசை முகம்' முதலிய பாடல்களையும் வித்துவான் சிறப்புத் தோன்றப் பாடினார்.

எனக்கு அப்போது இசைக் கலையைப்பற்றி அதிகம் தெரியாது. ஆனால் 'விவரம் தெரியாத ரசனை' என்று

ஒன்று உண்டல்லவா? அது என்னிடம் இருந்தது. வித்து வான்களின் புலமையை எடைபோடும் ஆற்றல் இல்லா விட்டாலும் அவர்கள் செயல் காந்தம்போல் என் மனத்தைக் கவர்ந்து இழுத்துக் கொண்டதை நன்கு உணர்ந்தேன். அன்று செம்மங்குடி பாடிய உருப் படிகள் சில இருபத்தேழு ஆண்டுகளுக்குப் பின் இன்றும் என் செவிகளில் புதுமை கமழ ஒலித்துக்கொண்டிருக் கின்றன.

அன்றைய கச்சேரியின் சிறப்புக்குக் கை கொடுக்கிற முறையில் ராஜமாணிக்கத்தின் வயலினும், கோதண்டராம ஐயருடைய மிருதங்கமும் செய்த வேலைப்பாடுகளை மறக் கவே முடியாது.

அனைத்துக்கும் மேலாக அன்று நான் ரசித்தது ராஜ மாணிக்கத்தின் வசீகரமான தோற்றம், முக பாவம், செய லாற்றும் முறை ஆகியவற்றைத்தான்.

அவர் தோற்றத்திலே பெரியமனிதத்தன்மை மிளிர்ந் தது. முகத்தில் இள முறுவலும் பெரு முறுவலும் ஒளிர்ந்தன. வில் போடும் முறையில், கடினமான இடங் களையும் வெகு அநாயாசமாக வாசிக்கும் செயலில் வியக்கத் தக்க லாகவமும் பிரமிக்கத்தக்க அழகும் இருந்தன. 'இப்படியெல்லாம் பாட வேண்டும்; இவ்வாறெல்லாம் வாசிக்கவேண்டும்'—என்று இளம் வித்துவான்களுக்கு உப தேசிப்பதுபோல் இருந்தது அவர் செயல்புரிந்த அழகு.

1930-இல் மலைக்குடி கிராமத்தில் முதல் முதலாகப் பார்த்த ராஜமாணிக்கத்தை அதன் பிறகு காணும் வாய்ப்பும் அவருடைய அற்புதமான வாசிப்பைக் கேட்டுக் களிக்கும் பேறும் கிடைத்துக்கொண்டே இருந்தன. நாளடைவில் இசைக் கலையை ஓரளவு வகையறிந்து ரசிக்கும் தன்மை

சிறுகச் சிறுக என்னிடம் வளரலாயிற்று. எங்கே கச்சேரிகள் நடந்தாலும் தவறாமல் போய்வரத் தொடங்கினேன்.

அப்போதெல்லாம் அநேகமாக எல்லா வித்துவான்களுடைய கச்சேரிகளிலும் ராஜமாணிக்கமே பக்கவாத்தியமாக வயலின் இசைத்து வருவதைக் கண்டேன். அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார், செம்பை வைத்தியநாத பாகவதர், மகாராஜபுரம் விசுவநாத ஐயர், முசிரி சுப்பிரமணிய ஐயர், செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர், ஜி.என். பாலசுப்பிரமணியம், ஆலத்தூர் சகோதரர்கள், மதுரை மணி ஐயர்—இப்படியாக அப்போது பிரபலமாக விளங்கிவந்த பெரிய வித்துவான்கள், இளம் வித்துவான்கள் இவர்களுக்குப் பெரும்பாலும் அவர்தாம் வாசித்துவந்தார்.

'எல்லாரும் இவரையே விரும்பி அழைக்கிறார்கள். அதுவே இவருடைய புலமையின் சிறப்புக்கும் ஒட்டிப் பழகும் தன்மையின் உயர்வுக்கும் சான்று' என எண்ணி மகிழ்வடைந்தேன்.

இசை உலகிலே சிறந்த தர்மம் ஒன்று அன்று முதல் இன்றளவும் வழி வழியாக வந்துகொண்டிருக்கிறது. புகழ் பெற்ற வாய்ப்பாட்டு வித்துவான்கள் முன்னுக்கு வந்து கொண்டிருக்கிற இளம் பக்க வாத்திய வித்துவான்களைத் தங்கள் கச்சேரிகளுக்கு அமைத்துக்கொண்டனர்; கூச்சமின்றி வாசிக்கச் செய்து, குறைகளைச் சுட்டிக்காட்டும் சுவடு தெரியாமல் சுட்டிக் காட்டித் திருத்தி உற்சாகத்தை வளர்த்து முன்னுக்குக் கொணர்வதை ஒரு கடமையாக மேற்கொண்டனர்; இதேபோல் பிரபல பக்கவாத்திய வித்துவான்களும் இளம் பாடகர்கள் விஷயத்திலே நடந்துகொண் டிருக்கிறார்கள். காலஞ்சென்ற இசைக்கலை

மேதைகள் கோனேரிராஜபுரம் வைத்தியநாத ஐயர், ராம நாதபுரம் ஸ்ரீநிவாச ஐயங்கார் (பூச்சி ஐயங்கார்), காயக சிகாமணி அரிகேசநல்லூர் முத்தையா பாகவதர், திருக் கோடிகாவல் கிருஷ்ணையர், மலைக்கோட்டை கோவிந்த சாமி பிள்ளை, புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை, பழனி முத்தையா பிள்ளை முதலியவர்களின் அரிய செயல் களை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

அடுத்த தலைமுறையிலும் இந்த நற்பணி தொடர்ந்து வந்திருக்கிறது. ராஜமாணிக்கம் பிள்ளையின் இளம் பிரா யத்தில் அவர் முன்னுக்குவர உதவியவர்கள் பலர்; அவர் முன்னுக்கு வந்தபின் அவரால் முன்னுக்குக் கொண்டுவரப் பெற்றவர்கள் பலர்.

உள்ளம் நிறைய அன்பையும் கலை நுட்பங்களையும் தேக்கி வைத்துக்கொண்டு சமகால வித்துவான்களோடும் வருங்கால வித்துவான்களோடும் ஒன்றிப் பழகி, முறை பிறழாது தொழில் ஆற்றிக் கலைக்குப் பெருஞ்சேவை செய்து வருபவர் ராஜமாணிக்கம் பிள்ளை. கலைஞர் உலகம், ரசிகர் உலகம், இரண்டிலும் சரி, தனி வாழ்க்கை யிலும் சரி, ராஜமாணிக்கத்தைக் குறைகூறுபவர் இல்லை. இதற்குக் காரணம் அன்பிலும், பண்பிலும், அறிவிலும், ஆற்றலிலும் அவர் சிறந்து விளங்குவதேயாகும்.

ராஜமாணிக்கத்தைக் கண்டு அவர் இசையைக் கேட்டது 1930-லேயே என்றாலும், அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு 25 வருஷங்களுக்குப் பிறகே எனக்குக் கிடைத்தது.

அப்போது (1955) நான் 'அரியக்குடி' நூலை உரு வாக்கிக்கொண்டிருந்தேன். ஐயங்காரைப்பற்றிய செய்தி களைச் சேகரம் செய்யும் முயற்சியில் ராஜமாணிக்கத்தைக்

காண நேர்ந்தது. அப்போது அகில இந்திய ரேடியோவில் சங்கீத சம்மேளன விழா நடைபெற்றுக் கொண்டிருந்தது. எம். எம். தண்டபாணி தேசிகருடைய கச்சேரியில் வயலின் இசைப்பதற்காக ராஜமாணிக்கம் சென்னை வந்திருந்தார்.

தேசிகர் அவருடைய இசை மாணவர். அதனால் அவர் எப்போது சென்னை வந்தாலும் தேசிகர் இல்லத்திலே தான் தங்குவார். சென்னை தியாகராய நகரில் தீனதயாளு தெருவில் இருக்கிறது தேசிகரின் இல்லம். அங்கேதான் நான் அவரைச் சந்தித்தேன்.

அப்போது அவர் உடல்நிலை அவ்வளவாகச் சுகமுடன் இல்லை. இடையில் சிலகாலம் அவரைப் பாராதிருந்த நான் இப்போது பார்த்ததும் திடுக்குற்றேன். முன்பு கண்ட நிலைக்கும் இப்போது காணும் நிலைக்கும் எத்தனை வித்தியாசம்! உடல் நலம் குன்றி முதிர்ச்சி தோன்றும் நிலையில் அவரைப் பார்த்ததும், அவருடைய வரலாற்றை விரைவாக எழுதி அவர் படித்து மகிழும்படி செய்யவேண்டும் என்கிற எண்ணம் என் உள்ளத்தில் எழுந்தது. ஐயங்காரைப்பற்றி அவர் சொல்லியவைகளைக் கேட்டு அறிந்தபின் என் உள்ளக் கிடக்கையை மெல்ல வெளியிட்டேன்.

அவர் முறுவல் பூத்தார். அது என்னை 1930-க்கு இட்டுச் சென்றது. விலை மதிப்பற்ற அவருடைய முறுவல் அன்று எப்படி மலர்ந்ததோ அப்படியேதான் இன்றும். உடலில்தான் அவர் தளர்ச்சியுற்றிருந்தாரே தவிர உள்ளம் தளரவில்லை என்பது தெரிந்தது. ஆற்றலில் தளர்ச்சி சிறிதும் இல்லை என்பதை அன்று இரவு நிகழ்ந்த ரேடியோ சங்கீத சம்மேளனக் கச்சேரியில் நிரூபித்துவிட்டார். அன்று அவர் வாசித்த ஆனந்தபைரவி! வெகு அநாயாசமாக அவர் பிடித்த அந்த அபூர்வமான பிடிகள்! எப்

போதோ அருமையாகச் சிலரிடத்திலே மட்டுமே கேட்கக் கூடிய கர்நாடக சுத்தமான வாசிப்பு! இவைகளைப் புகழ்ந்து கொண்டே இருக்கலாம்.

"கும்பகோணத்திற்கு வாருங்கள்; என் விருந்தின ராகத் தங்குங்கள். எல்லாம் பேசுவோம். இங்கே அவ காசம் மிகவும் குறைவு."

ராஜமாணிக்கத்தின் அன்பழைப்பைப் பெற்ற நான் சில நாட்களில் கும்பகோணம் சென்றேன். நாகேசுவர சுவாமி கோவில் வடக்கு வீதியிலே எதிர் எதிராக அழகிய இரு இல்லங்கள். இரண்டும் அவருடையவையே. நான் சென்றபோது அவர் தெற்குப் பார்த்த இல்லத்தில் ஓய் வெடுத்துக்கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் எல்லை யற்ற மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்தார்.

"சங்கீதம் பெரிய கடல்; பேரின்பமயமான அமுதக் கடல். நாதோபாசனையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருதி அதற்கே தங்கள் மெய், மனம், மொழி, உயிர், பொருள் அனைத்தையும் அர்ப்பணம் செய்த பெரியோர் பலர். அவர்கள் எல்லோரும் 'கடவுளின் அருள்' என்ற நல்முத்தைக் கண்டெடுக்க வேண்டி முத்துக் குளிக்கும் முறையில் இசைக் கடலில் இறங்கினவர்கள். செயலில் வெற்றியைக் காணாது பின்வாங்கினவர் பலர் என்றால் ஓரளவு வெற்றியைக் கண்டவர் ஒரு சிலர். முழு வெற்றி யையும் அடைந்தவர்களின் எண்ணிக்கை மிகச் சொற்பமே. ஆயினும் அத்துறையிலே தீவிர ஈடுபாடு கொண்டு கால மெல்லாம் கலைக்காகவே பாடுபட்டு மறைந்த எத்தனையோ மாணிக்கங்களைப்பற்றி நாம் கேள்விப்படுகிறோம். சிலரை அவர்களுடைய இறுதிக் காலத்திலாவது கண்டிருக்கிறோம். அவர்களுடைய ஆற்றலின் வலிமையை ஓரளவு உணர்ந்

திருக்கிறோம். அத்தகைய இன்னிசை மேதைகளின் புண்ணிய சரித்திரங்கள் நமக்கெல்லாம் வரப்பிரசாதம் ஆகும். அவர்களின் பிறப்பு, வளர்ப்பு, குருகுலவாசம், ஒழுக்கம், அவர்கள் இசை பயின்ற முறை, கலைபுரிந்த வகை, புகழ்பெற்ற நிலை ஆகியவை உலகம் அறிய வேண்டியவை. அத்தகைய மகான்களின் சரித்திரங்களை நூலாக உருவாக்குவதை விட்டு என் போன்ற சாமானியர்கள் விஷயத்தில் நீங்கள் கவனம் செலுத்துகிறீர்களே!''

அவர் நிறுத்தின பிறகு நான் சொன்னேன்: ''தகப்பன் மடியில் உட்காரும் பேற்றைப் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடுதான் கடவுளைக் குறித்துத் தவம் இயற்றக் காட்டுக்குச் சென்றான் சிறுவன் துருவன். செல்லும் வழியிலே நாரதர் எதிர்ப்பட்டார். தவம் செய்யும் வழி முறைகளை உபதேசித்தார். அத்துடன் அவன் நோக்கத்தில் பெரும் மாறுதலையும் உண்டுபண்ணினார். அதன் விளைவாக, கேவலம் தகப்பனின் மடியை நாடித் தவத்துக்குச் சென்ற அவன் கடவுளின் அருள் நிழலையே இடமாகப் பெற்றான். திட்டமின்றிச் செயலில் இறங்கினவன் நான். ஈடுபாடு கொண்டபின் தங்களைப் போன்ற இசையறிஞர்கள் ஒரு முகமாகக் கூறும் நல்லுரைகளின் சாராம்சம் இப்போது நீங்கள் கூறியதுதான் என்று உணருகிறேன். ஆனால் இதில் பெரும் சிரமம் இருக்கிறது. காலத்தின் வேகத்திற்கு இணையாக மனித சக்தி இயங்க முடியவில்லை. மறைந்த மாணிக்கங்களைப்பற்றி வரிசையிட்டு எழுதுவது கடினம். முன்னது, பின்னது என்ற பாகுபாடின்றி, கிடைக்கக்கூடிய செய்திகளைச் சேகரித்துத் தொகுத்து உருப்பெறும் வரலாறுகளை அவ்வப்போது வெளியிடலாம் என்பது என் கருத்து''—என்றேன்.

"சரிதான். ஆனால் அந்த வகையிலே பார்க்கப் போனாலும் இந்தத் தலைமுறையிலே கலையிலும், பண்பிலும், அறிவிலும், ஆற்றலிலும், வயசிலும், அநுபவத்திலும் முதிர்ந்த பெரியோர்கள் எவ்வளவோ பேர் இருக்கிறார்களே! உங்களோடு சேர்ந்துகொண்டு அத்தகைய பெரியோர்களுக்கு மரியாதை செலுத்த நான் ஆசைப்படுகிறேன்."

"பெரியவர்கள் அவை அடக்கமாக இப்படிப் பேசுவதைச் சில இடங்களில் நான் கேட்டிருக்கிறேன். இன்றைய தேதியில் தங்களைப் பெரிதும் மகிழ்விக்கும் கலைஞர்களைப் பற்றி மக்கள் அறிய ஆசைப்படுவது இயல்பேயாகும். அவர்கள் வரலாறுகளைச் சேகரம் செய்வதும் ஓரளவு எளிதே ஆகும். அந்த முறையில்தான் தங்களைப்பற்றிய விவரங்களை அறிய ஆசைப்படுகிறேன்" என்றேன்.

அவர் இணக்கம் தெரிவித்த அழகே அழகு! என் கூச்சம் எல்லாம் நீங்கி, அவர் சகஜபாவத்துடன் சொல்வனவற்றைக் கவனமாகக் கேட்கலானேன்.

# 1. பிறப்பு

**(1898)**

நீடாமங்கலத்துக்கு அருகே ஆலங்குடி என்று ஒரு கிராமம். தஞ்சை ஜில்லாவிலே ஒரே பெயரையுடைய கிராமங்கள் பல இருப்பதால் ஒவ்வொரு கிராமத்திற்கும் அடைமொழி சேர்த்துக் குறிப்பிடுவார்கள். நீடாமங்கலத்துக்கு அருகே உள்ளது 'பாக்குவெட்டி ஆலங்குடி.' அங்கே தயாராகும் சிறந்த பாக்குவெட்டிகள் அந்தப் பக்கங்களில் உள்ள ரெயில் நிலையங்களில் விற்கப்படுவதை இன்றும் காணலாம். பாக்குவெட்டிக்கு மட்டுமன்றி வயலின் வாத்திய வித்துவான், சங்கீத கலாநிதி, கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளைக்கும் பூர்விகமாக விளங்கும் பெருமை இந்த ஆலங்குடிக்கு உண்டு. அவர் அந்தக் கிராமத்தைப்பற்றிப் பெருமிதம் தோன்றக் குறிப்பிடுகிறார். இத்தனைக்கும் அவர் பிறப்பதற்குப் பலகாலம் முன்பே அவருடைய முன்னோர்கள் கும்பகோணத்துக்கு வந்து விட்டார்கள்.

அங்கு நாகேசுவரர் வடக்கு வீதியிலே அழகும் வசதிகளும் நிறைந்து எதிரெதிராக அமைந்தவை இரண்டு இல்லங்கள். இரண்டும் ராஜமாணிக்கத்திற்குச் சொந்தமானவை.

இசைவேளாளர் பரம்பரையைச் சார்ந்த அக்குடும்பத்திலே நாலைந்து குழந்தைகள் பிறந்து நிலைக்காமல் போய் விட்ட பிறகு ராஜமாணிக்கம் பிறந்தார். இதனால் அவர்

அக்குடும்பத்தில் அனைவருக்கும் மிகமிக அருமைச் செல்வம்.

அவர் பிறந்தநாள்: 1898-ஆம் வருடம், ஆகஸ்டு மாதம், ஐந்தாம் தேதி. தமிழில் விளம்பி ஆண்டு, ஆடித் திங்கள், 22-ஆம் நன்னாள்.

ராஜமாணிக்கத்தின் மூன்றாவது வயதில் அவர் அன்னையார் கமலத்தம்மாள் கண் மூடிவிட்டார். தாயில்லாக் குறை சிறிதும் தெரியாமல் தாயின் தமக்கையார் ரத்தினம்மாள் குழந்தையை மிக்க அருமை பெருமையுடன் போஷித்து வளர்த்தார். அவருடைய அரும்பெரும் முயற்சிகளால்தான் பின்னாட்களில் ராஜமாணிக்கம் உலகம் புகழும் கலைஞராக ஆனார். தம் பெரிய அன்னையைப் பற்றிப் பேசும்போது ராஜமாணிக்கம் தம்மையும் அறியாமல் அஞ்சலி செய்தார். அவர் கண்களில் நீர் வளையமிட்டது.

## 2. பிள்ளைப் பிராயம்

(1905)

குழந்தை ராஜமாணிக்கத்திற்கு உடல் பூஞ்சையாகவே இருந்தது. அதற்கு ஏற்ப இயல்புகளிலும் சாத்துவிகத் தன்மை நிறைந்திருந்தது. ஐந்தாவது பிராயத்தில் முறைப்படி அட்சராப்பியாசம் நடைபெற்றது. காலத்தில் பள்ளிக்குச் சென்று ஒழுங்காகப் படித்துவரத் தொடங்கிய பிள்ளையைக் கண்டு ரத்தினம்மாள் பெருமகிழ்ச்சி அடைந்தார். ராஜமாணிக்கம் அதிபுத்திசாலி. ஆசிரியர்கள் மெச்சிய மாணவன். பள்ளிப் படிப்போடு மகனுக்கு இசைக் கலையிலும் போதனை அளிக்கவேண்டும் என்று பெரியதாயார் கருதினார்.

# 3. இசைப் பயிற்சி

(1907)

ராஜமாணிக்கம் வளர்ந்துவந்த அதே வீதியில் கந்தசாமி பிள்ளை என்ற நாதசுரக்காரர் வசித்துவந்தார். ராஜமாணிக்கத்தின் இசைப் பயிற்சிப் பொறுப்பை ரத்தினம்மாள் அவரிடம் ஒப்படைத்தார். நல்லநாள் ஒன்றில் இசை ஆரம்பமாயிற்று. சரளி வரிசை, ஜண்டை வரிசை, அலங்கார வரிசை—என்று இப்படி ஓர் ஆண்டு கழிந்தது. ராஜமாணிக்கத்தின் உள்ளம் இசையின் அடிப்படைப் பயிற்சியில் நன்கு நனைந்து தெளிவு பெற்றது.

அந்த நாளில் கலைத் துறையிலே தனித் தனி அம்சங்களிலே சிறப்புடன் பிரகாசித்தவர் பலர். இசைக் கலையில் 'பல்லவி', 'தானம்', 'தில்லானா' முதலியன பாடுவதில் விசேஷ ஆற்றல் பெற்றவர்கள் இருந்திருக்கிறார்கள். கனம் கிருஷ்ணையர், கனசக்கரதான சுப்பையர், பல்லவி நரசிம்ம ஐயங்கார், பல்லவி நாராயணசாமி ஐயர்—என இப்படிப் பலர்.

கும்பகோணம் நாகேசுவரர் வடக்கு வீதியிலே ஒரு வீட்டிலே நாகலட்சுமி என்ற பெண்ணிற்கு முறையாக இசைப் பயிற்சி நடைபெற்று வந்தது. பயிற்சி அளித்து வந்தவர் பிரபல இசைக்கலை மேதை பல்லவி நாராயணசாமி ஐயர் அவர்கள்தாம். அவர் கும்பகோணத்திலேயே குடும்பத்துடன் ஜாகையாக இருந்து அந்தப் பெண்ணுக்கு இசை போதித்து வந்தார்.

அவருடைய ஊர் திருவிசை நல்லூர். அவர் உயர்ந்த பரம்பரையிலே தோன்றியவர். சிறந்த முறையிலே குருகுல வாசம் செய்தவர். நாதோபாசனையில் எந்நேரமும்

ஈடுபாடு உடையவராக வாழ்ந்துவந்தவர். கடினமான பல்லவிகளையும் அநாயாசமாகப் பாடும் ஆற்றல் கைவரப் பெற்றவர். வயலின் மகாவித்துவான் திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் போன்ற மேதைகள் பக்க வாத்தியம் இசைக்கத் தக்க யோக்கியதை உடையவர். அன்புக்கு அடிமையாகும் இயல்பினர். அந்த அன்பினாலேதான் நாகலட்சுமி என்ற பெண்ணுக்கு இசை போதித்து வந்தார்.

அவரிடம்தான் ராஜமாணிக்கத்தின் இசைக் கல்வியை ஒப்படைத்தார் ரத்தினம்மாள். அவரும் மிகப் பிரியத்தோடு போதிக்க இசைந்தது ராஜமாணிக்கத்தின் பெரும் பாக்கியம் என்றே சொல்லவேண்டும்.

அப்போது அவரிடம் பலர் இசை பயின்று வந்தார்கள். எனினும் ராஜமாணிக்கத்தினிடம் காணப்பெற்ற குருபக்தி, கிராஹ்ய சக்தி முதலிய நல்லம்சங்கள் அவருடைய உள்ளத்தை அதிகமாகக் கவர்ந்தன. கீதம், வர்ணங்கள் என மளமளவென்று பாடம் தொடர்ந்தது. இப்படி இரண்டு வருடகாலம். இதே சமயத்தில் பந்தணை நல்லூர் சின்னசாமி பிள்ளையிடமும் இசைப் பயிற்சி தொடர்ந்து நடைபெற்றது.

ரத்தினம்மாள் வீட்டில் பழைய காலத்து வயலின் ஒன்று இருந்தது. முந்தின தலைமுறையைச் சார்ந்த பெரியவர்கள் யாரோ கையாண்ட வயலின் அது. பெரிய மரப் பெட்டியில் பலவித தட்டுமுட்டுச் சாமான்களுடன் எங்கோ ஒரு புறமாகக் கிடந்த அது, ஒரு நாள் ராஜ மாணிக்கத்தின் கண்ணில் தற்செயலாகப்பட்டுவிட்டது. உடனே அதற்கு யோகம் பிறந்துவிட்டது. அதன் மேலே இருந்த தூசு நீக்கப்பெற்றது. நரம்புகள், புருடை

கள் சீர் செய்யப் பெற்றன. வேறொருபுறத்தில் கிடந்த வில்லும் சீர்பெற்றது. அவ்வளவுதான்; அது முதல் வில்லும், வயலினும் ராஜமாணிக்கத்தின் கரங்களில் ஏறிக் கொண்டன. 'கர்', 'புர்', 'மியாங்', 'கீச்', 'வீல்'—இப்படி விதம் விதமான சப்த ஜாலங்கள்! வீட்டில் இருப்பவர்களுக்குத் தலைவேதனை தாங்கவில்லை. எல்லாரும் வாயில் வந்தபடி திட்டத் தொடங்கினர். ஆனால் அந்தப் பனங்காட்டு நரி இந்தச் சலசலப்புக்குச் சற்றும் பின்வாங்கவில்லை. 'எங்கேயோ எண்ணெய் மழை பெய்கிறது' என்பதுபோல் ராஜமாணிக்கம் இருந்துவிட்டார்.

சில நாட்களில் வீட்டிலே தினசரி பழகிக்கொண்டிருப்பவர்களே ஆச்சரியப்பட்டுப் போனார்கள். ராஜமாணிக்கத்தின் செயலில் குறை நீங்கிவிட்டது. பிள்ளைப் பிராயத்தின் விளையாட்டு இயல்பினாலும் வாத்தியம் இசைப்பதிலே தோன்றிய அளவிறந்த ஆர்வத்தினாலும் ஆசான் இல்லாத அந்தப் பயிற்சியில்கூட விகாரமான சப்தங்கள் தேய்ந்து மறைந்து போயின. இசையின் சுஸ்வரங்கள் ஓரளவு ஒலிக்கத் தொடங்கின. 'வாய்ப்பாட்டுப் பயிலும் மாணவனாக இல்லை ராஜமாணிக்கம்; 'வயலின் சொல்லிக் கொள்ளும் மாணவன்', என்றே பிறர் கருதும்படி இருந்தது.

அப்போது கும்பகோணத்தில் வீராசாமி நாய்க்கர் என்பவர் சோதிடத்தில் தேர்ந்த புலமையுடன் விளங்கினார். அவர் முன்பு ராமநாதபுரம் சம்ஸ்தானத்தில் உத்தியோகம் வகித்துவந்தவர். ரத்தினம்மாளுக்குச் சோதிடத்தில்—அதிலும் நாய்க்கருடைய சோதிடத்தில்—அளவுகடந்த நம்பிக்கை. மகனுடைய சங்கீதம் இருபோக்கில் போவதைக் கண்டு குழப்பமடைந்த அந்த அம்மாள் மகனின் வருங்காலம்பற்றி அவரிடம் சோதிடம் கேட்க முற்பட்டார்.

"உங்கள் மகன் வருங்காலத்தில் இசைக்கலையில் நன்கு பிரகாசிப்பான்."

நாய்க்கரின் வாக்கு ரத்தினம்மாளின் உள்ளத்தைக் குளிர்வித்தது.

"ஆனால் அவன் வாத்திய இசையிலேதான் பிரகாசிப்பான் என்று தெரிகிறது."

ரத்தினம்மாள் திகைத்துப் போனார். "வாத்திய இசையிலா? வாய்ப்பாட்டில் இல்லையா?" என்று கேட்டார்.

"வாய்ப்பாட்டை விட வாத்தியத்திலேதான் அதிகமான புகழுக்கு இடம் இருக்கிறதம்மா" என்றார் நாய்க்கர்.

ரத்தினம்மாள் சிறிது மௌனம் சாதித்தார். பிறகு, "வாத்தியம் என்றால்...." என்று சற்று இழுத்தாற்போல் நிறுத்தினார்.

"இதோ சொல்கிறேன் அம்மா" என்று கூறியபடி நாய்க்கர் ஜாதகத்தை மேலும் ஆராய்ந்தார். பிறகு உறுதியான குரலில் சொன்னார்: "நரம்பு வாத்தியம்—பிடில் முதலிய ஏதாவது பயிற்றுவித்தல் நலம்."

"கடவுள் கட்டளை அதுவானால் அப்படியே ஏற்பாடு செய்கிறேன்" என்று கூறி விடை பெறக் கை கூப்பினார் அம்மாள். அவர் முகத் தோற்றத்தையும், தியக்கத்தையும் கவனித்த நாய்க்கர், "ஏன் அம்மா? என்ன யோசனை?" என்று கேட்டார்.

"ஒன்றும் இல்லை. பையனைச் சிறந்த வாய்ப்பாட்டு வித்துவானாக ஆக்கவேண்டும் என்பது என் விருப்பம்"—

"சோதிடம் வேறு செய்தியைக் கூறுகிறதே என்று குழப்பமா?"

"அதுமட்டுமில்லை; சில நாட்களாகப் பையனிடம் தோன்றி வளர்ந்துவரும் ஒரு மாறுதலும் சேர்ந்து என்னைக் குழம்ப வைக்கிறது."

"என்ன அது?"

ரத்தினம்மாள் ராஜமாணிக்கத்தின் வாத்தியத் திரு விளையாடல்களை எடுத்துச் சொன்னார். பிறகு, "ஆசான் இல்லாமல் அவன் பயின்று வரும் கலையைத் தக்க ஆசானைக் கொண்டு நல்ல முறையில் வளர்க்கவேண்டும்; கடவுள் அருளாலும் உங்களைப் போன்ற பெரியோர்களின் ஆசியாலும் அவன் முன்னுக்கு வந்து பிரகாசிக்க வேண்டும்!" என்று கூறி விடை பெற்று வீடு திரும்பினார்.

அது முதல் அவருடைய உள்ளத்தில் ராஜமாணிக்கத்தின் வயலின் பயிற்சி நினைவே இடம் கொண்டது. 'யாரைக் கொண்டு அதை நிறைவேற்றலாம்?' என்று தீவிரமாக எண்ணமிட்டபடி இருந்தார்.

மகனுக்காகத் தாம் தேர்ந்தெடுக்கும் ஆசிரியர் கலைத் துறையிலே சிறந்த பரம்பரையிலே வந்தவராக இருக்க வேண்டும் என அவர் கருதினார். 'இருக்கிற சொத்தில் பெரும் பகுதி செலவானாலும் சரி; மகன் இசைக்கலையிலே முன்னுக்கு வந்து சிறந்த புகழுடன் விளங்கவேண்டும்' என்று தீர்மானித்தார்.

## 4. வயலின் குரு பரம்பரை
**(1910)**

கும்பகோணம் நாகேசுவரர் வடக்கு வீதியில் சிவசுவாமி உடையார் என்ற தனிகர் வசித்து வந்தார். அவருக்குக் கர்நாடக இசைக் கலையில் பெரும் மதிப்பு உண்டு. தம் இல்லத்திலும், சுற்றத்தார், நட்பினர் இல்லங்களிலும்

நிகழும் வைபவங்களில் சிறந்த இசைக் கச்சேரி நடைபெற வேண்டும் என்று முனைந்து செயல் புரிந்து ஆனந்திப்பவர். குடும்பத்தில் தலையெடுக்கும் குழந்தைகளுக்குக் கல்வி முதலிய நற்போதனைகளோடு இயன்ற அளவு இசை ஞானத்தையும் புகட்டவேண்டும் என்ற ஆர்வம் நிரம்பியவர். அவருடைய குமாரி கிருஷ்ணவேணிக்குத் தக்க முறையில் இசைப் பயிற்சி செய்வித்து வந்தார்.

கர்நாடக சங்கீத உலகில் சென்ற தலைமுறையைச் சார்ந்த மகாவித்துவான்களில் திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் வாத்தியத் துறையில் இணையற்ற மேதை. அவர் அரும்பாடுபட்டுக் கலையை உபாசித்து உலகம் கொண்டாடும் புகழை எய்தினர். அதேபோல் பொருள் விஷயத்திலும் சற்றேனும் அலட்சிய புத்தி இல்லை. 'கலை சரசுவதிதேவியின் அருள்; செல்வம் லட்சுமி தேவியின் அருள். மனிதனுக்குப் புகழும் வேண்டும், பொருளும் வேண்டும். அவற்றில் சிறிது, பெரிது என்ற மாறுபாடு உதவாது'— இது அவர் கொள்கை.

புகழ் பெற்ற பெரிய சங்கீத வித்துவானை ஆதரிப்பது, யானையைக் கட்டித் தீனி போடுவதேயாகும். சிவசுவாமி உடையார் தம்முடைய பெண் கிருஷ்ணவேணிக்குத் திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் இசைப் பயிற்சி அளிக்க வேண்டும் என்று கருதினர். அவருடைய கோரிக்கைக்குக் கிருஷ்ணையர் மறுப்பின்றி இணங்கினர். வாரத்தில் இரண்டு அல்லது மூன்று நாள் திருக்கோடிகாவலிலிருந்து கும்பகோணத்திற்கு வந்து பாடம் நடத்திவந்தார். இரண்டு ஊர்களுக்கும் இடையே சுமார் பத்து மைல் இருக்கும்.

ஒரு நாள் உடையார் வீட்டுப் பாடம் முடிந்து கிருஷ்ணையர் ஊர் திரும்பும்போது நாகேசுவரர் வடக்கு வீதி

வழியே போய்கொண்டிருந்தார். அவர் காதில் வயலின் ஒலி கேட்டது; கவனித்தார். அது ரத்தினம்மாள் வீட்டி லிருந்து வந்ததை அறிந்தார். யாரோ சரளி வரிசை வாசிப்பதைக் கேட்டுத் தம் வழியே சென்றார்.

இப்படிச் சில தடவைகள் நடந்தன. ஒரு தடவை அவர் வரும்போது ரத்தினம்மாள் தம் வீட்டு வாசலில் நின்றுகொண்டிருந்தார். இவரைக் கண்டதும் அந்த அம்மாள் மரியாதையுடன் கரம் கூப்பி, சிரம் தாழ்த்தி வணங்கினார்.

கிருஷ்ணையர் நின்றார். அப்போதும் உள்ளே இருந்து வயலின் ஒலி வந்துகொண்டிருந்தது.

"ரத்தினம், யாரோ வயலின் வாசிக்கிறாற்போல் இருக் கிறதே?"

ரத்தினம்மாள் நகை முகத்துடன், "வாருங்கள்! கேட் டால் மட்டும் போதுமா? வாசிப்பவரை நேரிலும் பார்க்க வேண்டாமா?" என்றார்.

அப்போது அந்த அம்மாள் உள்ளத்தில் மின்னல் போல ஓர் எண்ணம் பளிச்சிட்டது: 'இந்தப்புண்ணியவான் மனம் வைத்தால் என்னுடைய கனவு நனவாகி, என் மகன் எப்பேர்ப்பட்ட உயர்வை எய்தலாம்?'

கிருஷ்ணையர், "ரெயிலுக்கு நாழிகை ஆகிவிட்டது" என்று மெல்லக் கூறிய வண்ணம் மெதுவாக நடந்து ரத்தி னம்மாள் வீட்டு வாயிற்படி ஏறினார். அதைக் கர்நாடக சங்கீத உலகத்துக்கு மிகவும் நல்லவேளை என்றே சொல்ல வேண்டும்.

விரைவாக முன்னே சென்ற ரத்தினம்மாள் விரிப்பை எடுத்துக் கூடத்தில் விரித்தார். தாம்பூலத் தட்டைக் கொணர்ந்து வைத்தார். கிருஷ்ணையர் விரிப்பில் அமர்ந்தார்.

ரத்தினம்மாள், வயலின் வாசித்துக்கொண்டிருந்த ராஜமாணிக்கத்தை அழைத்தார். "தம்பி, சீக்கிரம் எழுந்து வா. ஐயா காலிலே விழுந்து வணங்கு" என்றார்.

கிருஷ்ணையர் ராஜமாணிக்கத்தை நோக்கினார். "ஓ! இவன் வேலைதானா இது? பேஷ்! பேஷ்! தெருவிலே போகும்போதும் வரும்போதும் என் கவனத்தை இழுத்தவன் இவன்தானா? உம்...யாரிடம் சொல்லிக்கொள்கிறான்?" என்று கேட்டார். காலடியில் பணிந்து எழுந்த ராஜமாணிக்கத்தைக் கனிவோடு நோக்கினார்.

சிறிது தூரத்தில் அடக்க ஒடுக்கத்துடன் நின்றுகொண்டு ரத்தினம்மாள் சொன்னார்: "வாய்ப்பாட்டுச் சொல்லிக் கொடுக்கலாம் என்று பிரயத்தனம் செய்தேன்" என்று தொடங்கி நடந்தவற்றைக் கூறினார். "ஆசையினால் வயலினைத் தானாகவே இசைத்து வருகிறான்" என்று நிறுத்தினார்.

கிருஷ்ணையர் அவர்களுக்கு, 'பேஷ்! பேஷ்!' என்ற பாராட்டுச் சொற்கள் மூச்சுவிடுவது போல. இப்போதும் அதே மொழிகளைத்தான் உச்சரித்தார். "பேஷ்! பேஷ்! தானாகவே வித்துவான் ஆகப் பார்க்கிறானா?" இப்படிச் சொல்லி அவர் தமாஷாகச் சிரித்தார்.

"அப்படி எங்காவது உண்டா? என்னவோ சிறுவன், விளையாட்டாக ஏதோ செய்கிறான். உங்களைப் போன்ற மகானுடைய அருள் கிடைத்தால் அல்லவா அவன் ஆசையும் என் கனவும் நிறைவேறும்? ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு விநாடியும் தியானம் செய்துகொண்டே இருந்தேன்; என் தவம் இன்றுதான் பலித்தது. நீங்கள்தாம் குழந்தையின் கண்ணைத் திறந்துவிட வேண்டும்!"

"நானா?...."

"ஆம். நீங்களேதான்!"

கிருஷ்ணையர் சற்று நேரம் யோசித்தார். "கலையை விரும்பி யாசிப்பவர்களுக்கு இல்லை என்று சொல்வது பாவம். பையன் சூட்டிகையாகப் பயில்வான் என்று தோன்றுகிறது. நானும் வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் இங்கே வந்து போய்க்கொண்டுதான் இருக்கிறேன். என்னால் ஆனதைச் செய்கிறேன். கடவுள் துணை புரிவார்" என்று கிருஷ்ணையர் எழுந்தார்.

ராஜமாணிக்கத்திற்குப் போதிக்கவேண்டும் என்ற எண்ணம் கிருஷ்ணையர் உள்ளத்தில் நிறைந்துவிட்டது. பையனின் முகத் தோற்றமும், ஊகத்தினால் ஆற்றும் செயலும் அவர் மனத்தைக் கவர்ந்துவிட்டன. விரைவிலேயே நல்லநாள் ஒன்றைப் பார்த்துக்கொண்டு வந்து ராஜமாணிக்கத்திற்கு வயலின் பாடத்தைத் தொடங்கிவிட்டார்.

ராஜமாணிக்கத்தின் முயற்சிகளும் முன்னேற்றமும் அவரைப் பேராச்சரியத்தில் மூழ்கடித்தன. அவர் ரத்தினம்மாளிடம் ஒருநாள் சொன்னார்:

"ரத்தினம், எனக்கும் உன் மகனுக்கும் ஒத்து வராது என்று தோன்றுகிறது!"

ரத்தினம்மாள் திடுக்கிட்டார். "என்ன சொன்னீர்கள்?" என்று பதற்றத்துடன் கேட்டார்.

"எனக்கும் உன் மகனுக்கும் ஒத்து வராது என்று சொன்னேன்" என்று மீண்டும் அழுத்தம் திருத்தமாகக் கூறினார் கிருஷ்ணையர். அவரிடம் அழுத்தத்துக்கும் திருத்தத்துக்கும் குறைவே இல்லை.

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே?"

"புரியும்படி சொல்கிறேன், கேள். உன் மகன் நான் சொல்லிக்கொடுப்பதை அதே காரியமாக இருந்து உடனுக்குடன் சாதகம் செய்துவிடுகிறான். மறுநாளெல்லாம் வெறும் நாளாகப் போகிறது. நானோ மூன்று நாள் அல்லது நாலு நாளைக்கு ஒரு முறைதான் வருகிறேன். அவன் சாதகம் செய்கிற வேகத்துக்கு நான் சொல்லித்தரும் முறை போதாது. அவனுக்கென்றே ஒருவர் மெனக்கட வேண்டும். அப்படிச் செய்தால் நல்ல பலன் ஏற்படும் என்று தோன்றுகிறது. நானோ தினமும் வந்து மெனக்கடுவதற்கில்லை. அதனால்தான் சொன்னேன். புரிந்ததா?"

"விஷயம் புரிந்தது. பையன் சுறுசுறுப்பாகப் பயில்கிறான் என்பதில் சந்தோஷம்தான். ஆனால் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போல் நீங்கள் இப்படிச் சொன்னால் நான் என்ன செய்வது? நீங்கள்தான் தகுந்த வழியையும் சொல்லவேண்டும்!"

"சொல்லாமலா போகிறேன்? என் சிஷ்யர் ஒருவர் இருக்கிறார். கெட்டிக்காரர். அவரை அனுப்புகிறேன். நன்றாகச் சொல்லிக் கொடுப்பார். மாசம் அவருக்கு நாற்பது ரூபாய் கொடு. அந்தச் செலவு வீண் ஆகாது."

அம்மாள் மறுவார்த்தை பேசவில்லை.

திருக்கோடிகாவல் கிருஷ்ணையருக்குப் பல மாணவர்கள். அவருடைய மூத்த குமாரர் ராமையர், திருக்கோடிகாவல் ராமசுவாமி ஐயர், செம்மங்குடி நாராயணசாமி ஐயர், திருவாலங்காடு நீலகண்ட வாஜபேயர், தற்போது சென்னையில் வசிக்கும் எல். வேங்கடராமையர் முதலிய பலர்.

கிருஷ்ணையருக்குக் குமாரர் இருவர். மூத்தவரான ராமையர் தகப்பனாரிடம் நன்றாகக் கலையைப் பயின்றார்

இசையுலகின் பாக்கியக் குறைவினால் நெடுங்காலம் அவர் ஜீவித்திருக்கவில்லை. இளைய குமாரர் பெயர் ஸ்ரீநிவாச ஐயர். அவர் இசைக் கலையில் ஈடுபடவில்லை. குடும்பத்தின் பரம்பரை உத்தியோகமான கிராமப் பட்டாமணியத்தை மேற்கொண்டார். குடும்பப் பரிபாலனத்தையும் ஏற்றுக் கொண்டார். இன்றும் அவர் கிராமத்தில் சுகமே வாழ்ந்து வருகிறார். ராமையரின் மூத்த குமாரர் சுப்பிரமணிய ஐயர் சென்னையில் 'இந்து' பத்திரிகாலயத்தில் உத்தி யோகம் புரிந்து வருகிறார். இளையவரான கிருஷ்ண மூர்த்தி குடும்பப் பரம்பரைக் கலையில் ஈடுபாடு கொண்டிருக் கிறார். செம்மங்குடி நாராயணசாமி ஐயர் வகையில் அவ ரிடம் இசை பயின்றவரும் அவருடைய உறவினருமான செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர் இன்று புகழ்வானில் திகழ்ந்து கொண்டிருக்கிறார். திருவாலங்காடு நீலகண்டவாஜபேய ருடைய குமாரர் திருவாலங்காடு சுந்தரேச ஐயர் பிரபல வயலின் வித்துவானாக விளங்கி வருகிறார்.

கிருஷ்ணையர் ரத்தினம்மாளிடம் குறிப்பிட்டது திருக் கோடிகாவல் ராமசுவாமி ஐயரைத்தான். நல்ல நாளில் அவர் வந்து ராஜமாணிக்கத்திற்குப் பாடத்தைத் தொடங்கினார். குரு - மாணவர் இவர்கள் செயல் வளர்பிறைபோல் வெகு வேகமாக முன்னேறி வந்தது. அத்துடன் வாய்ப்பாட்டுப் பயிற்சியும் சாதமும் தொடர்ந்து வந்தன.

கிருஷ்ணையர் ரசனை அறிந்து உணவு கொள்பவர். சத்து நிறைந்த காய்கறிகளில் அவருக்குப் பெரும் மோகம். ரத்தினம்மாளுடைய வீட்டுத் தோட்டத்தில் சிறந்த காய்கறிகள் நிரம்பப் பயிராகும். அவற்றை அம்மாள் தாமே பறித்துக் குறை நீக்கிச் சமைப்பது வழக்கம். கிருஷ்ணையர் வந்து போய்க்கொண்டிருந்த நாட்களில், கறி

காய் பறிக்கும்போதெல்லாம் ரத்தினம்மாள், 'ஐயாவுக்கு இது மிகவும் பிடிக்கும்; இது பிடிக்கும்' என்று ஒவ்வொரு வர்க்கத்திலும் நிறைய எடுத்துச் சேர்த்து மூட்டை கட்டி விடுவார். ஐயருக்குச் சந்தோஷம் தாளாது. அவர் சாப்பிட்ட காய்கறிகளின் மணமும் சுவையும் ராஜமாணிக்கத்தின் வாத்தியத்தில் மிளிர்கின்றன என்றால் அது மிகையே இல்லை. இதைத் தவிர ரத்தினம்மாள் கிருஷ்ணையருக்கு வாரந்தோறும் ஐந்து ரூபாயும் கொடுத்துவந்தார்.

ரத்தினம்மாள் கிருஷ்ணையர் விஷயத்தில் மட்டுமே தான் இப்படி நடந்துகொண்டார் என்பதில்லை. அடுத்து வந்த ராமசுவாமி ஐயர் விஷயத்திலும் அதே வகையில் சாதுரியமாக நடந்துகொண்டார். கிருஷ்ணையர் விதித்த படி அவருக்கு மாதம் நாற்பது ரூபாய் கொடுத்தார். அது தவிர, ராமசுவாமி ஐயருடைய குடும்பத்து யோகக்ஷேமத்திற்கான சகல செலவுகளையும் தாமே செய்தார். வீட்டுக்குத் தேவையான உப்பு முதல் கற்பூரம் வரையில் உள்ள எல்லாப் பொருள்களையும் வழங்கி வந்தார். குருவின் மகிழ்ந்த உள்ளமே மாணவனுடைய நிறை சிறப்பு என்பதை ரத்தினம்மாளைப்போல் இன்னொருவர் அறிவது அரிது. அதுமட்டுமா?

ரத்தினம்மாள் தம் மகன்மீது எத்தனை வாத்ஸல்யம் வைத்திருந்தாரோ அத்தனைக்கு மகனின் முன்னேற்றத்தில் கருத்து உடையவராகவும் இருந்தார். புத்திர பாசத்தினால் கண்ணைக் கட்டிக்கொண்டு மகனின் வித்தை வளர்ச்சியில் குறை தோன்றவும் இடங் கொடுக்கமாட்டார்; மகனின் முன்னேற்றமே குறிக்கோள் என்ற முறையில் மகனைக் கொடுமையாக—இரக்கமற்ற தன்மையில் — நடத்தவும் மாட்டார்.

அதிகாலையில் எழுந்து சாதகம் செய்வது இசைப் பயிற்சி முறைக்கு இன்றியமையாதது. அதிகாலையில் உள்ளம் தெளிவாக இருக்கும்; புலன்கள் சுறுசுறுப்பாக இயங்கும். புத்தி மிகக் கூர்மையாக வேலை செய்யும். இந் நிலை சாதகத்திற்கு மிக அநுகூலத்தை அளிக்கவல்லது. இதனால்தான் விடியற்கால சாதகத்தை அநுபவமுள்ள பெரியோர்கள் வற்புறுத்துகின்றனர்.

ரத்தினம்மாள் விடியற்கால சாதகத்தின் உயர்வை நன்கு அறிந்திருந்தார். ஆகவே தம் மகனைத் தினசரி அதிகாலையில் எழுப்பிச் சாதகம் செய்ய வைக்கத் தவறுவ தில்லை. அயர்ந்து தூங்கும் மகனின் அருகே சென்று நின்று இரண்டு மூன்று முறை, "ராஜாத்தி, ராஜாத்தி!" என்று குரல் கொடுப்பார். மகன் தூக்கத்தில் ஏதோ உளறியபடி மறுபுறம் புரண்டு படுத்து மீண்டும் தூங்க ஆரம்பித்ததும் அம்மாளின் உள்ளத்திலே தாய்ப் பாசம் பாசிபோல் வந்து மூடிக்கொள்ளும். 'ஐயோ, பாவம்! குழந்தை அயர்ந்த தூக்கத்தில் இருக்கிறான்; தொந்தரவு கொடுத்து அவனைக் கசக்கிப் பிழியலாமா? இன்னும் சிறிது நேரம் தூங்கட்டும்; பிறகு வந்து எழுப்பலாம்' என்றெண் ணுவார். அலுவலைக் கவனிக்க நினைத்து அப்பாற் செல்லுவார். சென்றுகொண்டிருக்கிறபோதே மனம் மாறிவிடும். நிற்பார், யோசிப்பார்: 'சேசே. ஐந்தில் விளையாதது ஐம்பதில் விளையுமா? தூங்குகிற காலம் எங்கே ஓடிப்போய்விட்டது? பயிர் செய்யவேண்டிய பருவத்தைப் பாழ் ஆக்கிய குற்றம் நம்மை அல்லவா சாரும்? கேவலம் வாத்சல்ய உணர்வினால் முன்னேற வேண்டிய குழந்தை யைக் கெடுத்துக் குட்டிச்சுவர் ஆக்கக்கூடாது.'

எண்ணம் முடிவடையுமுன் அவர் திரும்பி விரைவாக நடப்பார்.

"ராஜா!.......ராஜா!........"

கணீரென்ற குரல் கேட்டு விழிப்படைந்த மகனுக்கு, அருகே தாயைக் கண்டதும் சிறிது அச்சம் தோன்றும். அதற்கு முக்கிய காரணம் இதுதான்: ரத்தினம்மாள் தம் மகனை எப்போதுமே 'ராஜாத்தி' என்றுதான் செல்வமாக அழைப்பார். வாத்சல்ய மிகுதியினால் பெற்றோர் சிலர் ஆண் குழந்தையைப் பெண்பாலாகவும் பெண் குழந்தையை ஆண்பாலாகவும் அழைப்பதுண்டு. ஆனால் கண்டிக்கிற வேளைகளில் இந்தப் பால் மாற்றம் நிலைக்காது. இந்த ரீதியில் ரத்தினம்மாள் மகனை 'ராஜா' என்று அழைத்தால் அது கோபக் குரல்—கண்டிதமான அழைப்பு—என்று பொருள்.

சட்டென்று படுக்கையினின்றும் எழுந்த மகன் பரபரவென்று கைகால் கழுவிக்கொண்டு வாத்தியமும் கையுமாகச் சாதகம் செய்ய அமர்ந்ததைக் கண்டதும் ரத்தினம்மாள் மெல்லச் சிரித்துக்கொள்வார். அப்பால் சென்று அலுவல்களைக் கவனிக்கத் தொடங்குவார். அவர் காலை வேலைகளை முடித்துக்கொண்டு மகன் சாதகம் செய்யும் இடத்திற்கு வருவதற்கும் ராஜமாணிக்கம் உஷத்கால மயக்கத்தில் கண் கிறங்கிய நிலையில் ஆடி விழுவதற்கும் சரியாக இருக்கும். அருகே அமர்ந்த தாய் அப்படியே மகனை மார்பின்மீது தாங்கிக்கொள்வார். சிறிது நேரம் ஆடாமல் அசையாமல் சிலைபோல் அமர்ந்திருந்து மகன் கண்வளர, ஓய்வு பெற வசதி அளிப்பார். பிறகு மெல்ல உசுப்பி எழுப்பி, வயிற்றுக்கு அளித்து மீளவும் சாதகம் செய்யத் தூண்டுவார்.

இந்த விவரமெல்லாம் பின் நாட்களில் ரத்தினம்மாளும் பிறரும் கூறி ராஜமாணிக்கம் பிள்ளை அறிந்தது.

அவர் இவற்றை உணர்ச்சி பூர்வமாகக் கூறி மேலும் சொல்கிறார்:

"என் பெரிய தாயார் எனக்காகப் பட்ட சிரமம் கொஞ்சநஞ்சமன்று. அந்தச் சிரமத்தை அவர் வகையறிந்து, முறை தெரிந்து பட்டது குறிப்பிடத்தக்கது. அவர் அன்று அப்படியெல்லாம் பொறுப்புடன் பாடுபடவில்லை என்றால் இன்று என்னை 'ராஜமாணிக்கமும் ஒரு புள்ளிதான்' என்று நாலுபேர் சொல்லும் நிலை ஏற்பட்டே இராது. என் பெரிய அன்னை என் முன்னேற்றத்திற்காக எடுத்துக்கொண்ட பெரு முயற்சி போல வேறு எந்தத் தாய்மாராவது தங்கள் மக்களுக்காக எடுத்துக்கொண்டிருப்பார்களா என்பது என்வரையில் சந்தேகந்தான்.

"ஒரு நாள் என் குரு எனக்கு இசை போதித்துக் கொண்டிருந்தார். அவர் கையில் வயலினும் வில்லும் இருந்தன; என் கையிலும் அதே மாதிரி வாத்தியமும் வில்லும் இருந்தன. அவர் வாசித்துக் காண்பிக்கக் காண்பிக்க நான் வாசித்துப் பயின்று வந்தேன்.

"சற்று சிரமான ஓர் இடம். எனக்கு அது லேசில் வரவில்லை. அவர் பொறுமையோடு பலமுறை போதித்தும், நான் அக்கறையோடு எவ்வளவோ முயன்றும் அன்று அந்த இடம் எங்களிடையே பெருத்த சோதனையாக அமைந்தது. அவரும் எவ்வளவுதான் பொறுப்பார்? கோபம் தாங்க முடியவில்லை. என்னை அடிக்க இரண்டு மூன்று முறை வில் பிடித்த கையை ஓங்கிய அவர் நாலாவது தடவையில் அடித்தேவிட்டார்! என் தலையில் 'படீ'ரென்று தாக்கிய அவர் வில் 'மளக்'கென்று பாதியில் முறிந்து விட்டது. முறிந்த ஒரு பகுதியின் முனை நெற்றியிலே சரக்கென்று பாய்ந்துவிட்டது. என் குரு ஒடிந்த வில்லைப்

பிடித்து இழுத்தார். என் நெற்றியிலிருந்து ரத்தம் பீறிட்டது. அவர் மடியிலே சில துளிகள்! அதைப் பார்க்கும் வரையில் எனக்கு வலியோ, பயமோ தோன்றவில்லை. பார்த்த பின் தலை கிறுகிறுத்தது. தொலைவில் நின்றிருந்த என் அன்னையார் சோர்ந்து சுவரில் சாய்ந்துவிட்டார்.

"குரு என்னை நோக்கினார். பிறகு என் தாயை நோக்கினார். அவருக்கு ஆத்திரமே அதிகரித்தது. படபடவென்று பேசினார்.

" 'என்ன அம்மா? ஒரே அடியாக மாய்ந்து போகிறாயே? உன் பிள்ளையை இப்போது யார் என்ன செய்துவிட்டார்கள்?' என்றார்.

"என் தாய் குனிந்த தலை நிமிரவில்லை. ஒரு மாதிரியாக மெல்ல நகைத்தார். 'நான் ஒன்றுமே சொல்லவில்லையே? வாய் திறக்கவே இல்லையே?' என்று மெல்லக் கூறியபடி உள்ளே சென்றார். பிறகு குரு இருப்பிடத்திற்குப் புறப்பட்டபோதுதான் வெளியே வந்தார். அப்போது என் குருவுக்கும் கோபம் தணிந்திருந்தது; என் அன்னைக்கும் மன வேதனை குறைந்திருந்தது; என் நெற்றியிலும் ரத்தக் கசிவு நின்று நான் சிரித்த முகத்துடன் இருந்தேன். அப்போது என் குரு சொன்னார்:

" 'வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் ஆற்று நீர் அணையால் தேக்கப்பட்டது போல, கொடுக்கும் விஷயங்களை நன்கு மனத்தில் வாங்கிக்கொண்டு தங்கு தடை இன்றிப் பயின்றுவரும் பையனிடம் இன்று தோற்றிய விபரீதத் தடைப்பாடு எனக்கு ஆத்திரத்தை உண்டுபண்ணிவிட்டது. என்ன செய்கிறோம் என்பதை எண்ணிப் பாராமலே காரியத்தைச் செய்துவிட்டேன். இப்போது எனக்கே மனசுக்

குக் கஷ்டமாக இருக்கிறது. உனக்கு மிகவும் வருத்த மாகத்தான் இருக்கும்' என்றார்.

" 'அடாடா! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். தம்பிமேல் உங்களுக்கு ஏதாவது வருத்தமா? அவன் நன்றாக இருப்பதற்காகத்தானே இவ்வளவு பாடும்? உண்மையான அன்பும் அக்கறையும் உள்ளவர்கள் செயல் இப்படித்தான் இருக்கும். மற்றவர்கள் நமக்கென்ன என்று போய்விடுவார்கள். கேட்டதில்லையா, 'அடித்து வளர்க்காத பிள்ளையும், முறுக்கி வளர்க்காத மீசையும் பிரயோசனம் இல்லை' என்று? எனக்கு இதில் துளிக்கூட வருத்தம் இல்லை. நீங்களும் கொஞ்சங்கூடச் சஞ்சலப்பட வேண்டாம்' என்றார் என் அன்னையார்.

"இப்படி என் குருகுலவாச காலத்தில் எத்தனையோ நிகழ்ச்சிகள். அனைத்திற்கும் ஈடு கொடுத்து என்னை ஆளாக்கி வைத்த என் அன்னையாரின் செயலையும் அருளை யும் நான் என்னென்று கூற?" என்று கண்களில் நீர் சோரக் கூறுகிறார் ராஜமாணிக்கம் பிள்ளை.

சுற்று வட்டாரத்து அன்பர்கள் ராஜமாணிக்கத்தின் இசை வளர்ச்சியை உணரத் தொடங்கினர். சிலர் கச்சேரி செய்ய அழைத்தார்கள்; வாய்ப்பாட்டுக் கச்சேரிக்குத்தான். அந்தத் துறையிலும் ராஜமாணிக்கத்திற்கு அத்தனை முன்னேற்றம் கிட்டி இருந்தது. அன்பர்களின் அழைப்பை மறுக்க மனமில்லாமல் ராஜமாணிக்கம் சில இடங்களுக்குச் சென்று 'பாடிவிட்டு' வந்தார்.

சிலரிடம் ஒரு பழக்கத்தை இன்றும் நாம் காணலாம். அவர்கள் தங்கள் மேடை நிகழ்ச்சிகளை, 'கச்சேரி' என்று குறிப்பிட மாட்டார்கள். 'பாட்டு' என்றுதான் குறிப்பிடு வார்கள். அதாவது, 'நேற்று அந்த ஊரில் கச்சேரி செய்

தேன்' என்று சொல்லாமல், 'நேற்று அந்த ஊரில் பாடினேன்' என்றுதான் சொல்வார்கள். கச்சேரி என்ற செயலுக்குச் சில லட்சணங்கள் இருந்து வருகின்றன. அவை சென்ற இரண்டு தலைமுறைகளாக வித்துவான்களால் அநுஷ்டிக்கப்பட்டு வருபவை. தங்கள் செயலில் அந்த லட்சணங்களில் எந்த அம்சமாவது குறைவுபட்டு இருக்குமோ என்கிற நினைவே தங்கள் செயலைக் 'கச்சேரி' என்று அவர்கள் கூறுமைக்குக் காரணம்.

வயலின் வித்தியார்த்தியான ராஜமாணிக்கம் வாய்ப்பாட்டுத் துறையில் ஓரளவு முன்னேறிச் சில இடங்களில் மேடைமேல் அமர்ந்து செயல் புரிந்தாலும், அதை அவர் 'கச்சேரி' என்று குறிப்பிடுவதில்லை; 'சில இடங்களில் பாடினேன்' என்றுதான் குறிப்பிடுகிறார்.

இதற்கெல்லாம் முதலில் அரை மனத்துடன்தான் ராமசுவாமி ஐயர் அநுமதி அளித்தார். பிறகு அதை அறவே தடுத்துவிட்டார். "இரண்டு செயல்களில் ஒருவர் ஈடுபாடு கொண்டு இரண்டிலும் பிரகாசிப்பது மிக மிகக் கடினம். இரண்டிலும் அரைகுறைத் தேர்ச்சிதான் வரும். ஏதாவது ஒன்றில் பிரகாசிக்க வேண்டும் என்றால் மற்றொன்றின் தொடர்பை விட்டுவிட வேண்டும்!" என்றார்.

அன்றோடு ராஜமாணிக்கம் வாய்ப்பாட்டுக் கச்சேரி செய்வதை விட்டுவிட்டார். ஆனால் வாய்ப்பாட்டினிடம் உள்ள மதிப்பும் ஆர்வமும் பக்தியும் அவர் மனத்தினின்று விட்டு அகலவே இல்லை.

வயலின் வாசிப்பவர், தாளவாத்தியங்களைக் கையாள்பவர் அனைவருமே வாய்ப்பாட்டை நன்றாகப் பயின்றிருப்பது மிகவும் நலம். வாத்தியங்களை எவ்வளவுதான்

திறமையாகக் கையாண்டு ரசிகர்கள் உள்ளத்தில் இன்பம் எழச் செய்தாலும் அந்தச் செயல் சாரீரத்தின் வழி உருப் பெற்று ஆட்சிபுரியும் இன்னிசைக்கு அடுத்த ஸ்தானத் தைத்தான் பெறும். வாத்தியங்களில் பாவபூர்வமாக இசையை வடித்தெடுக்க வாய்ப்பாட்டுப் பயிற்சி இன்றி யமையாத சாதனமாகும்.

ராமஸ்வாமி ஐயர் இந்த உண்மையை அறிந்தே இருந் தார். அதனால்தான் ராஜமாணிக்கத்திற்கு வாய்ப்பாட்டின் மீதுள்ள பிடிப்பை அவர் தளர்த்த முயலவில்லை; வாய்ப் பாட்டுக் கச்சேரி செய்வதை மட்டுமே தடுத்தார். இதனால் ராஜமாணிக்கம் பெரிய நன்மையையே அடைந்திருக் கிறார்.

இப்படியாக நாலு வருட காலம் திருக்கோடிகாவல் ராமசுவாமி ஐயரிடம் குருகுல வாசம் செய்து ராஜமாணிக் கம் வயலினில் சிறந்த தேர்ச்சி பெற்றார்.

"நான் சொல்லித்தர வேண்டியவைகளைச் சொல்லிக் கொடுத்துவிட்டேன். இனிமேல் சாதக பலத்தினாலும் கேள்வியறிவினாலும் ஞானத்தை மேலும் அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டியதுதான். கடவுள் உன்னைக் காப்பாற்று வார். அனைவரிடமும் விநயமாக நடந்துகொள். அனை வரின் அன்பையும் பெற்று மேன்மையாக நீ வாழ்வா யாக!"

ராமஸ்வாமி ஐயர் இப்படி ஒருநாள் தம் உள்ளத்தைத் திறந்து பேசி மாணவனை வாழ்த்தினார். ரத்தினம்மாள் பெரு மகிழ்ச்சி பெற்றார். குருவின் அருளாசியை முன் னிட்டுக்கொண்டு மகனின் கலையை அரங்கேற்றத் தக்க ஏற்பாடுகளைச் செய்யலானார்.

# 5. அரங்கேற்றம்

(1915)

அன்று ஆலங்குடிக் கிராமம் அல்லோல கல்லோலப் பட்டது. ஊரில் உள்ள ஒவ்வொரு தெருவிலும் வீட்டிலும் ஒவ்வொரு மனிதரிடமும் உற்சாகம் துளும்பிக்கொண் டிருந்தது. அங்கு ஆலயத்தில் எழுந்தருளி இருக்கும் முருகப் பெருமானும் கூட அந்த ஆனந்தத்திலே பங்கு கொண்டவராகக் காட்சி அளித்தார்.

ஆலயம் துப்புரவாக்கப்பட்டு விதவிதமான வண்ணத் தோரணங்களாலும், சித்திரச் சீலைகளாலும், செம்மண் குழம்பாலும் நன்கு அலங்கரிக்கப்பெற்றுப் பார்ப்பதற்கு வெகு ரமணீயமாக விளங்கிற்று. ஆண்டவன் சந்நிதியில் அபிஷேகப் பொருள்களும், பழ வர்க்கங்களும், நிவேதனப் பொருள்களும், மலர்மாலைகளும், புஷ்பக் குவியல்களும் நிறைந்திருந்தன. வத்திப் புகையின் நறுமணம் எங்கும் கமழ்ந்து கொண்டிருந்தது.

எல்லாம் தயாராக இருந்தன. கோயில் சிப்பந்திகள் தத்தம் அலுவல்களில் அக்கறை கொண்டு ஜரூராகப் பணி ஆற்றியவண்ணம் இருந்தனர். சுற்றமும் நட்பும் சூழ ரத்தினம்மாளும் ராஜமாணிக்கமும் ஆலயத்திற்கு வந்தனர். ஆலாட்சி மணி 'டணார், டணார்' என்று ஒலிக்கத் தொடங் கிற்று. மங்கள வாத்தியம் முழங்கலாயிற்று. அர்ச்சகர் ஆண்டவனுக்கு அபிடேக ஆராதனைகளைச் செய்து முடித் தார். சந்நிதியிலே பக்தர்கள் குழுமி நின்றனர். கற்பூர ஆராதனை நடந்தது. அணியும், தங்கப்பணியும், பட்டுத் துணியும், மரகத மணியுமாய் வள்ளி தேவசேனை சமேத ராய் முருகன் காட்சி கொடுத்தார். அருள் முறுவல் பூத்த

அவர் முகத்தைக் கற்பூர ஜோதி மண்டலத்தின் வழி தரி சித்த பக்தர்கள் மெய்ம்மறந்து, "வேல் முருகனுக்கு அரகரோகரா!" என்று இட்ட கோஷம் வான் முகட்டை எட்டிற்று!

அபிஷேகம் முதலியன செய்து விபூதி, குங்குமம், சந்தனம், மலர்ச் சரம் முதலியன சார்த்தி முருகனின் அண்மையில் வைக்கப்பெற்றிருந்த நீண்ட வெள்ளிவேல் படையை எடுத்து அர்ச்சகர் மிகுந்த பக்தியுடன் முரு கனுக்குக் காணிக்கை ஆக்கினார். மறுபடியும் ஒரு முறை கற்பூர ஆரத்தி நடந்தது.

ரத்தினம்மாளுடைய அழைப்பின்பேரில் அவ்விடத் திற்கு விஜயம் செய்திருந்த ராமசுவாமி ஐயர் அவ்விடத்து நிகழ்ச்சிகளைக் கண்டு உள்ளம் பூரித்தார். ராஜமாணிக்கம் தாயின் கட்டளைப்படி வேல்முருகனை வணங்கினார். பின் னர்த் தாய் அளித்த தாம்பூலத் தட்டைப் பெற்றார். குருவை நெருங்கினார். தட்டை அவர் பாதத்தில் சமர்ப் பித்து நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். தட்டிலே தாம்பூலம், பழம், புஷ்பம், பட்டாடை முதலிய வற்றோடு ருத்திராட்சம் இணைக்கப் பெற்ற அழகிய தங்கச் சங்கிலி ஒன்று இருந்தது. காணிக்கையை ஏற்ற குரு நிறைந்த உள்ளத்துடன் தம் சீடனை ஆசீர்வதித்து அருளினார்.

ஆலய நிகழ்ச்சிகள் காலையில் முடிவடைந்தன. பகலில் பஞ்ச பட்சிய பரமான்னங்களுடன் பிராம்மண சந்தர்ப் பணை நடைபெற்றது. வந்தவர்களுக்கெல்லாம் அறு சுவை உண்டி. நன்கு கவனித்து எல்லாம் செய்யும்படி ரத்தினம்மாள் ஏற்பாடு செய்திருந்தார். அந்தணர்கள் வயிறார உண்டு மனம் நிறைந்த மகிழ்ச்சியுடன் வாயார

வாழ்த்தி அருளினர்; தாம்பூல தட்சிணை பெற்று ஓய்வு எடுத்துக்கொண்டனர்.

ஆலயத்தின் எதிரே ஆண்டவன் சந்நிதியிலே விஸ்தாரமான பந்தல் நிறுவப்பெற்றிருந்தது. மாலையில் அங்கே அந்த ஊர் மக்கள், பக்கத்து ஊர்களில் வாழும் ரசிகப் பெருமக்கள் அனைவரும் குழுமினர். ரத்தினம்மாள், ராஜமாணிக்கம், அவருடைய குரு ராமசுவாமி ஐயர், மற்றும் சுற்றத்தார், நட்பினர் அனைவரும் அந்தப் பந்தலுக்குச் சென்றனர்.

பந்தலில் நிகழ்ச்சி மேடை ஒன்று அமைக்கப்பெற்றிருந்தது. அர்ச்சகர் ஆண்டவனுக்குக் கற்பூர ஆரத்தி நடத்தினர். அனைவரும் தரிசித்தனர். மேடையின் எதிரே ராமசுவாமி ஐயர் முதலிய பெரியோர்கள் அமர்ந்தனர். மற்றவர்களும் அமர்ந்தார்கள்.

ராஜமாணிக்கம் ஆண்டவனைப் பணிந்தார். அன்னையை வணங்கினர். குருவை நமஸ்கரித்தார். தெய்வம், தாய், குரு, மற்றும் பெரியோர்கள் அனைவருடைய ஆசியுடன் மேடையை அணுகினர். அதைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டார். பிறகு அதன் மீது ஏறி நின்று அவைக்கு அஞ்சலி செய்தார். அடக்கமாக அமர்ந்தார். குருவை நோக்கினர். அவர் முகமலர்ச்சியுடன், "ஆரம்பிக்கலாமே!" என்றார்.

சுருதி ஒலித்தது. மிருதங்கக்காரர் மங்களகரமாகச் சாப்புக் கொடுத்தார். ராஜமாணிக்கம் பயபக்தி விநயத்துடன் வயலினைக் கரத்தில் தாங்கி வில்லைப் போட்டார். வர்ணம், விநாயகர், கலைவாணி, முருகன் துதிகள். ஒரு மத்திம காலக் கீர்த்தனை, பிறகு ராக ஆலாபனை—இப்படியாகக் கச்சேரி ஜிலுஜிலுவென்று நடைபெறலாயிற்று.

மகனின் செயல் கண்டு தாய் உள்ளம் பூரித்தார். சிஷ்யனின் ஆற்றல் கண்டு குரு மன மகிழ்ந்தார். தம் ஊரைச் சார்ந்த இளைஞன் இவ்வளவு கலைச் சிறப்புப் பெற்றிருக்கிறானே என்று ஆலங்குடியார் அனைவரும் ஆனந்தம் எய்தினர். ஆலயத்தினுள் அமர்ந்திருக்கும் ஆண்டவன் கூட, சுஸ்வரமான நல்லிசை கேட்டு உவகை கொண்டு மோன மந்தகாசம் புரிந்திருக்க வேண்டும்.

இப்படியாக மிகச் சிறப்புடன் நிறைவேறியது ராஜமாணிக்கத்தின் வயலின் வாத்திய அரங்கேற்றம். இந்தச் செய்தி, முன்னாலும் பின்னாலும் பல இடங்களுக்கும் பரவியதால் அரங்கேற்றம் ஆன சில நாட்களிலேயே ராஜமாணிக்கத்திற்குக் கச்சேரி அழைப்புகள் வரத் தொடங்கி விட்டன. அவரும் ஆர்வத்தோடு சென்று கச்சேரிகள் செய்து வந்தார்.

"அப்பா ராஜமாணிக்கம், மனிதனுக்குப் புகழும் பொருளும் இரு கண்களைப் போல. என்றாலும் அதில் ஒரு பாகுபாடு உண்டு. வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது என்ற நோக்கில் அது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு மனிதன் பாடுபடுவானேயாகில் அந்த முயற்சியின் பயனாக ஓரளவு பொருளைப் பெறலாம்; நாளடைவில் புகழ் இல்லாதவரைக் கலையுலகம் கைவிட்டு விடும். அதனால் வருவாய் குறையும். சேமித்த பொருளும் செலவழிந்துவிடும். பின்னாட்களில் கலைஞன் காண்பது கஷ்டமே. இதற்கு மாறாக, ஒருவர் பொருளாசையை மனத்தினின்றும் ஒதுக்கி வைத்து உண்மைப் புகழ் ஒன்றையே லட்சியமாகக் கொண்டு பக்தியுடனும், நேர்மையுடனும் செயலாற்றினால் சிறுகச் சிறுகச் சேரும் புகழ் மலையாய் வளரும். பொருள் தன்னால் வந்து சேரும். அப்

படிச் சேருகிற பொருள்தான் நிலைக்கும். பெரிய தனிகர் ஒருவர் அளிக்கும் அளவற்ற பொருளைக் காட்டிலும் பரம ஏழையான மகா மேதை ஒருவரின் சில சொற்கள்,— 'அப்பா, உனக்கு நல்ல ஞானம் இருக்கிறது; நன்றாகச் செயல் ஆற்றுகிறாய்; நீ வாழ்க!' என்ற சொற்கள்—விலையற்ற மாணிக்கங்கள் ஆகும். இதை நீ மறவாதே. கச்சேரிக்கு என்று அழைத்தால் சம்மானம் என்ன என்பதை மறந்து விடு. அழைப்பவர் யார், கச்சேரி நிகழப் போகும் இடம் எது என்பவற்றையும் மறந்துவிடு. எந்த இடமானாலும், யார் அழைத்தாலும், ஆர்வத்துடன் போய்ச் செயல் புரி. இன்று மட்டுமல்ல; மூச்சு உள்ள வரையில் உண்மைப் புகழுக்கே பாடுபடு."

இதுதான் ராஜமாணிக்கத்திற்குக் குரு அருளிய நல்லுபதேசம். அதன்படியே ராஜமாணிக்கம் நடந்து கொள்ளத் தொடங்கினார்.

## 6. பெரியார் தொடர்பு

(1916)

இசைக் கலையில் அதிகமான ஈடுபாடு கொண்ட ராஜமாணிக்கம் மூன்றாவது பாரத்தோடு பள்ளிப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தார்; அரங்கேற்றத்திற்குப் பின் அவருடைய உள்ளம் இசையிலேயே தோய்ந்து கிடந்தது. வீட்டிலே எந்நேரமும் வயலின் சாதகமும் வாய்ப் பாட்டுப் பயிற்சியும்; வெளியிலே கச்சேரி செய்வதும் கேட்பதும்—இப்படி ஓடிக்கொண்டிருந்தது காலம்.

ராமசுவாமி ஐயர் உடல் நலிவுற்றார். வீட்டினின்றும் அதிகமாக வெளியே நடமாட முடியாத நிலை ஏற்பட்டது. ராஜமாணிக்கம் அடிக்கடி அவரைப் போய்ப் பார்த்து வந்

தார்; தம்முடைய கலை வளர்ச்சியைப் பற்றிய செய்திகளை அவ்வப்போது தெரிவித்து வந்தார்.

அந்திம காலத்தை நெருங்கிக் கொண்டிருந்த ராம சுவாமி ஐயருக்கு மற்ற நினைவுகள் மறைந்தன; மாணவ னின் அன்பும் புகழும் கலை ஆர்வமுமே உள்ளத்தில் நிறைந் தன. ஒரு நாள் மாணவனை அருகே இருத்திக்கொண்டு அன்பும் அருளும் செறிந்த வார்த்தைகள் சில பேசினார். ராஜமாணிக்கம் கண்களில் நீர் துளும்ப அனைத்தையும் பக்தியோடு கேட்டு மனத்தில் பதித்துக் கொண்டார்.

★

பல காலம் வரையில் ராஜமாணிக்கம் தனிமையில் இருந்து, மறைந்து போன தம் குருவை நினைந்து கண்ணீர் உகுத்த வண்ணம் இருந்தார். அவருக்கும் தமக்கும் அறி முகம் ஏற்பட்ட நாள் முதல் குருவின் இறுதிக்காலம் வரை நிகழ்ந்த ஒவ்வொரு சம்பவத்தையும் எண்ணி எண்ணி உள்ளம் உருகினார். குருவின் அன்பையும், அருளையும் நினைத்து நினைத்துப் பெருமூச்செறிந்தார். 'அவரால் அல்லவா நான் மனிதன் ஆனேன்?' என ஒவ்வொரு கண மும் எண்ணமிட்டார். 'இனிமேல் அவரைப் போல் என்னை அரவணைத்தும் அடித்தும் அன்புப் பால் புகட்ட யார் இருக்கிறார்கள்?' என்று அரற்றினார். ஒவ்வொரு நாளும் அதிகாலையில் படுக்கையைவிட்டு எழும்போதும், இரவு படுக்கும்போதும் தவறாமல் குருவை நினைந்து அஞ்சலி செய்வார். அவருடைய குருபக்தி வீண் போகவில்லை.

கும்பகோணத்தில் வாழ்ந்து வந்த வேணுகான மேதை நாகராஜராவ் கர்நாடக சங்கீத உலகில் குன்றாத புகழைப் பெற்றவர். அவருடைய இசைப் புலமை எல்லோராலும் கொண்டாடத்தக்கது; வித்துவான்கள் பிரமிக்கத்தக்கது.

நுட்பமான, அரியபெரிய விஷயங்களை எல்லாம் உணர்ந்திருந்த அவரைக் கலைஞர்கள் இசைக் கலையின் ஆதரிச புருஷராக மதித்தனர். கலை சம்பந்தமாக எழக்கூடிய சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ளப் பலரும் அவரை நாடிச் செல்வதுண்டு. அவரும் சற்றும் பிகுச் செய்து கொள்ளாமல் வந்தவர்களை அன்புடன் வரவேற்று, இன்பமாகப் பேசி, பேச்சு வாக்கிலேயே வெகு லலிதமாக அவர்கள் கோரி வந்த சந்தேகத்தைத் தெளிவுபடுத்தி வைப்பார்.

அவர் கையாண்ட வாத்தியத்தின் சிறப்பை நாளெல்லாம் வியந்து பாராட்டலாம். கனம், நயம், சுருதி சுத்தம், சுஸ்வரம், பிருகாப் பொழிவு, நாதக் கட்டு இவ்வளவோடு எந்த நிலையிலும் இணைந்து நிற்கும் குழைவும்,குழைவும். இசைஞானம் அற்றவர்களும் அவர் வாத்தியத்தைக் கேட்டுப் பரவச முறுவர். ஞானம் நிறைந்தவர்களோ, 'ஆகா! ஆகா!' என்று பூரித்துப் போவர். விவகாரம், பக்தி பாவம், மோகன சக்தி, பாமர ரஞ்சகம், கர்நாடக சுத்தம், நவீன வழி—ஆகிய எல்லா அம்சங்களிலுமே அவர் மேன்மை உடையவர்.

அவரிடம் நிறைந்திருந்த கலைச் சிறப்புக்கள் இப்படி என்றால் அவருடைய இயல்புகள் பெரிதும் பாராட்டத் தக்கவை. அவர் சிறந்த ரசிகர். சமர்த்தர். முன்னோர்களான கலைஞர்களைப் பற்றின செய்திகளைக் கேட்டு அறிவதிலும், தாம் அறிந்தவற்றைப் பிறருக்குத் தெரிவிப்பதிலும் ஆர்வம் மிக உடையவர். தருக்குற்ற இளம் கலைஞர்களைத் திருத்தி அவர்களுக்கு முன்னேற்றம் அளிக்க அவர் ஆளும் வழிகள் வியக்கத்தக்கன. தக்காரைக் கொண்டு சரியான இடத்தில் மட்டம் தட்டிவிடுவார். அந்தச் செயலுக்கு இவர்தாம் மூலபுருஷர் என்பதை எவ

ருமே அறியார். செருக்கடைந்திருந்த இளம் வித்துவான்கள் புடமிட்ட பொன்னாகிப் பிரகாசிப்பர்.

பழக்கத்திற்கு அவர் மிகவும் சரளமானவர். சின்னஞ் சிறுவர் முதல் தொண்டு கிழவர் வரை, கப்பரை ஏந்தும் பிச்சை ஆண்டி முதல் குபேர சம்பத்துடைய பெரிய பிரபு வரையில் ஆண் பெண் அனைவரிடமும் ஏற்றத் தாழ்வு மனப்பான்மை சிறிதும் இன்றிச் சமநிலையில் பழகும் சமரச இயல்பு உடையவர். 'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியாத' உதார புருஷராக வாழ்ந்தவர் அப்பெரியார்.

உள்ளூர்வாசி என்ற முறையில், இளம் வித்துவான் என்ற நிலையில், ராஜமாணிக்கத்திற்கு இந்த உத்தமரின் தொடர்பு கிட்டிற்று. அவரும் ராஜமாணிக்கத்தைப் பற்றி நன்றாக அறிந்திருந்தார். அடிக்கடி அவர்களுக்குள் சந்திப்பும் முறையான உரையாடலும் நிகழ்ந்து வந்தன.

ஒருநாள் பேச்சுவாக்கில் ராமசுவாமி ஐயரைப் பற்றிய பிரஸ்தாபம் வந்தது. ராஜமாணிக்கத்தின் கண்கள் கலகல என்று நீரைப் பொழிந்தன. இதைக் கண்ணுற்ற நாகராஜராவ் உளம் கசிந்து தேறுதல் கூறினார்.

"இனிமேல் அவருடைய அன்பையும், ஆதரவையும் நான் எங்கே காணப்போகிறேன்?" என வருந்தினார் ராஜமாணிக்கம்.

"வருத்தப்படாதே அப்பா. உன் குருவும் நானும் மிகவும் ஒட்டிப் பழகியவர்கள். அந்த முறையில் இந்த நாள் முதல் நான் உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்" என்றார் நாகராஜராவ்.

அன்று முதல் அவர் நாள்தோறும், இயன்றபோதெல்லாம் ராஜமாணிக்கத்திற்கு இசைக்கலை சம்பந்தப்பட்ட

நுணுக்கங்கள் முதல், கீர்த்தனைகள் வரை பல பல போதித்து வரலானர்.

அவருக்கு அப்போதெல்லாம் ஏராளமான கச்சேரிகள் இருந்தன. அவற்றில் பெரும்பாலானவற்றிற்கு ராஜமாணிக்கத்தையே பக்க வாத்தியமாக அமைத்துக்கொண்டு வயலின் வாசிக்கச் செய்தார். இதனால் ராஜமாணிக்கம் அவருடன் பல இடங்களுக்குப் போய்வர நேர்ந்தது; பிராபல்யம் அதிகரிக்கத் தொடங்கியது. ஒரு மாச காலம் தொடர்ச்சியாக ராவ் அவர்களிடம் பாடம் கேட்பதால் பெறக்கூடிய பலனை அவருடைய ஒரு கச்சேரிக்குப் பக்க வாத்தியம் வாசிப்பதாலேயே பெற்றுவிட முடிந்தது.

## 7. ஞான வளர்ச்சி

(1916)

சங்கீத தேவதையின் உறைவிடம் போன்று விளங்குவது தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள உமையாள்புரம் என்ற ஊர். தியாகப் பிரம்மத்தின் வழிவந்த உத்தம சிஷ்ய ரத்தினங்கள் சிலரைத் தோற்றுவித்த பெருமை அதற்கு உண்டு. சுந்தரபாகவதர், கிருஷ்ணபாகவதர், சாமிநாதையர் முதலிய மேதைகள் பிறந்தது அங்கேதான். இன்று நம்மிடையே வாழ்ந்து வரும் தாள வாத்திய மேதை கோதண்டராமையர், சங்கீத வித்துவான் கல்யாணராமையர் முதலியோரும், காலஞ்சென்ற கடவாத்திய விற்பன்னர் சுந்தரமையரும் அந்த ஊர்க்காரர்களே.

தியாகராஜ சுவாமிகளின் பிரதான சிஷ்யர்களுள் ஒருவர் மானம்புச் சாவடி (மங்கோன்புச் சாவடி) வேங்கடசுப்பையர். அவரிடம் குருகுல வாசம் செய்து சிறப்பினைப் பெற்றவர்களில் ஒரு சிலர்: பட்டணம் சுப்பிர

மணிய ஐயர், வயலின் வாத்திய மேதை தஞ்சாவூர் வெங்கோபராவ், வேணுகான மேதை கும்பகோணம் சரப சாஸ்திரிகள், திருவையாறு பஞ்சாபகேசையர், மகாவைத்தியநாதையர் ஆகியோர். பிற்காலத்தில் இவர்கள் பெரிய இசை மேதைகளாகவும் சிறந்த வாக்கேயகாரர்களாகவும் விளங்கினார்கள். இவர்களில் மகாவைத்தியநாதசிவனிடம் முறையாகக் குருகுலவாசம் செய்து சிறப்பாக இசை பயின்றவர் உமையாள்புரம் சாமிநாதையர். இவர் கர்நாடக சங்கீத உலகில் மிகுந்த மரியாதைக்கு உரியவராக விளங்கினார்.

காவிரி தீரத்தில் பிறந்த இவர் ஸ்நானபானாதிகள், நியமநிஷ்டைகள், பூஜை புரஸ்காரங்கள் முதலியவற்றில் உயர்ந்தவர். உத்தமக் குடிப் பிறந்தவர். உத்தம வாழ்க்கையில் அமர்ந்தவர். குலத்திற்குரிய ஆசாரங்களிலிருந்து அணுவும் வழுவாத சிலர். அவர் மனம், உடல், உடைகளில் தூய்மை சிறக்கப் பெற்றவர். பஞ்சகச்சமும் முப்புரிநூலும் வெண்திருநீறுமாகக் காட்சி அளிக்கும் அவரைக் காண்பதே புண்ணியம் என்பர். இசைக்கலைச் சிறப்போடு இத்தகைய ஏனைய சிறப்புகளும் இவரிடம் மிகுந்து காணப் பெற்றதற்கு இவர் பிறந்த குலத்தின் உயர்வு ஒரு காரணம்; தேடி அடைந்த குருவின் சிறப்பு மற்றொரு காரணம்.

சாமிநாதையருடைய சிறந்த லட்சண லட்சிய ஞானமும், அநுபவ முதிர்ச்சியும், கல்பனா சக்தியும் அனைவராலும் கொண்டாடிப் போற்றப் பெற்றவை. நெஞ்சிலே தூய்மையும், நடத்தையில் நேர்மையும், கலையிலே திண்மையும் அவரிடம் குடிகொண்டிருந்ததால் அவர் யாருக்கும் எதற்கும் அஞ்சுவதேயில்லை. வித்துவான்கள் அவர் எதிரில் மிக்க அடக்கத்துடனேதான் செயல் ஆற்றுவார்கள்.

அவருடைய மேன்மையைக் கருதி, அவர் தொடர்பால் மேன்மைபெற வேண்டுமென எண்ணி, சென்னைச் சங்கீத வித்துவத் சபையார் 1936-ஆம் ஆண்டின் சங்கீத மகா நாட்டுக்கு அவரை வருந்தி அழைத்துத் தலைமை தாங்கச் செய்தார்கள். அவருக்குச் 'சங்கீத கலாநிதி'ப் பட்டம் வழங்கி இசைக் கலைக்கு மரியாதை செய்தார்கள். இன்று— அறுபத்தொன்றாவது பிராயத்திலும்—ஞானம் நிறைந்த சங்கீதத்தை ரசிகப் பெருமக்களுக்கு வாரி வாரி வழங்கி வரும் சங்கீத பூபதி மகாராஜபுரம் விசுவநாத ஐயர், உமையாள்புரம் சாமிநாத ஐயருடைய மாணவர்!

இத்தகைய பேரறிஞரின் தொடர்பும் ராஜமாணிக்கத்திற்குக் கிட்டியிருந்தது. ராமசுவாமி ஐயரிடம் குருகுல வாசம் செய்கிறபோதே குருவின் இசையோடு ராஜமாணிக்கம் சாமிநாதையரின் பரிசயத்தைப் பெற்றவர். குருவுக்குப் பின்பு நெருக்கம் அதிகமாயிற்று.

நாகராஜராவ், சாமிநாதையர் இருவரும் பக்கத் துணையாக இருந்து பலபல விஷயங்களைப் போதித்தமையால் ராஜமாணிக்கத்திற்கு இசைக்கலை சம்பந்தமான அநேக நுட்பங்கள் புலன் ஆயின; சிறந்த கீர்த்தனைகள் பல பாடம் ஆயின. கச்சேரி முறை என்ன என்பதைத் திட்டமிட்டுக் கொண்டு, பலரும் கொண்டாடும் வண்ணம் மேடைகளில் செயல் ஆற்ற முடிந்தது. குருவாக விளங்கிய சாமிநாதையரின் கச்சேரிகளிலும் பக்கவாத்தியமாக வயலின் வாசிக்கும் பேறும் கிடைத்தது!

## 8. திருமணம்

**(1916)**

**பு**துக்கோட்டையைச் சேர்ந்த வாராப்பூர் என்ற இடத்தில் நீலமேகம் பிள்ளை என்ற மிராசுதார் வாழ்ந்து வந்

தார். அவர் இசை வேளாளர் மரபில் வந்தவர். விவசாயம் சிறந்த தொழில் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. அதனால் அவர் பரம்பரைத் தொழிலான நாதசுரக் கலையில் ஈடுபாடு கொள்ளவில்லை. கிராமத்தில் அவருக்கு நல்ல செல்வாக்கு.

அவருடைய அருமைக் குமாரி சௌபாக்கியவதி குஞ்சம்மாள். ஒரே பெண். அதனால் குடும்பத்தில் உள்ள அனைவரும் மிகச் செல்வமாக வளர்த்து வந்தார்கள்.

அந்த நாட்களில் குழந்தைகள் ஏழு எட்டுப் பிராயத்தை எட்டுகிறபோதே அவர்களின் திருமணம் பற்றிப் பெற்றோரும் மற்றப் பெரியோரும் கவலைப்பட ஆரம்பித்து விடுவார்கள். உடனே முயற்சி எடுப்பதும் திருமணத்தை நடத்தி முடிப்பதும் சர்வ சகஜமான செயல்கள். வாராப்பூர்ப் பிள்ளையும் தம் பெண்ணின் பன்னிரண்டாவது பிராயத்தில் மகளின் திருமணம் பற்றிக் கவலை கொண்டார். பல பெரியோர்களின் ஆலோசனைப்படி கும்பகோணம் ராஜமாணிக்கத்தை வரனைத் தேர்ந்தெடுத்தார்.

வாராப்பூரில் திருமணம் இனிது நிறைவேறிற்று. உடனேயே கும்பகோணத்தில் அதிவிமரிசையாகக் கிருகப் பிரவேச வைபவம் நடைபெற்றது. இரண்டு வைபவங்களுக்கும் எண்ணற்ற நண்பர்களும் இன்னிசைக் கலைஞர்களும் அன்புடைய பல பெரிய மனிதர்களும் வந்திருந்தார்கள். சங்கீதக் கச்சேரிகளும் மேளக் கச்சேரிகளுமாய் வைபவங்கள் சிறப்பாக நடந்தேறின.

ஒரே பெண்ணாகிய குஞ்சம்மாளைப் பிரிந்திருக்க மனமின்றிப் பெற்றோர் வருந்தினர். 'நிரம்ப ஆஸ்தி இருக்கிறது; சங்கீத முயற்சிகளை விடுத்து எங்களிடமே வந்து

இருந்துவிடுங்கள்' என்று அழைத்தார் மாமனர். இசைக் கலையிலே சுவை மிகுந்த ராஜமாணிக்கம் மாமனரின் கோரிக்கைக்கு இணங்கியிருந்தால்........?

## 9. முதற் கச்சேரி—'தந்தி'ச் சம்மானம்
(1916)

வாய்ப்பாட்டுத் துறையிலும் சத்கதா காலட்சேபத் துறையிலும் இணையற்ற புலமையுடன் பிரகாசித்தவர் அரிகேசநல்லூர் முத்தையா பாகவதர். அவர் கர்நாடக சங்கீத உலகில் அனைவராலும் நன்கு மதித்துக் கொண்டாடப் பெற்றவர். 'காயகசிகாமணி' என்ற அரிய பட்டத்தைப் பெற்றவர். புலமை ஒன்றையே மூலதனமாகக் கொண்டு புவனத்தில் கலை ஆட்சி புரிந்தவர். பெரிய பெரிய சம்ஸ்தானதிபதிகளிடமெல்லாம் சம நிலையில் பழகும் பேறு பெற்ற சதுரர். அவர் ஓர் அபிப்பிராயத்தை வெளியிட்டு அதை மறுத்த சம்ஸ்தானதிபதி இல்லை.

அவர் 1877-ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் பிறந்தார். பிறப்பிடம் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள அரிகேசநல்லூர். தந்தையார் பெயர் லிங்கம் ஐயர். பத்தாவது பிராயத்தில் தந்தையை இழந்தார். பின்னர், சிறிய தகப்பனரின் ஆதரவில் வளர்ந்தார். வளர்ப்புத் தந்தை மறையை நன்கு ஓதி உணர்ந்த சீலர். பாகவதருக்குச் சிறு பிராயத்திலிருந்தே இசையில் ஈடுபாடு அதிகம். அவரை அதிலிருந்து மடைமாற்றி, வேதம், சாத்திரம் முதலிய துறைகளில் ஈடுபடுத்த முயன்றார் அவருடைய சிற்றப்பா.

இதன் விளைவாகப் பாகவதர் ஒருநாள் யாரும் அறியாமல் வீட்டினின்றும் வெளியேறினர். இரந்துண்டு பிழைத்

தாவது இசை பயில வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டார். ஆர்வம் மதியைத் தூண்ட அவர் பெரியோர் சிலரிடம் விசாரித்தார். லட்சியம் நிறைவேறத் தக்க இடம் திருவையாறு என அறிந்தார்.

இசைச் செல்வர்கள் பலரைத் தோற்றுவித்த மாபெரும் புண்ணியத் தலம் திருவையாறு. அதைப் பஞ்சநதம் என்று வடமொழியில் கூறுவார்கள். அங்கு அந்த நாளில் சபாபதி ஐயர் என்ற பெரியார் சிறந்த சங்கீத வித்துவானாகத் திகழ்ந்து வந்தார். பாகவதர் அவரிடம் தஞ்சம் புகுந்தார்.

அவரைப் பற்றிக் கர்ண பரம்பரையாக ஒரு செய்தி வழங்குகிறது. சபாபதி ஐயர் சாமானிய அந்தஸ்தில் உள்ளவர்தாம். ஆனால் அவருடைய கலைக் காம்பீரியமும் சொல்லின் தோரணையும் அவரைப் பெரிய ஜமீன்தாராகப் பிறர் மதிப்பில் சித்திரித்தன. வாழும் வீடு மிகச் சாதாரணமாக இருந்தும் பயபக்தியோடு கூடிய சிஷ்யர்களின் நடமாட்டம், பணிவிடைகள் ஆகியவற்றால் அங்கு ராஜ தர்பார் நடைபெறுவது போல் தோன்றும். இன்றும்கூட நம் மதிப்பிற்குரிய வித்துவான்கள் சிலரையும் அவர்கள் வசிக்கும் இடங்களையும் நாம் அதே ரீதியில் காண்கிறோம்.

முத்தையாபாகவதர் திருவையாற்றில் சபாபதி ஐயரை வணங்கினார். "என்னை மாணவனாக ஏற்றுக் கொண்டு அருள்புரிய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். ஐயர் அவரை நிமிர்ந்து பார்த்தார்; அவ்வளவுதான். அன்று முதல் பாகவதர் அந்த வீட்டையே சுற்றிச் சுற்றி வந்தார். எங்கோ உணவு கொள்வதும், எவ்விடத்திலோ படுத்து உறங்குவதும் ஐயர் இல்லத்திலே எந்நேரமும் பணிபுரிவதுமாய் இருந்தார். அதையெல்லாம் கவனித்துக்

கொண்டும் அந்தப் புதிய மாணவனை நேருக்கு நேராகப் பார்த்துக்கொண்டும்தான் இருந்தார் ஐயர். ஆனால் அவர் வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

ஒருநாள் ஐயருடைய மனைவியார் கேட்டார்: "புதிய பையன் ஒருவன் இங்கே வந்து மூன்று மாதத்திற்கு மேலாகச் சுசுருஷை செய்து கொண்டிருக்கிறானே? உங்களிடம் இசை பயில ஆவல் போல் இருக்கிறது. நீங்கள் அவனை ஏறெடுத்தும் பார்க்கவில்லையே?"

"இருக்கட்டும் இருக்கட்டும்; எல்லாம் எனக்குத் தெரியும். அவன் மனம் பக்குவம் பெறட்டும்" என்று பதில் சொன்னார் ஐயர். அவர் குறிப்பிட்ட பக்குவ காலம் வந்தது போலும்; ஒருநாள் அவர் புதிய மாணவனை மனங் குளிர, கண் குளிரப் பார்த்தார். பூர்வோத்தரம் விசாரித்தார். சிறுவனுடைய உள்ளத்தில் கொந்தளிக்கும் ஆசையை உணர்ந்தார். அன்றே, அப்பொழுதே அருள் புரியத் தொடங்கிவிட்டார்.

ஏழு ஆண்டுகள் இசையை முறையாகப் பயின்று குருவின் நல் ஆசியுடன் ஊர் திரும்பினார் பாகவதர். அப்போது அவருக்கு வயது இருபது. சுமார் நாலைந்து ஆண்டுகள் ஊர்வாசம்; சுற்றுப் புறங்களில் கச்சேரிகள். ஆயினும் பாகவதரின் மனம் நிம்மதியாக இல்லை.

'சங்கீத கேசரி' என்று பின்னாளில் புகழ் பெற்ற கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதர் அப்போது முன்னுக்கு வந்துகொண்டிருந்தார். அவருடைய சாரீரம் மிக உயர்ந்தது; சங்கீத ஞானம் அபாரம். வேத சாத்திரங்களில் நல்ல பாண்டித்தியம். அனைத்திலும் மேலாக அவரிடம் நிறைந்திருந்த சம்பத்து மனோதைரியம். கதா காலட்சேபம் செய்வதில் அவர் மிக்க புகழ்பெற்று வந்தார்.

வேதாந்த பாகவதரும், முத்தையா பாகவதரும் ஓர் இடத்தில் ஒரு வைபவத்தில் சந்தித்தனர்.

'கச்சேரி, காலட்சேபம் இவைகளில் எது கடினமானது?' என்ற வாதம் எழுந்தது. அவரவர் தத்தம் கலையே கடினம் என வாதமிட்டனர். விளையாட்டுப் பேச்சு வினையாக முடிந்தது. "நான் செய்வதை உங்களால் செய்ய இயலாது" என்று ஒருவருக்கொருவர் சவால் விடுத்துக் கொண்டனர். "செய்து காண்பிக்கிறேன்" என்று இருவரும் வீறு கூறினர்.

அவர்கள் பிரிந்தார்கள். சொன்னபடியே செய்தும் காட்டினார்கள். காலட்சேபம் செய்து கொண்டிருந்த வேதாந்த பாகவதர் கச்சேரி செய்யத் தொடங்கினதற்கும் கச்சேரி செய்துகொண்டிருந்த முத்தையா பாகவதர் காலட்சேபம் செய்யத் தொடங்கினதற்கும் இந்த நிகழ்ச்சியே காரணமாம்.

அந்த நாளில் காலட்சேபங்களுக்குப் பிரமாதமான மதிப்பு இருந்தது. இளமையில் வேத சாத்திரங்களை ஓரளவு பயின்றிருந்த முத்தையா பாகவதர் பிறகு அவசியத்தை முன்னிட்டு அந்த வகையில் புலமையை அபிவிருத்தி செய்துகொண்டார். அவருடைய முயற்சிக்கு ஏற்பச சாரீரமும் சங்கீத ஞானமும் இருந்தன. அவர் எடுத்த காரியத்தில் அதிவிரைவில் பிரமிக்கத் தக்க முன்னேற்றம் பெற்றார். பெயர் பிரபலமாயிற்று. நல்ல வருவாய் கிட்டிற்று. வறிய நிலை நீங்கிற்று. சாமானிய இடங்களில் செயல் புரிந்து புகழும் பொருளும் பெற்ற பின் அவர் முதல் முதலாகத் திருவிதாங்கூர்ச் சம்ஸ்தானத்திற்குச் சென்றார். அங்கே தம் திறமையைக் காட்டி இரண்டு கைகளுக்கும் தங்கத் தோடாக்களும் இரட்டைச் சாதராக்

களும் பெற்றார். பின்னர் மதுரைமாநகரை அடைந்தார். அங்கே 'சங்கீத குருகுலம்' ஒன்றை ஆரம்பித்து நன்றாக நடத்தினார். அதன் பிறகு அவர் ஆண்டிப்பட்டி ஜமீன் தார் பெத்தாச்சி செட்டியாரின் நன்மதிப்புக்குப் பாத் திரர் ஆனார். அது முதல் அவருக்கு யோக காலம்!

ஆண்டிப்பட்டி ஜமீன்தார் கரூரில் நிகழ்த்திய உற்சவம் வெகு சிறப்புடையது. அதில் முத்தையா பாகவதரின் ஒத்துழைப்பு மிக முக்கியமானது. அங்கே நிகழ்ந்த கலை நிகழ்ச்சிகள் பிரசித்தமானவை.

ஆண்டுதோறும் பங்குனி மாதத்தில் பசுபதீசுவரர் ஆலயத்தில் உற்சவம். பத்துநாள் வைபவம். கச்சேரிகள் ஏராளம். அழைப்பின்பேரில் வந்த கலைஞர்களைத் தவிர அங்கே வருகிற மற்ற வித்துவான்களுக்கும் உசிதம்போல் சந்தர்ப்பம் அளிக்கப் பெறுவதுண்டு. இளம் வித்துவான் களுக்கும் ஆதரவு அளிக்கும் நோக்கத்துடன் தினந் தோறும் அவர்களுடைய கச்சேரிகள் இரண்டும், பெரிய வித்துவானின் கச்சேரி ஒன்றுமாகப் பத்து நாட்களில் முப்பது கச்சேரிகளுக்குக் குறைவில்லாமல் நடைபெறும். பாகவதர் ஜமீன்தாரோடு சமநிலையில் இருந்து அனைவருக் கும் ஆதரவளித்து வெகுமதிகளை வழங்கச் செய்வார்.

1916-இல் ராஜமாணிக்கம் அந்த விழாவுக்குச் சென் றிருந்தார். அப்போது அவருக்கு வயது பதினெட்டு. முதலில் ஆண்டவனைத் தரிசித்தார். பிறகு பாகவதரைக் கண்டு வணங்கினார். தம்மைப்பற்றி எடுத்துரைத்துத் தமக்குக் கச்சேரி சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். பல அலுவல்களுக்கிடையில் பாக வதர் ராஜமாணிக்கத்திடம் முகம் கொடுத்துப் பேசினார். "முயலுகிறேன்" என்றார்.

ஐந்து நாட்கள் சென்றன. ஆரும் நாள் காலையில் பாகவதர் ராஜமாணிக்கத்தை அழைத்தார்.

"உன் பேர் ராஜமாணிக்கம்தானே?" என்று வினவினர்.

"ஆம்" என்று அடக்கமாகப் பதில் இறுத்தார் ராஜமாணிக்கம்.

"நீ வசிப்பது கும்பகோணத்திலா?"

"ஆம்."

"ஆலங்குடி நடேசபாகவதரைஉனக்குத் தெரியுமா?"

"தெரியும்."

"இன்று அவருடைய கச்சேரி. நீ அவருக்குப் பக்க வாத்தியமாக வயலின் வாசி."

ராஜமாணிக்கத்திற்கு எல்லையற்ற சந்தோஷம். பாகவதரை வணங்கி விடைபெற்றுத் திரும்பினர். அங்கே கச்சேரி செய்வதால் கிடைக்கக்கூடிய சம்மானம் ஒரு புறம் இருக்க, சமுத்திரம்போல் கூடியிருக்கும் ரசிகப் பெருமக்கள், வித்துவத் பிரமுகர்கள் ஆகியோர் முன்னிலையில் செயல் ஆற்றி ஆசியும் புகழும் பெறுவது அதைவிட முக்கியம் என எல்லோரும் கருதினர்கள். அதனல்தான் ராஜமாணிக்கத்திற்கு அத்தனை சந்தோஷம்!

மாலையில் ஆலங்குடி நடேச பாகவதரின் கச்சேரி நடைபெற்றது. ராஜமாணிக்கம் வயலின் இசைத்துப் பாராட்டுப் பெற்றார்.

கலைஞர்கள் சம்மானிக்கப் பெற்றனர். மாமூலான சம்மானத்தோடு ராஜமாணிக்கத்திற்கு விசேஷ வெகுமதி ஒன்றும் கிடைத்தது. பாகவதர் தாம்பூலத் தட்டில் கடித உறை ஒன்றை வைத்து ராஜமாணிக்கத்தினிடம் கொடுத்துப் புன்முறுவல் பூத்தார். வியப்பும் பிரமிப்பும் கொண்ட

ராஜமாணிக்கம் அங்கேயே, அப்பொழுதே மிகப் பரபரப்புடன் அதைப் பிரித்தார். அவையோர் ஆவலுடன் அதை நோக்கிக்கொண்டிருந்தனர்.

உறைக்குள் வயலின் வாத்தியத்திற்கு அமைக்கும் தந்திகள் இருந்தன. அத்துடன் ஒரு தந்தித்தாள் வேறு; செய்தியை அறிவிக்கும் தந்தி! ராஜமாணிக்கம் அதைப் படித்தார்; வெட்கித் தலைகுனிந்தார். அவர் முகம் குப்பென்று சிவந்தது. பாகவதரின் குறுநகை பெருநகையாக மாறிற்று. அவர் சொன்னார்:

"ராஜமாணிக்கம், முதலில் நீ என்னிடம் வந்து இவ்விடத்தில் சந்தர்ப்பத்தை வேண்டியபோது உன்னைப்பற்றி என் மனத்தில் ஒருவித அபிப்பிராயமும் இல்லை. எத்தனையோ இளம் வித்துவான்களைப்போல் நீயும் ஒருவன் என்றே எண்ணினேன். சந்தர்ப்பம் வந்தால் பயன்படுத்திக் கொள்ள இருந்தேன். அதை உண்டுபண்ணி வைத்தது இந்தத் தந்திதான். இது நேற்று உனக்கு வந்தது. பிரித்துப் பார்த்தேன். சந்தோஷச் செய்தியை அறிந்தேன். உடனே உன் நினைவு வந்தது. 'இல்வாழ்க்கைத் தொடக்கத்தின் சுபச் செய்தியை அறிந்து ஊர் திரும்புகிற நீ சந்தோஷமாகச் செல்லவேண்டும்' என எண்ணினேன். உன் திறமையைப்பற்றி விசாரித்து அறிந்தேன்; சந்தர்ப்பம் அளித்தேன். இது கருவூர். உனக்குக் கிடைத்திருக்கிற செய்தி வாழ்க்கைக்கு இன்றியமையாத சந்தான பாக்கியத்தின் அடிப்படைச் செய்தி. அந்தச் செய்தி இந்த ஊரில் உனக்குக் கிடைத்தது வெகு பொருத்தம்! ஆகவே, தந்தி வாத்திய வித்துவானாகிய உனக்குத் தந்திச் சம்மானம்! ஒன்றல்ல; இரண்டு தந்திகள்! ஒன்று, புகழுக்குரியது; மற்றொன்று, புத்திர பாக்கியத்திற்குரியது. நீ வாழ்க! உன் கலை வாழ்க!"

ராஜமாணிக்கம் குனிந்த தலை நிமிரவில்லை.

பாகவதரின் சிலேடைப் பேச்சால் அவையில் எழுந்த சிரிப்பொலி கடலின் சிற்றலைபோல் அடங்கிற்று. பிறகு ராஜமாணிக்கத்துக்கு வந்த தந்தியில் உள்ள செய்தி என்ன என்பதும் அங்கே இருந்த அனைவருக்கும் தெரியலாயிற்று.

# 10. நிழல் மறைந்தது
(1916)

வயசான தன் விளைவாக ரத்தினம்மாள் பலவீனம் அடைந்தார். உணவு, உறக்கம், நடமாட்டம் முதலியவற்றில் கோளாறுகள் ஏற்பட்டன. நாளடைவில் படுத்த படுக்கையானார்.

ராஜமாணிக்கத்திற்கு நல்ல இருப்பே கொள்ளவில்லை. பெற்ற தாயை இழந்தபோது அவர் சிறு குழந்தையாக இருந்தார். தாயன்பின் உயர்வையும் உணரவில்லை; தாயை இழந்த துயரையும் அறியவில்லை. அவர் கண்டதெல்லாம் பெரிய தாயின் பேரன்பைத்தான். தாய்க்குத் தாயாக இருந்து அவர் வளர்த்த அருமை! கலையிலே இவர் முன் னேற அவர் பட்டபாடு! வெயிலின் கொடுமை எப்படி இருக்கும் என்பதை ஒரு சிறிதுகூட அறிய முடியாதபடி நடமாடும் நிழலாக இருந்து போஷித்து வளர்த்த கற்பகத் தரு சாய்ந்துவிட்டது என்பதை எண்ணுந்தோறும் தம்முடைய உயிர் நிலைக்கு ஊறு நேர்ந்துவிட்டது போன்ற பெரும் வேதனையால் அவர் சங்கடப்பட்டார். 'அவர் அரும்பாடு பட்டுச் சேர்த்து வைத்த பொருள் அவருடைய உபயோகத்திற்கு இல்லாமல் வேறு எதற்கு?' என்று நிரம்பச் செலவு செய்து பெரிய பெரிய மருத்துவ நிபுணர்களைக் கொண்டு நன்கு கவனிக்கச் செய்தார். என்ன

முயன்று என்ன? காலதேவனின் கண்ணிலே பட்டுவிட்ட உயிர் உரிய காலத்தில் கூட்டைவிட்டு வெளியேறிவிட்டது.

'இந்தத் துயரத்தை ராஜமாணிக்கம் எப்படித்தான் தாங்கினாரோ?' என்று அறிந்தவர்கள், தெரிந்தவர்கள் பேசிக்கொண்டார்கள். அவருடைய தாய்ப் பாசம் அத்தனை பிரசித்தம்!

"பிறந்தவர் எவரும் ஒருநாள் இறந்துபோக வேண்டியதுதான். மூப்பை எய்தியவர்கள் பிறர் தயவில் வாழாமல் கண்மூடுவது ஒருவகையில் வரவேற்கத் தக்கதும் ஆகும். ஆனால் என் தாயின் பிரிவில் எனக்கு இரண்டு குறைகள்: ஒன்று, மகனின் முன்னேற்றத்திற்காகப் பெரும்பாடு பட்ட அவர் மகனின் முன்னேற்ற நிலையை ஒரு சிறிது கூடக் காணவில்லையே; மருமகளின் பணிவிடைகளைப் பெறவில்லையே என்பன; மற்றொன்று, எனக்காக எவ்வளவோ செலவு செய்த தாய் நான் சம்பாதித்த பொருளிலிருந்து ஒரு கவளம் அன்னம் உட்கொள்ளவில்லையே என்பது. இன்று என் இல்லத்தில் குதூகலம் நிறைந்திருக்கிறது; வேளைக்கு இருபது இலைகள் விழுகின்றன. இவற்றையெல்லாம் என் குறை தீர்ந்துவிடுமா? எனக்கு நன்மை செய்ய என் தாய் கொடுத்துவைத்தார்; என் தாய்க்கு ஈடு செய்ய நான் கொடுத்து வைக்கவில்லை" என்று உளங் கசிந்து கூறுகிறார் ராஜமாணிக்கம் பிள்ளை.

## 11. "அச்சம் எதற்கு ?"

(1917)

தஞ்சை ஜில்லாவில் திருவடமருதூர் சிறந்த சிவத் தலம். அங்கே கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் மகாலிங்க மூர்த்தி மக்களின் மனக் குறைகளை, உடற் பிணி

களைப் போக்கி அருளும் தெய்வம். சோழ மகாராஜா பிரம்மஹத்தி தோஷத்திலிருந்து விடுதலை பெற்றது இங்கே தான். தன்னுடைய பாவத்தைத் தீர்த்துக்கொள்ள அம் மன்னன் எங்கெங்கோ சுற்றி அலைந்தான். இறுதியில் மகா லிங்கத்தைச் சரண்புகுந்தான். ஆண்டவனைத் தரிசிக்கத் தெற்குக் கோபுர வாசல் வழியே ஆலயத்துள் நுழைந்தான். பிரம்மஹத்தி ஆலயத்துள் செல்ல அஞ்சிக் கோபுர வாயிலிலேயே தங்கிற்று. மன்னன் ஆண்டவனைத் தரி சித்துவிட்டு ஆலயத்திலிருந்து வேறு வழியாக வெளியே போய்விட்டான். 'மன்னன் வருவான்; பிடித்துக்கொள்ள லாம்' என்று பிரம்மஹத்தி தெற்குக் கோபுர வாயிலிலேயே தங்கியிருந்தது; இன்னமும் தங்கி இருக்கிறது—இது புராணம் கூறும் கதை.

'மத்தியார்ச்சுனம்' என்பது திருவடமருதூரின் வட மொழிப் பெயர். கோட்டு வாத்தியத்தில் நிகரற்ற மேதை யாக விளங்கிய சகாராம் ராவ் பிறந்து வளர்ந்தது இங்கேதான்.

அவருடைய தகப்பனார் ஸ்ரீநிவாச ராவ். அவரும் கோட்டு வாத்தியம் வாசிப்பதில் புகழ்பெற்ற வித்துவான். அந்த வாத்தியத்தின் இயற்பெயர் 'மகாநாடக வீணை'. முன்னால் யாருமே கச்சேரி முறையில் கையாளாத வாத்தி யம் அது. அத்தகைய ஒன்றை வீணையைப்போல் கை யாண்டு மிக நன்றாக வாசித்துப் பல ரசிகர்களிடையே கியாதியைப் பெற்றவர் ஸ்ரீநிவாச ராவ்.

அவருடைய குமாரர் சகாராம் ராவ், தகப்பனாரிடமும் வயலின் வாத்திய மேதை தஞ்சை வெங்கோபராவ் முதலிய பெரியவர்களிடமும் அப்பியசித்து நிகரற்ற வித்துவானாகத் திகழ்ந்தார். திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் முதலிய

வித்துவான்களோடு இணைப்பு மிக உடையவர். சங்கீதத்தைத் தொழிலாகக் கருதாதவர். ஸ்வாநுபூதி. சதசில் சிறு சந்தடியைக்கூடச் சகியாதவர். அவர் வாசிக்கும் போது அவையில் யாராவது பேசினால் உடனே தாம் வாசிப்பதை நிறுத்திவிடுவார். "உங்கள் பேச்சுக்கு என்னுடைய வாத்தியம் இடைஞ்சலாக வேண்டாம்" என்று நிதானமாகச் சொல்லுவார். முகத்திலோ சொல்லிலோ கோபத்தைக் காண முடியாது. வாசிப்பை நிறுத்திவிட்ட செயல் ஒன்றே போதாதா?

அவருடைய தம்பி ஹரிராவ். தமையனாரிடம் பரம பக்தியுடையவர். அவர்களை யாரும் தனித் தனியே கண்டதே இல்லை என்பர்.

இத்தகைய சிறந்த வித்துவரத்தினத்தைத் தோற்றுவித்துப் புகழ்பெற்ற திருவடமருதூரிலே அந்த நாளில் ராமசுவாமி ஐயர் என்ற சிறந்த பக்திமான் வாழ்ந்து வந்தார். அவருக்கு அந்த ஊர்த் தபால் காரியாலயத்தில் அலுவல். அவர் தீவிர முருக பக்தர். மந்திர சாத்திரப் பயிற்சி உடையவர். விஷக்கடி முதலிய தொல்லைகளிலிருந்து மக்களைக் காப்பாற்றி ஜனோபகாரியாக வாழ்ந்து வந்தார்; அதனால் மிக்க பிராபல்யத்தை அடைந்திருந்தார்.

அவர் ஆண்டுதோறும் குமாரசஷ்டி உற்சவத்தை வெகு விமரிசையாக நடத்துவதுண்டு. உற்சவம் அவருடைய வீட்டிலேயேதான் நடைபெறும். ஊரிலுள்ளவர்கள், அக்கம் பக்கத்து ஊர்களில் வசிப்பவர்கள் ஆகிய பலர் அவருடன் ஒத்துழைப்பர். ஆறு நாள் உற்சவம். அந்த ஆறு நாட்களிலும் ஊர் திமிலோகப்படும்.

உற்சவத்தில் இசை நிகழ்ச்சிகள் உண்டு. பிரபலமான பல பெரிய வித்துவான்களின் கச்சேரிகள் நடை

பெறும். முன்னுக்கு வரும் ஆர்வமுடைய இளம் வித்து வான்கள் பலர் அக்கச்சேரிகளைக் கேட்க அங்கே வந்து கூடுவார்கள். அவர்களுக்குச் சச்சேரிகளைக் கேட்கும் வாய்ப்பைத் தவிர, சமயம் நேர்ந்தால் கச்சேரி செய்யும் வாய்ப்பும் கிட்டுவதுண்டு.

1917-ஆம் ஆண்டு உற்சவத்தில் இசையுலக மேதை கோனேரிராஜபுரம் வைத்தியநாதையரின் கச்சேரிக்கு ஏற்பாடாகி இருந்தது. மலைக்கோட்டை கோவிந்தசாமி பிள்ளை வயலின். கும்பகோணம் வேணு செட்டியார் மிருதங்கம். அன்று காலையில் வேறொரு கச்சேரி நிகழ்ந் தது. அப்போது மலைக்கோட்டை கோவிந்தசாமி பிள் ளைக்கு ஏதோ அசௌகரியம் என்றும் அதனால் மாலைக் கச்சேரிக்கு அவர் வரப்போவதில்லை என்றும் செய்தி பர விற்று.

உற்சவ நிர்வாகிகள் மலைத்துப்போனார்கள். வயலின் இல்லாமல் கச்சேரி சோபிக்காது. பாடும் வித்துவானோ கலையில் மிகப் பெரியவர். அவருக்கு வாசிக்க, மாலைக்குள் யாரைப்போய் ஏற்பாடு செய்வது? கடைசியாக அங்கே வந்து குழுமியுள்ள இளம் வித்துவான்களில் தேர்ந்த ஒரு வரைத் தேடிப் பிடித்து ஏற்பாடு செய்யத் தீர்மானித் தார்கள்.

இதை அறிந்ததும் இளம் வித்துவான்கள் ஒவ்வொரு வராக நழுவத் தொடங்கினர். அவர்களுள் ராஜமாணிக் கமும் ஒருவர். நிர்வாகத் தலைவர் அவரை வளைத்துக் கொண்டார்.

விஷயத்தை அவர் சொல்லித்தானா இவர் தெரிந்து கொள்ளப்போகிறார்? ஆகவே அவர் பேசத் தொடங்கி னதுமே இவர் மறுக்கத் தொடங்கிவிட்டார். என்ன

சொல்லி என்ன? நிர்வாகிகள் விடும் வழியாய் இல்லை. தட்டிக் கொடுத்துத் தைரியம் கூறினார்கள். "எதற்காக இப்படி எல்லாரும் பயப்பட வேண்டும்? கோனேரிராஜ புரம் என்றால் சிங்கமா, புலியா? பெரியவர்களைக் கண்டு இப்படி அஞ்சி ஒதுங்கினால் அவர்களுடைய தொடர்பைப் பெறுவது எப்படி? அவர்களுக்கு வாசித்துப் பழகுவது எப்போது? கூச்சம் தெளிவது என்றைக்கு? இம்மாதிரி யான அச்சமும் தயக்கமும் முன்னுக்கு வரவேண்டியவர் களுக்கு இடையூறுகள் அல்லவா?" என்று பல பல கூறி இசைய வைக்க முயன்றனர்.

விஷயம் வைத்தியநாதையர் காதுக்கும் எட்டிற்று. அவர் உடனே ராஜமாணிக்கத்தை அழைத்தார். அன் பாகப் பேசி உற்சாகம் ஊட்டினார். "கச்சேரி இரவில்தான். மாலையில் வந்து என்னைப் பார்" என்றார்.

மாலையில் ராஜமாணிக்கம் பிள்ளையும் வைத்தியநாத ஐயரும் பேசிக்கொண்டே உலவச் சென்றார்கள். வைத்திய நாதையர் மிக்க வாத்சல்யத்துடன் ராஜமாணிக்கத்தை நோக்கி, "உனக்கு என்ன என்ன உருப்படிகள் பாடம்? எந்த எந்த ராகங்களை நீ மிக நன்றாய் வாசிப்பாய்? எது எதற்கு அநாயாசமாக ஸ்வரம் வாசிப்பாய்?" என்றெல்லாம் விசாரித்தார். ராஜமாணிக்கம் தமக்குத் தெரிந்ததைச் சொன்னார்.

இரவில் கச்சேரி நடைபெற்றது. வைத்தியநாதையர் பிரமாதமாகப் பாடினார்; ராஜமாணிக்கம் பிள்ளை அற்புதமாக இசைத்தார்; வேணுச் செட்டியார் வெகு சிறப்பாக வாசித் தார். மாலையில் ராஜமாணிக்கம் பிள்ளை தமக்கு என்ன என்ன தெரியுமென்று சொன்னாரோ அவற்றை மட்டுமே அளவோடு, மிகப் பக்குவமாகப் பாடினார் வைத்தியநாத

ஐயர். அவருடைய அருள் மனத்தைச் சொல்லவோ, ஞாபக சக்தியைச் சொல்லவோ? ராஜமாணிக்கம் நன்றி உணர்வினாலும் அளவு கடந்த பக்தியினாலும், உடலில் புளகம் போர்ப்பக் கண்களில் பாஷ்பம் பெருக்கினார்.

"முதல் முதலாக நான் பக்க வாத்தியமாக வயலின் வாசித்த பெரிய வித்துவானின் கச்சேரி இதுதான். முன்னால் எல்லாம் உள்ளமும், உடலும் அச்சத்தால் நடுங்கிய வண்ணமே இருந்தன. அதை அந்தப் பெரியவரும் உணர்ந்தே இருந்தார் என்றுதான் சொல்லவேண்டும். இல்லாவிட்டால் அடிக்கடி அத்தனை 'சபா'ஷூம் 'பலே பலே'யும் போட்டு என்னை ஊக்கிவிட்டுக் கொண்டே இருப்பாரா? அவருடைய குளிர்ந்த பார்வையும் கனிந்த சொற்களும் இனிய செயல்களும் அவரிடம் எனக்கு இருந்த அச்சத்தைப் போக்கி, எங்களிடையே தாய் - சேய் இடைப்பட்ட அன்பையும் மரியாதையையும் சலுகை உணர்ச்சியையும் உண்டு பண்ணி வைத்தன. போகப் போகத் தைரியமாக வாசிக்கத் தொடங்கினேன்.

"அப்போது அந்தப் பேரவையில் ஸ்ரீ சகாராம் ராவ் முதலிய மேதைகள் பலர் நிறைந்திருந்தனர். ராவ் அவர்களிடம் அச்சமயம் குருகுலவாசம் செய்துகொண்டிருந்த செம்மங்குடி ஸ்ரீநிவாசையரும் மற்றும் பல இளம் வித்துவான்களும் சபையில் கூடியிருந்தனர். அன்று ஸ்ரீமான் வைத்தியநாதையர் அவர்கள் மிக விஸ்தாரமாகப் பாடிய பைரவி ராகமும் அதில் அமைந்த 'முருகா உனை நம்பினேன்' என்ற பல்லவியும் இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அந்த மகானுபாவரின் அருள் ஆசியால் இன்றளவும் நான் சுகமாக வாழ்கிறேன்" என்று கூறிப் பக்தி உணர்வு பொங்க அஞ்சலி செய்தார் ராஜமாணிக்கம் பிள்ளை.

# 12. மெருகு

(1918)

**வி**த்துவான்கள் புகழ்ந்து கொண்டாடும் வித்துவானுகத் திகழ்ந்தவர் நாமக்கல் நரசிம்ம ஐயங்கார். 'பல்லவி வித்துவான்' என்ற தனிப் பெருமை அவருக்கு உண்டு. இன்று—அறுபத்தேழாவது பிராயத்திலும்—பாமர - பண்டித ரஞ்சகமாக, கேட்கக் கேட்கத் தெவிட்டாத முறையில், கர்நாடக சங்கீதத்தை ரசிகர்களுக்கு வழங்கி வரும் அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார் அவரிடம் குருகுல வாசம் செய்தவர்.

இத்தகைய சிறந்த மேதையைப் பற்றி ராஜமாணிக்கம் கேள்வியுற்ருர். அடுத்தடுத்து அவர் சிறப்புப்பற்றி அதிகமாகக் கேள்விப்படலானுர். அவரைக் காணவேண்டும், அவர் அருளாசியைப் பெறவேண்டும் என்கிற அவா ராஜமாணிக்கத்தின் உள்ளத்தில் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது.

இப்போதெல்லாம் ராஜமாணிக்கத்தின் உள்ளத்தில் இசையின் நினைவு தவிர வேறு எதுவுமே இல்லை. 'கற்றது கை அளவு; கல்லாதது உலகளவு. இசைக் கலையின் நுட்பங்கள் எத்தனை எத்தனையோ! இயன்ற வரையில் முயன்று எல்லாம் தெரிந்துகொள்ள வேண்டும்'—இந்த எண்ணமும் ஆர்வமும் அவரை எந்நேரமும் ஊக்கிக் கொண்டே இருந்தன. சதாகாலமும் ஓயாத வாய்ப் பாட்டு; ஒழிவில்லாத வயலின் சாதகம். சில சமயங்களில் வாய் விட்டுப் பாடிக்கொண்டே வயலின் சாதகம்—இப்படி அவர் நாளுக்கு நாள் முன்னேறியபடி இருந்தார். எனினும் அவர் மனம் திருப்தியுறவில்லை. 'இசைக் கலை . சம்பந்தமாக

இன்னும் சிறப்பு எங்கே எங்கே?' என்று அவர் உள்ளம் தேடி அலைந்தபடி இருந்தது.

இந்நிலையில் திருச்சியில் நாமக்கல் நரசிம்ம ஐயங்கார் செய்த கச்சேரி ஒன்றை அவர் கேட்டார். அவருடைய இசைச் சிறப்பிலும் விமரிசையாகப் பல்லவி பாடும் ஆற்றலி லும் உள்ளத்தைப் பறிகொடுத்தார். கச்சேரிக்குப் பின் அவரைக் கண்டு வணங்கினார். தம் ஆர்வத்தை வெளியிட் டார். "ஸ்ரீரங்கத்திற்கு வா. என்னால் ஆனதைச் செய்கி றேன்" என்றார் ஐயங்கார்.

சில நாள் கழித்து ராஜமாணிக்கம் ஸ்ரீரங்கம் சென்றார். ஐயங்கார் அவரை அன்போடு வரவேற்று ஆதரவாகப்பேசி அவர் கோரி வந்ததை மனமார அருளத் தொடங்கினார்.

அதற்குப் பின் ராஜமாணிக்கம் அடிக்கடி ஸ்ரீரங்கம் சென்று சில நாள் அங்கே தங்கி வரலானார். ஐயங்காரிடம் மிகத் தீவிரமாகப் பாடம் கேட்டுத் தம்முடைய ஞானத்தை வெகுவாக வளர்த்துக்கொண்டார். அவருடைய இசை ஞானம் இம்முயற்சியால் மெருகேறிப் பிரகாசிக்கலாயிற்று.

இப்படியாகப் பத்து வருஷத்து மொத்தப் பயிற்சியில் ராஜமாணிக்கத்தின் சங்கீத ஞானமும் செயலாற்றும் திற னும் மிக மிக உயர்வைப் பெற்றன.

## 13. குரு பீடம்

(1918)

**வை**ரம் பிறப்பினால் பெறும் சிறப்பு மிகச் சாதா ரணம். நுட்பமான முறையில் பட்டை தீட்டப்பெற்ற பின் அது அடையும் சிறப்பு மிகப் பிரமாதம். மெருகு ஏற ஏறத்தான் அணியின் மதிப்பு அதிகரிக்கிறது.

ராஜமாணிக்கம் பிள்ளையின் இசைப் புலமை அப்படித் தான் மெருகேறிப் பிரகாசிக்கலாயிற்று. கும்பகோணம் கந்தசாமி பிள்ளை, பந்தணை நல்லூர் சின்னையா பிள்ளை, திருவிசை நல்லூர் நாராயணசாமி ஐயர், திருக்கோடிகாவல் கிருஷ்ணையர், திருக்கோடிகாவல் ராமசுவாமி ஐயர், உமையாள்புரம் சாமிநாதையர், கும்பகோணம் நாகராஜ ராவ், நாமக்கல் நரசிம்ம ஐயங்கார் ஆகியோர் இட்ட உரமும் வார்த்த நீரும் ராஜமாணிக்கத்தின் செயலில் மணம் நிறைந்த நறுமலர்களாய்ப் பூத்துக் குலுங்கத் தொடங்கின.

அவர் புகழ் சுற்று வட்டாரத்தில் எங்கும் பரவத் தொடங்கிற்று. கும்பகோணம், மாயூரம், திருவாரூர், நாகப்பட்டினம், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி முதலிய நகர்ப்புறங்களிலும் அவற்றைச் சார்ந்த சிற்றூர்களிலும் அவருக்கு அடிக்கடி கச்சேரிகள் நடைபெற்று வந்தன. அவர் பெருமையை அறிந்த பெற்றோர் சிலர் தங்கள் மக்களுக்கு அவரிடம் இசை பயில்விக்க விரும்பினர்.

ராஜமாணிக்கத்தின் பரந்த உள்ளம் அச்செயலை வரவேற்றது. ஆனால் இருபது பிராயமே உடைய தாம் குரு பீடத்தில் அமர்வது பொருந்துமா? தாமே பெரியோர்களைத் தேடி இன்னமும் பயிற்சி பெற்றுக்கொண்டிருக்கும் நிலையில் மற்றவருக்குப் பாடம் சொல்ல முன் வந்தால் அதில் வெற்றி கிட்டுமா? என்றெல்லாம் யோசித்தார்.

ஆர்வம் நிறைந்த பெற்றோர்கள் அவரை யோசிக்க விடவில்லை. வித்தியாதானத்தை மறுப்பது பாபம் என்ற முடிவில் கடவுளே துணை என்று அவர் செயலில் ஈடுபட்டார்.

நாலைந்து மாணவர்கள் அப்போது அவரிடம் குருகுல வாசம் செய்யத் தொடங்கினர். எவ்வளவு முக்கியமான

வேலைகள் இருந்தாலும், வெளியூர்ப் பிரயாணம் சென்று அலுத்து வந்தாலும் மாணவர்களுக்குப் போதிக்கும் கடமையை அவர் மறந்ததே இல்லை. கடமையைக் கழிக்கும் முறையில் செயல் புரிந்ததும் இல்லை. மாணவர்களின் ஆர்வமும் அக்கறையும் சற்று ஏறத்தாழ இருந்தாலும் அவர் மிகுந்த பொறுப்புடன் போதித்து வரத் தொடங்கினார்.

## 14. அரிய சந்தர்ப்பம்!

(1919)

**வே**ணுகான மேதை சரப சாஸ்திரிகள் சிறந்த பக்திமான். அவர் கும்பகோணம் சோலையப்ப முதலி தெருவிலே வாழ்ந்து வந்தார். அங்கே உள்ள ராம மடத்தில் ஆண்டுதோறும் மிக்க விதரணையுடன் ராமநவமி உற்சவம் நடத்தி வந்தார்.

அதே காலத்தில் அதே ஊரில் வாழ்ந்துவந்த கண்ணன் ஐயங்கார் என்பவரும் 'லைபரெரி ராம மடம்' என்ற இடத்தில் ராமநவமி உற்சவத்தை வெகு சிறப்பாகக் கொண்டாடி வந்தார். இரண்டு இடங்களிலும் பாகவத சம்பிரதாயப்படி உற்சவம் நடைபெறும். பக்த கோடிகளுக்கு நல்ல வாய்ப்பு! திவ்வியமான பஜனை, இசையும் பக்தியும் கலந்து பரிமளிக்கும் இன்னிசைக் கச்சேரிகள் முதலியவற்றை நிரம்ப ரசிக்கும் பேற்றை அவர்கள் பெறுவர்.

1919-ஆம் ஆண்டில் கண்ணன் ஐயங்கார் நடத்திய உற்சவத்தில் ராமநாதபுரம் ஸ்ரீநிவாச ஐயங்கார் (பூச்சி ஐயங்கார்) கச்சேரிக்கு ஏற்பாடாகி இருந்தது. மதராஸ் பாலகிருஷ்ணையர் வயலின், கும்பகோணம் அழகநம்பி பிள்ளை மிருதங்கம்.

ஏதோ அசந்தர்ப்பத்தினால் அன்று பாலகிருஷ்ணையர் வந்து சேரவில்லை. உற்சவ நிர்வாகிகள் ராஜமாணிக்கத்தைப் பூச்சி ஐயங்காருக்கு வாசிக்கும்படி கோரினார்கள். திருவிடமருதூரில் போலவேதான் இங்கும். ராஜமாணிக்கம் முதலில் தயங்கினார்; எல்லோரும் தட்டிக் கொடுத்து உற்சாகமூட்டவே பின்னர் இணங்கினார். முதல் முறையிலே கிட்டிய வெற்றி இப்போது சற்றுத் தைரியத்தை அளித்தது.

குறிப்பிட்ட நேரத்தில் கச்சேரி ஆரம்பம் ஆயிற்று. வெகு சிறப்பாய்த் தொடர்ந்து நடந்தது. எல்லாரும் கொண்டாடினார்கள்.

## 15. ஆகிவந்த அவையில்
(1921)

ராஜமாணிக்கம் பிள்ளைக்கு வயது 23. தமிழ் நாட்டின் தென் பகுதிகளில் அவருடைய கச்சேரி நடைபெறாத இடமே இல்லை; கேட்டு ரசித்துப் பாராட்டாத ரசிகர்களே இல்லை. என்றாலும் அவருக்குச் சென்னையிலும் அதற்கும் வடக்கே உள்ள பெரிய நகரங்களிலும் சென்று கச்சேரிகள் செய்து பெரும் புகழ் பெறவேண்டும் என்கிற ஆர்வம் வளர்ந்துகொண்டே வந்தது. 1921-இல்தான் அவருடைய கனவு நனவாயிற்று.

எழும்பூரில் நடைபெற்று வரும் ஜகந்நாத பக்த சபை சென்னையில் இன்றுள்ள பல சங்கீத சபைகளில் மிகப் பழமையானது. ஆண்டில் மட்டுமன்றி, செயலாற்றும் முறை, நல்ல ராசி முதலியவற்றாலும் அது மிகச் சிறப்புடையது. அன்று முதல் இன்றளவும் கர்நாடக சங்கீதக் கலைக்கு அந்தச் சபை ஆற்றியிருக்கும் தொண்டு அனைவராலும்

கொண்டாடத் தக்கது. பல சங்கீத மேதைகள் அச் சபையில் பலமுறை தங்கள் புலமையைப் பிரகாசிக்கச் செய்து அதன் கீர்த்தியை வளர்த்திருக்கிறார்கள். இன்று நம்மிடையே வாழ்ந்து, கர்நாடகச் சங்கீதக் கலைக்குச் சிறந்த முறையில் கலைச் சேவை செய்துவரும் பெரிய பெரிய வித்துவான்கள் எல்லாரும் ஆரம்பகாலத்தில் அந்தச் சபையில் கச்சேரி செய்து கலாதேவியின் அருளாசியைப் பெற்றவர்களே. அங்கே அமர்ந்து பாடியவர் எவரும் புகழேணியில் ஏறாமல் இருந்ததே இல்லை என்பது இன்றும் பொருந்தும். சென்னை வட்டகையில் அங்குதான் முதல் முதலாக ராஜமாணிக்கத்தின் கச்சேரி நடந்தது.

அம்மங்குடி ராதாகிருஷ்ணையர் அப்போது கர்நாடக இசையுலகில் கீர்த்தியுடன் பிரகாசித்து வந்தார். அடக்கமான முறையில் அனைவரோடும் பழகி, கலைப் பணியாற்றி, புகழும் பொருளும் பெற்று வாழ்ந்து வந்த பெரியார் அவர்.

அவருடைய கலை ஆற்றலில் கர்நாடக சம்பிரதாய சுத்தம், காம்பீரியம், நேரிய வழி முதலியன பரிபூரணமாய் அமைந்திருந்தன. அதே சமயத்தில் தற்கால ரசிகப் பொதுமக்களை ஓரளவு திருப்தி செய்விக்கத் தக்க நவீன அம்சங்களும் அமைந்திருந்தன. முன்னவை அவர் பிரயாசைப்பட்டுப் பயின்று சுயமாக்கிக்கொண்டவை; பின்னவை பார்த்தும் கேட்டும் அநுபவித்தும் உணர்ந்ததன் விளைவாகத் தாமே அவரிடம் வந்து சேர்ந்தவை. அந்த நாளில் நவீனம் இத்தனை பரவியிராததால் ராதாகிருஷ்ணையரின் இசை சபா ரஞ்சகமாகவே இருந்தது.

ராதாகிருஷ்ணையருக்கு ராஜமாணிக்கத்திடமும், அவருடைய வாத்திய இசையிடமும் நல்ல பிடிப்பும் மதிப்பும் உண்டு. ஜகந்நாத பக்தஜன சபை நிர்வாகிகளுக்கு நீண்ட

நாட்களாக ராஜமாணிக்கத்தின் வயலினை ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற அவா. ராதாகிருஷ்ணையரின் கச்சேரிக்கு ஏற்பாடு செய்கிறபோது இதைப்பற்றி அவரைக் கலந்தார்கள். அவர் பூரண சந்தோஷத்துடன் அபிப்பிராயம் கொடுக்கவே சபை நிர்வாகிகள் மேல் முயற்சிகளில் இறங்கினர்.

குறிப்பிட்ட நாளில் கச்சேரி நடைபெற்றது. மிகவும் சிறப்பாக அமைந்தது. புதிய வித்துவான் ஒருவரின் வயலினைக் கேட்கப் போகிறோம் என்கிற உற்சாகத்தில் சபையில் வந்து கூடிய ரசிகர்களின் எண்ணிக்கை ஏராளம். கச்சேரி முடிந்து எல்லாரும் வெளியேறுகிறபோது அனைவர் முகத்திலும் மலர்ச்சி தென்பட்டது; பேச்சில் பாராட்டுரைகள் வெளிப்பட்டன. அந்தப் பாராட்டில் பெரும் பங்கு ராஜமாணிக்கத்திற்கு உரியது.

## 16. மகப் பேறு

(1922)

கும்பகோணம் நாகேசுவரர் வடக்கு வீதி அன்று ஆனந்த வெள்ளத்தில் மிதந்துகொண்டிருந்தது. குறிப்பாக ராஜமாணிக்கம் பிள்ளையின் இல்லங்களில் ஆனந்த வெள்ளம் கரைபுரண்டு ஓடிக்கொண்டு இருந்தது. அனைவருடைய வாயிலும் பெரிய பெரிய கற்கண்டுக் கட்டி நிறைந்திருந்தது. அதை வாயில் அடக்கியபடி அவர்கள் பேசும் பேச்சில் இனிமை ஒலித்தது. வாயிலே இனிமை, சொல்லிலே இனிமை, பார்வையில் இனிமை, செயல்களிலும் இனிமை, அனைத்திலுமே இனிமை, இனிமை, இனிமை!

ராஜமாணிக்கம் அன்று பெரு மகிழ்ச்சியில் மூழ்கி இருந்தார். அவரைக் காணவந்த அன்பர்கள் அவர் தந்தை

ஆனதைக் குறித்துக் குசலம் விசாரித்துத் தங்கள் மகிழ்ச்சியை வெளியிட்டார்கள். அவர் வந்தவர்களை எல்லாம் முறுவலோடு வரவேற்றார்; அகங்குளிரப் பேசினார்; சந்தனம், கற்கண்டு, சர்க்கரை, பழம், தாம்பூலம் முதலியவற்றை வாரி வாரி வழங்கினார்.

இத்தனை சந்தோஷ ஆரவாரங்களுக்கும் மூலகாரணமாக அந்த வீட்டிலே தோன்றிய புதிய ஜீவன் பெண் குழந்தை. பெரியவர்கள் அதற்கு **ஜீவரத்தினம்** எனப் பெயரிட்டார்கள்.

வீட்டில் ஒவ்வொரு வைபவம் நிகழும்போதும், வெளியிடங்களில், கச்சேரிகளில் பிரமாதமான பாராட்டுகள் கிட்டும்போதும் ராஜமாணிக்கத்திற்குத் தம் தாயின் நினைவே பெரு நினைவாக இருக்கும். 'இவ்வளவு மேன்மைகளுக்கும் காரணம் என் அன்னையல்லவா?' என்றெண்ணிப் பெருமூச்செறிவார். அந்த நினைப்பின் பிரதிபலிப்பே தம் செல்விக்கு அவர் சூட்டிய பெயர்.

## 17. மாணவ மாணிக்கங்கள்

(1923)

ராஜமாணிக்கம் 1918-இல், அதாவது தமது இருபதாவது பிராயத்திலேயே குரு ஸ்தானத்தை ஏற்றுப் பீடாரோகணம் செய்தார் என்றாலும் அப்போது அவரிடம் குருகுல வாசம் செய்ய வந்த மாணவ மாணவிகள் இசை பயின்று முன்னேறுவதில் போதிய வசதி உடையவர்களாக இல்லை.

1923-இல், அதாவது அவருடைய இருபத்தைந்தாவது வயதில்தான் இசைப் பயிற்சியை முழு லட்சியமாகக் கொண்ட மாணவர் அவரிடம் வந்து சேர்ந்தார். அடுத்து

அடுத்து நாளடைவில் பல மாணவ மாணவிகள் வரத் தொடங்கினார்கள்.

எம். எம். தண்டபாணி தேசிகர், கோவிந்தராஜ பிள்ளை, சம்பந்தம் பிள்ளை, சடகோப ஐயங்கார், ஞான சிகாமணி, ஜனார்த்தனம், சிவசாமி, கிருஷ்ணசாமி, ராம மூர்த்தி ஐயர், கணபதி பிள்ளை, சந்தானமையா, லலிதா, ராஜாமணி—முதலியவர்கள்.

இவர்கள் மிகுந்த அக்கறையுடன் தக்க முறையில் கலையைப் பயின்று, தேர்ந்து மிகுந்த சிறப்பெய்தித் தங்கள் குருவின் புகழை நிலைநாட்டி வருகிறார்கள். ஒரு சிலர் இசையுலகில் பிரமாதமான புகழ் பெற்றிருக்கிறார்கள் என்பதும் குறிப்பிடத் தக்கது.

இசை உலகிலும் திரை உலகிலும் சிறந்த புகழ்பெற்று இன்று சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இசைத் துறைத் தலைவராகப் பதவி வகித்துவரும் தண்ட பாணி தேசிகர் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர். பிறப்பு 1908. தமிழில் கீலக ஆண்டு ஆவணித் திங்கள் பதினோராம் நாள். தேசிகர் என்பது அவருடைய குலப் பட்டம். அவருக்கு முன் தோன்றியவர் ஒரே ஒரு தமக்கை மட்டுமே. தகப்பனார் பெயர் முத்தையா தேசிகர். குலத்தொழில் கதா காலட்சேபம் செய்தலும் ஆண்டவ னுக்கு அர்ப்பணமாகத் தேவாரம் திருப்புகழ் முதலிய வற்றை இசை முறை வழுவாது ஓதுதலும். பூர்விகம் தஞ்சை ஜில்லாவில் நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு அருகே ஆறு மைல் தூரத்திலுள்ள திருச்செங்காட்டங் குடி.

ஒன்றரை வயதில் தேசிகர் தாயை இழந்தார். பிறகு அவர் தந்தையார் பூவனூருக்கு வந்து வசிக்கலானார். அந்த

ஊர்த் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் தேசிகர் கல்வி பயின் றார். அண்மையிலுள்ள பெரியோர் மனம் வைத்துச் சிறிது வடமொழிப் பயிற்சியும் செய்து வைத்தனர். தேவார பாடசாலையில் உபாத்தியாயராக இருந்த தேசிகரின் சிறிய தகப்பனார் மாணிக்க தேசிகர் தாமே ஆசானாக இருந்து குடும்பத் தொழிலில் அவருக்குப் பயிற்சி அளிக்க லானார். அதற்கு அநுகூலமாகச் சடையப்ப பிள்ளை என்ற நாதசுரகாரரிடம் தேசிகருக்கு இசைத் துறையில் ஆரம்பப் பயிற்சி நடைபெற்றது. அப்போது அவருடைய சாரீரம் மணி ஓசை போன்று ஆறு கட்டைச் சுருதிக்கு எட்டக் கூடியதாக இருந்தது. அதன் உதவியாலும், பரம்பரையை ஒட்டி வந்த இயற்கையான ஞானத்தாலும், அதுவரையில் பாடமாகியிருந்த சில தேவாரம் திருப்புகழ் முதலியவைகளைக் கொண்டும் பிள்ளைப் பிராயத்தில் வெகு ரஞ்சகமாக ஒரு கச்சேரி செய்து பேர் எடுத்துவிட்டார் தேசிகர். அந்த முதல் கச்சேரி நடந்த இடம் தஞ்சை ஜில்லாவில் உள்ள திருமருகல் என்ற பிரசித்தி பெற்ற ஊர் ஆகும்.

அந்த ஊர் இரண்டு வகையால் மிகப் பிரசித்தியுடை யது. மனிதர் வழக்கில் சிவலிங்கம் சாட்சி உரைத்தது இந்த ஊரில்தான். பிரபல நாதசுர மேதையாகத் திகழ்ந்த நடேச பிள்ளை தோன்றி வளர்ந்து கலை பயின்று புகழ் பெற்று வாழ்ந்ததும் இங்கேதான்.

இத்தகைய புண்ணிய க்ஷேத்திரத்தில் ஆண்டவன் சந்நிதியில் முதல் முதலாகப் பாடினதன் விளைவாகத் தேசி கருக்கு அன்று முதற்கொண்டு சிறு புகழ் ஏற்பட்டு விட்டது. 'பூவனூர்ப் பையன்', என்றும் 'திருப்புகழ்த் தண்டபாணி' என்றும் பலரும் குறிப்பிட்டுப் பேசத்

தொடங்கினார்கள். அதன் பின்னர் அவர் வேகமாக முன்னேறலானார்; அன்பர்களின் நினைவிலே இடம் பெற ஆரம்பித்தார்.

இன்று நம் நாட்டிலே அபூர்வமாகச் சில இடங்களிலே நாம் காணும் ஓர் உத்தமமான செயல் அன்று அநேகமாக எல்லா இடங்களிலுமே நிகழ்ந்து கொண்டிருந்தது. ஆலயத்திலிருந்து கடவுள் வெளிப்பட்டு வீதி உலா வரும் போது கடவுளின் பின்னே கை கோத்த வண்ணம் அந்தணர்கள் மும்மறைகளையும் ஓதி வருவர். அவர்களுக்குப் பின்னே தேவாரக் குழுவினர் தேவாரங்களைப் பக்தியுடன் இசைத்து வருவர். முன்னே மேளமும், பாண்டும், உருத்திர கணிகையரின் திருநடமும்; பின்னே வேத கோஷமும் தேவார முழக்கமும். பக்தியற்ற பாமரர் உள்ளமும் பரவசப்பட்டு ஆண்டவனைத் தொழக்கூடிய அரிய சூழ்நிலை அது. ஊரில் திருவிழா என்றால் ஊர் எல்லைக்கும் வெளியே கூடப் பக்தி மணம் கமழும்.

இத்தகைய பக்திச் சூழ்நிலைக்குத் தக்க காரணங்களில் ஒன்றான தேவாரக் குழுவின் நடுநாயகமாக விளங்கி வந்தார் இளைஞர் தண்டபாணி தேசிகர்.

அக்கம் பக்கத்து ஊராரெல்லாம் அவரை அழைத்துப் பாடச் செய்தனர். 'பூவனூர்ப் பையன் பாடுகிறான்' என்றால் கூட்டத்திற்குக் குறைவே இருக்காது. பல ஊர்களில் அவர் பாடிப் புகழையும் ஏராளமான பரிசுகளையும் பெற்றார். நாதஸ்வர சக்கரவர்த்தி எனப் புகழ் பெற்ற திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை, மன்னார்குடி ராஜகோபால் பிள்ளை, கொன்னக்கோல் மன்னார்குடி பக்கிரி பிள்ளை, பங்களூர்த் தாயம்மாள்—போன்ற இசை

மேதைகள் பலர் தேசிகரின் சங்கீதத் திறமையை மெச்சி உற்சாகப்படுத்தினர்.

இதற்கிடையில் முத்தையா தேசிகர் கதா காலட்சேபம் செய்வதற்காகச் சிங்கப்பூருக்குச் சென்றார். சில நாட்களில் அங்கேயே காலமானார்.

பின்னர்ச் சிறிது காலத்தில் மாணிக்க தேசிகரும் காலமாகிவிடவே தேசிகர் கும்பகோணம் சென்று தம் தமக்கையின் வீட்டில் வசிக்கலானார். அங்கிருந்தபோதுதான் அவருக்கு ராஜமாணிக்கத்தின் தொடர்பு ஏற்பட்டது.

வர்ணம், அலங்காரம் முதலிய அடிப்படைப் பயிற்சிகள் வலுவான முறையில் முன்னமே அமைந்திருந்தன. நல்ல சாரீரம் இருந்தது. இவற்றை எல்லாம் கருதிய தேசிகரின் தாய்மாமன் 'சிறந்த முறையில் கர்நாடக சங்கீதத்தைப் பயின்றால் நலமாகுமே' என எண்ணினார். அவர் தாம் தேசிகரை ராஜமாணிக்கத்திடம் அழைத்துச் சென்று குருகுல வாசத்தில் ஈடுபடுத்தினார்.

அப்போது தேசிகருக்கு வயது பதின்மூன்று. தொடர்ந்து நான்கு வருடகாலம் பயிற்சி நடந்தது.

ராஜமாணிக்கத்துக்கு அப்போது வயது 23 தான். குருவுக்கும், மாணவனுக்குமிடையே பத்து ஆண்டுகளே வித்தியாசம். ஆண்டுக் கணக்கில் என்ன இருக்கிறது? ஒரு வயது, சில மாதம் மட்டுமே வித்தியாசமுடைய குரு-மாணவர் இல்லையா? கல் ஆலின் கீழ் அமர்ந்து தத்துவத்தைப் போதித்த குருவின் தோற்றம் மிகவும் சிறு பிராயத்ததே. மாணவர்களாக வீற்றிருந்த முனிவர்களின் தோற்றமோ மிக்க முதுமையை உடையது.

ராஜமாணிக்கம் தேசிகரைத் தம் உடன் பிறந்த தம்பி போல், தம் வயிற்றில் பிறந்த மகன் போல் பாவித்தார்.

தேசிகரும் அதற்கு ஈடு கொடுக்கிற முறையில் குருவைத் தந்தை போலவும், தமையனார் போலவும் பாவித்து அன்புடனும் பக்தியுடனும் பணிவிடை புரிந்து கலையைப் பயின்றார். அவர்களிடையே தோன்றி வளர்ந்த அன்பையும், உழைப்பையும் தேசிகரின் இன்றைய கலைப் பணியிலே அனைவரும் காண்கிறோம்.

குரு, தாம் மாணவர்களுக்கு அளிக்கும் போதனைக்கு ஈடாக அவர்களிடமிருந்தோ, அவர்களை முன்னிட்டு அவர்களைச் சார்ந்தவர்களிடமிருந்தோ பெறுகிற பொருளோ மற்றவைகளோ பொருட்டே அல்ல. அவை நிலைப்பதும் இல்லை. ஆனால் மாணவன் ஒருவன் உலகம் புகழும் கலைஞனாக விளங்குகிறான் என்றால் அதைக் கண்டும் கேட்டும் பூரித்து மகிழ்வது ஒன்றே குருவின் உள்ளத்துக்கு உகந்த காணிக்கை. தேசிகர் இன்று உலகம் புகழும் கலைஞராக விளங்குகிறார். ராஜமாணிக்கத்துக்கு வேறு என்ன வேண்டும்?

கோவிந்தராஜ பிள்ளை இசை வேளாளர் வகுப்பினர். பூர்விகம் தஞ்சை ஜில்லாவில் உள்ள வழுவூர் என்ற கிராமம். அது பாவங்களைப் போக்க வல்ல புண்ணியத் தலம். அட்ட வீரட்டங்களில் ஒன்று. ஆண்டவனின் பெயர் கிருத்திவாசன். அதாவது யானைத் தோலை ஆடையாகக் கொண்டவன். மாசியில் அங்கே பிரம்மோற்சவம். அண்மையில் உள்ள தாருகா வனத்து ரிஷிகள் ஆண்டவன் மீது கோபங்கொண்டு செய்த ஆபிசார யாகத்தில் தோன்றிய மான், மழு, உடுக்கை முதலியவற்றை ஆண்டவன் ஏற்று, தன்னை விழுங்க வந்த யானையைச் சங்கரித்து அருளினான் என்ற ஐதீக நிகழ்ச்சிகளைக் கொண்டது, அந்த உற்சவம்.

வழுவூருக்கு மேலும் சில வகையாலும் புகழ் உண்டு. பரதக் கலையில் மிகமிகத் தேர்ந்த புலமை பெற்ற சாமு நட்டுவனார் தோன்றி வளர்ந்து புகழ் பெற்றது அங்கே தான். பெரியோர்கள் அவரை, 'சுருட்டி சாமு' என்று அழைப்பார்கள். அழகிய பெண் ஆட, இவர் பாட, ரசிகர்கள் அழகையும் அபிநயத்தையும் கூட மறந்து பாட்டை ரசிப்பார்கள். நாட்டியத்தைச் சற்று நிறுத்திவிட்டுக்கூட நட்டுவனாரைச் சுருட்டி ராகத்தைப் பாடச் சொல்லிக் கேட்பார்கள்.

இத்தகைய சிறப்புடைய கலைஞரின் மகன் மாணிக்க நட்டுவனார். மருமகன்—அதாவது சகோதரி மகன்—இன்று நம்மிடையே நிறைந்த புகழுடன் திகழ்ந்துகொண்டிருக்கும் ராமைய்யா பிள்ளை.

தவில் வாத்திய மேதையாகத் திகழ்ந்த முத்துவீர் பிள்ளையின் பிறப்பிடமும் இந்த வழுவூர்தான். தவில் வாத்தியத்தில் இணையற்ற மேதையாகத் திகழ்ந்த அம்மாப் பேட்டை பக்கிரி பிள்ளைக்கு அடுத்தபடியாக முத்துவீர் பிள்ளையைக் குறிப்பிடுவார்கள்.

நாதசுர வித்துவான் வீராசாமி பிள்ளை வழுவூரின் புகழுக்கு மற்றொரு காரண கர்த்தர். அவர் இசை மேதை கோனேரி ராஜபுரம் வைத்தியநாதையரிடம் இசை பயின்றவர். சங்கீத வித்துவான் முடிகொண்டான் வேங்கட ராமையர் முதலிய பல கலைஞர்களுக்குக் குரு ஸ்தானமாக விளங்கிய தவில் வாத்திய மேதை அம்மா சத்திரம் கண்ணுசாமி பிள்ளைக்குக் கோனேரிராஜபுரம் வைத்திய நாதையரிடம் நெருங்கிய நட்பு; வழுவூர் வீராசாமி பிள்ளையிடம் அளவு கடந்த அன்பு. வைத்தியநாதையரிடம் வீராசாமி பிள்ளை முறையாக இசை பயில நேர்ந்ததற்கு இந்தக் கூட்டுறவே காரணம்.

வீராசாமி பிள்ளையின் சகோதரி குமாரராகத் தோன்றியவர் கோவிந்தராஜ பிள்ளை. 'வழுவூர் கோவிந்த ராஜ பிள்ளை' மாயூரத்தை வாசஸ்தலமாகக் கொண்டதால் 'மாயூரம் கோவிந்தராஜ பிள்ளை' ஆனார்.

இவர் 1912-இல் அதாவது பரிதாபி ஆண்டில் பிறந்த வர். 1922-இல் அதாவது பத்தாவது பிராயத்தில் மாயூ ரத்தில் வாழ்ந்து வந்த பூதலிங்க ஐயர் என்ற வயலின் வித்துவானிடம் இசை பயிலத் தொடங்கினார்.

சென்ற தலைமுறையைச் சார்ந்த இசை மேதைகளில் சிமிழி சுந்தரமையர் அவர்களுக்கு ஒரு முக்கியமான இடம் உண்டு. அவர் அப்பொழுது மாயூரத்தில் வந்து சில காலம் தங்கி இருந்தார். அதனால் கோவிந்தராஜ பிள்ளைக்குச் சுந்தரமையரிடம் இசை பயிலும் வாய்ப்புக் கிட்டிற்று. பூதலிங்க ஐயரிடம் பயின்ற அதே சமயத்தில் தொடர்ந்து இரண்டு வருஷ காலம் சுந்தரமையரிடமும் பயின்றார். பிறகு தாய் மாமனாகிய வீராசாமி பிள்ளையிடம் ஓர் ஆண்டு.

பின்னர் 1925-இல் ராஜமாணிக்கம் பிள்ளையிடம் குரு குல வாசத்தில் ஈடுபட்டார். கும்பகோணத்தில் குருவின் இல்லத்தில் தங்கியிருந்து சில காலமும், கிராமத்திலிருந்து போவதும் வருவதுமாகச் சில காலமுமாக ஐந்து ஆண்டு கள்—1930 வரை தொடர்ந்து பயிற்சி பெற்றார்.

1930 ஆகஸ்டில் மாயூரத்தைச் சார்ந்த கூறை நாட்டில் ஸ்ரீ புனுகீசுவரர் ஆலயத்தில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் சந்நிதியில், கூறை நாட்டில் வாழ்ந்து வந்த சங்கீத மேதை சாம்பமூர்த்தி ஐயர் தலைமையில் இவருடைய இசை அரங்கேற்றம் வெகு சிறப்பாக நடைபெற்றது. குரு 'சோலோ வயலின்' வாசித்தார்; மாணவர் பக்கத்தில்

அமர்ந்து வாசித்தார். மாயூரம் லட்சுமண ராவ் மிருதங்கம் வாசித்துச் சிறப்பித்தார்.

அடுத்தபடியாக, கூறைநாடு சுந்தரமூர்த்தி விநாயகர் கோயில் கும்பாபிஷேகத்தில் சங்கீதவித்துவான் மாயூரம் கே. வி. வேணுகோபாலையர் கச்சேரியில் பக்க வாத்தியமாக வயலின் இசைத்தார். மூன்றாவதாகக் கோயம்புத்தூரில் கல்யாண வைபவத்தில் சரசுவதி அம்மாள் கச்சேரிக்கு வாசித்தார். முதலில் குரு, பிறகு விநாயகர், பின்னர்ச் சரசுவதி—இப்படி மங்களகரமாகத் தொடங்கிற்று இவருடைய இசை மேடை அநுபவம். பின்னர் 1932-இல் தஞ்சாவூர் கோபால ஐயர், 1933-இல் வேணுகான விற்பன்னர் மாயூரம் கே.வி. ராஜாராம ஐயர், மாயூரம் கிருஷ்ணையர், 1937-ல் செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர் முதலிய பிரபல வித்துவான்களுக்கு வாசிக்கலானார்.

குருகுல வாசத்திற்குப் பின்:—

இளம் பிராயத்திலேயே தொழில் முறையில் அவைக்கு வந்து, வந்த உடனேயே புகழ் ஏணியில் ஏறத் தொடங்கிய அபூர்வமான சிலரில் இவரும் ஒருவர். குருவின் அருள் ஆசியுடன் நல்ல நாளில் இசை அரங்கம் ஏறிய இவர் மளமள என்று முன்னேறலானார். இளம் வித்துவான்கள் பலருக்கு வாசித்துத் தேர்ந்தார். பெரிய வித்துவான்களும் தம்மை மறந்து 'சபாஷ்' போடும்படி அவர்களுக்குப் பக்க வாத்தியம் இசைக்கலானார். அரியக்குடி, மகாராஜபுரம், செம்பை, முசிரி, முடிகொண்டான், செம்மங்குடி, ஜி. என். பி., மதுரை மணி ஐயர், ஆலத்தூர்ச் சகோதரர்கள் முதலிய பலருக்கும் இவர் வாசித்து வருகிறார். குருவைப் போலவே பக்க வாத்தியம் இசைப்பதில் தனித் திறமை பெற்றவர் இவர். பல சமயங்களில் பல இடங்களில் குருவுக்குப்

பதிலாக இவர் செயலாற்றியிருக்கிறார். "உங்கள் மாண வரை அனுப்புங்கள்" என்று வித்துவான்கள் கேட்பார்கள்; ரசிகர்கள் கேட்பார்கள். குருவும் முழு நம்பிக்கையோடு ஆசி கூறி அனுப்பி வைப்பார்.

செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர் இசைத்துள்ள இசைத் தட்டுக்களில் தம் குருவோடு இவரும் வயலின் வாசித்துள் ளார். சங்கீத விதூஷி எம். எஸ். சுப்புலட்சுமிக்கு 1936 ஜனவரி முதல் 1942 ஜூன் 30 வரை ஆறரை ஆண்டுகள் தொடர்ந்து வாசித்துச் சிறப்பித்திருக்கிறார்.

1946-இல் திருவனந்தபுரம் ஆஸ்தான வித்துவானாக நியமனம் பெற்றார். அப்போது அங்கே ராஜமாணிக்கம் பிள்ளையும் ஆஸ்தான வித்துவான். குருவும் மாணவரும் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் ஆஸ்தான வித்துவான்க ளாகத் திகழ்வது, குருவின் பெருமையை விளக்குவதாகும்.

இவர் எல்லா இடங்களிலும் எல்லா வித்துவான்க ளாலும் எல்லா ரசிகர்களாலும் விரும்பப் பெறுபவர். உருவத் தோற்றம், முறுவல் முகம், இனிய பேச்சு, குளிர்ந்த பார்வை, நட்பின் உயர்வு முதலிய எல்லா அம்சங் களிலும் குருவின் அடிச்சுவட்டைப் பின்பற்றி விளங்கி வருபவர்.

சம்பந்தம் பிள்ளையின் பூர்விகம் திருவாளொளிப் புத்தூர். பின் நாட்களில் இவர் கும்பகோணத்தை வாச ஸ்தலமாக்கிக் கொண்டார். அதனால் 'கும்பகோணம் சம்பந்தம் பிள்ளை' என்று குறிப்பிடப் பெறுவார். தற் போது மாயூரத்தில் இருந்து வருகிறார். இவரும் தக்க பருவத்தில் ராஜமாணிக்கத்தை அணுகி முறையாகக் குரு குல வாசம் செய்து கலையில் முன்னேறியவர். சிறந்த வித்துவான்களின் மேடைக் கச்சேரிகளிலும் ரேடியோ

விலும் இவருடைய ஆற்றல் பிரகாசித்து வருகிறது. வித்து வான்களும் ரசிகர்களும் மனமார, வாயாரப் புகழ்ந்து போற்ற வல்லது இவருடைய கலைத் திறன்.

ஜனார்த்தனம், சிவசுவாமி, கிருஷ்ணசாமி ஆகியோரும் மேற்குறித்த முறையில் குருகுல வாசம் செய்தவர்கள்; முன்னேற்றம் பெற்று வருபவர்கள்.

சடகோப ஐயங்கார் நெடுந்தெரு என்ற ஊரைச் சார்ந்தவர். இவரும் தேசிகரைப் போலவே பிள்ளை அவர் களிடம் வாய்ப்பாட்டுக் கலையைக் கோரி வந்து பயிற்சி பெற்றவர். இப்படியே பங்களூர் லலிதா, ராஜாமணி ஆகி யோரும் பிள்ளை அவர்களிடம் முறையாக இசை பயின்ற வர்கள்.

ராமமூர்த்தி ஐயர் கும்பகோணத்தைச் சார்ந்தவர். கணபதி பிள்ளைக்கு விருதுநகர். சந்தானமையா மன்னார் குடியைச் சார்ந்தவர். இவர் இப்போது இல்லை. ஞான சிகாமணி ராஜமாணிக்கத்தின் மைத்துனி குமாரர். வாய்ப் பாட்டுக் கச்சேரி செய்து வருகிறார். இவருடைய இளைய சகோதரர்கள் சாமிநாதன், நடன சிகாமணி இருவரும் தற்போது பிள்ளை அவர்களிடம் குருகுல வாசம் செய்து வருகிறார்கள்.

இன்றும் ராஜமாணிக்கம் வித்தியாதானப் பணியில் கருத்துடையவராக இருக்கிறார். 'மனிதன் மறையும்போது அவனிடம் உள்ள எல்லாச் சக்திகளும் கூடவே மறைந்து விடுகின்றன. கலையும் அதில் அடங்கினதுதான். ஆகவே உடலும் உள்ளமும் வசத்தில் இருக்கிறவரையில் கலையைப் பிறருக்கு அளித்து அது வழி வழியாய்ப் பரவி வளர்ந்து வாழவகை செய்ய வேண்டியது மனிதனின் இன்றியமையாத கடமை'—இது ராஜமாணிக்கத்தின் கொள்கை. "பொரு,

ளுக்காகவும், பேருக்காகவும், பணிவிடைக்காகவும், தவிர்க்க முடியாத தாட்சிண்ணியத்திற்காகவும் மாணவர்களை ஏற்றுக்கொண்டு அவர்கள் காலத்தை வீணடிப்பது தர்மம் அல்ல; மாணவர்களும் கபட்டுத்தனமாக நடந்துகொண்டு கலையைக் கவர முயல்வதும் தர்மம் அல்ல. கலை நன்கு வளர இரு தரப்பிலும் சத்தியம் வேண்டும்'' என்று அவர் கூறுகிறார்.

கலையில் தாம் பிரகாசிப்பது வேறு; வாழையடி வாழையாக மாணவ மாணவிகளைப் பிரகாசிக்கச் செய்வது வேறு. இருவகைகளிலும் பிள்ளை அவர்கள் வெற்றி கண்டவர். ராஜமாணிக்கம் பல மாணிக்கங்களாகச் சுடர்விட்டுப் பிரகாசிப்பதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

## 18. நட்பின் உயர்வு

(1926)

நட்புக் கொள்வதிலும், அதை வளர்ப்பதிலும் ராஜமாணிக்கம் மிக்க ஆர்வம் உடையவர். அவருடைய கம்பீரத் தோற்றமும் வாடாத சிரிப்பும் யாரையும் எளிதில் அவரிடம் ஈடுபடுத்திவிடும். ஒரு முறை அவரிடம் பேசிப் பழகியவர்கள் மறுபடி அவரை மறக்க முடியாது. அவரும் அதே மாதிரி பழகினவர்களை மறக்கமாட்டார். எல்லாருடனும் கலகலவென்று சிரித்துப் பேசிப் பழகுவார். கலை, குடும்பம், ஊர் விஷயம், உலக விஷயம் அனைத்தையும் பற்றி அளவளாவுவார். 'அவர் தம்மிடமே அந்தரங்க நட்புடையவர்' என்று ஒவ்வொருவரும் எண்ணுமாறு அவர் பழகுவார். ஆனால் அவருடைய இருதயத்தில் கொஞ்சம் கொஞ்சமாக இடம் பெற்று அந்தரங்கத்தின் ஆழத்தைக் கண்டு நிலைபேறு கொள்பவர் வெகு சிலர்.

அத்தகைய சிலருள் குறிப்பிடத்தக்க ஒருவர் மருத்துவ நிபுணர் முத்துசாமி ஐயர்.

அவர் திருவையாற்றிலே பிறந்து வளர்ந்தார். நன்கு படித்துப் பட்டம் பெற்ருர். கும்பகோணத்தில் மருத்துவத் தொழிலில் ஈடுபட்டார். அவருக்கும் ராஜமாணிக்கத்திற்கும் 1926-இல் நட்பு ஏற்பட்டது. அந்த வேளே மிகவும் நல்ல வேளே. அன்று தொடங்கிய அவர்கள் நட்பு கடந்த முப்பது ஆண்டுகளாக முதிர்ச்சிபெற்று வருகிறது. மருத்துவ முறையிலே ஏற்பட்ட பரிசயம், ஊர் விஷயம், உலகத்து விஷயம் பற்றின அநுபவ பூர்வமான அளவளாவுதலால் நெருக்கம் பெற்றுக் குடும்ப நண்பர்கள் என்ற அளவுக்கு உயர்வடைந்தது.

"டாக்டர் முத்துசாமி ஐயர் என் உடலில் பிணி சேராமல் பாதுகாத்து வருபவர். அவருடைய பாதுகாப்பையும் மீறி எப்போதாவது ஏதாவது பிணி நேர்ந்தால் உடனடியாகவே தக்க பரிகாரம் செய்து என்னேக் காப்பாற்றுபவர் அவர். டாக்டர்களுக்கு இது இயல்புதான். ஆனல் முத்துசாமி ஐயர் என் உடலே மட்டும் தூய்மைப்படுத்துபவர் என்று சொல்வதற்கில்லே; உடலோடு என் உள்ளத்தையும் தூய நிலேயில் வைத்துப் பரிசுத்தமாக வளர்த்தவர். உள்ளத் தூய்மை உயிரினும் மேலானதல்லவா? ஆகவே என்றும் நான் அவருக்கு மிகவும் கடமைப்பட்டவன்" என்கிருர் பிள்ளே.

ஜவுளி வகையில் 'துகிலி ஜவுளி' என்பது ஒரு காலத்தில் பிரசித்தம். அந்த நாளில் 'துகிலி அங்கவஸ்திர'த்தை விரும்பி அணியாதவர் இரார். அத்தகைய சிறப்பு வாய்ந்த ஜவுளி உற்பத்தியாகும் ஊர் துகிலி. துகில் என்ருல் ஆடை.

சிறந்த ஆடைகளைத் தயாரிக்கும் ஊருக்குத் துகிலி என்ற பெயர் எத்தனை பொருத்தம்?

துகிலியின் அருகே உள்ளது கஞ்சனூர். அதன் அருகே உள்ளது கோட்டூர். 'கஞ்சனூர்க் கோட்டூர்' என்று இதைக் குறிப்பிடுவார்கள்.

அந்த ஊரில் கிருஷ்ணையர் என்ற மிராசுதார் வாழ்ந்து வந்தார். அவருக்குப் பரந்த மனமும், சிறந்த செல்வாக்கும், நிறைந்த அன்பும் உண்டு. ஓரளவு பொருளும் உண்டு. ஆனால் தம்மைவிட உயர்ந்த செல்வ நிலையில் உள்ளவர்களாலும் புரிய முடியாத செயலை அவர் மேற்கொண்டு வெற்றிகரமாகவும் மிக்க விதரணையாகவும் நிறைவேற்றி விடுவார்.

கர்நாடக சங்கீதம் அவருடைய மூச்சுக் காற்று. அந்தக் கலை தழைத்துச் செழிக்க வேண்டுமென்று அவர் இரவும் பகலும் முயன்று வருவார். அவருடைய மனக் குறிப்பில் அகப்படாத கலைஞர்கள் எவருமே இல்லை.

கிருஷ்ணையருக்கு முன்னால் பிறந்த தமையன்மார் இருவர். அவர்கள் பெயர் முறையே சி. சுப்பிரமணிய ஐயர், சி. அனந்தராம ஐயர். சகோதரர்களுக்கு வியாபாரத்தில் ஆர்வம். போதிய ஆற்றலும் இருந்தது. குறிப்பாக ஜவுளி வியாபாரம் அவர்கள் உள்ளத்தைக் கவர்ந்தது.

கிருஷ்ணையர் கும்பகோணத்தில் ஜவுளி வியாபாரம் தொடங்கினார். அமோகமாக நடைபெற்றது. வெகு சீக்கிரத்தில் பிரமாதமான முன்னேற்றம். அண்மையில் உள்ள திருவாவடுதுறை ஆதீனத்தில் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் பட்டத்தில் இருந்த காலம். கிருஷ்ணையருக்கு அந்த மடத்திலே வியாபாரத் தொடர்பு உண்டு. நிறைந்த செல்வாக்கு உண்டு. அதைத் தொடர்ந்து மற்ற மடால

யங்களிலும் கிருஷ்ணையருக்கு வியாபாரத் தொடர்பும் செல்வாக்கும் ஏற்பட்டுப் பெருகின.

கர்நாடக சங்கீதம் கிருஷ்ணையரின் மூச்சுக் காற்று. மகாவைத்தியநாதையர் முதல் பல சங்கீத மகா புருஷர்களின் தொடர்பே அதற்குக் காரணம். ராமநாதபுரம் ஸ்ரீநிவாச ஐயங்கார் கிருஷ்ணையருக்கு மிகவும் இஷ்டமானவர். அவர் கச்சேரியை முன்னிட்டுக் கும்பகோணம் பக்கம் வருகிறபோதெல்லாம் கிருஷ்ணையர் வீட்டில் உறவினரைப் போலச் சிலநாள் தங்குவார். அந்த அளவில் திருப்தியுறாமல் கச்சேரி முதலிய காரியம் எதுவும் இல்லாதபோதும் வெறுமனே வந்து சிலநாள் தங்கியிருப்பார். சிறந்த கலைஞர் உயர்ந்த ரசிகரின் நெருக்கத்தை விரும்புவது கலையின் சக்திகளில் ஒன்று. ஐயங்கார் புதிதாகச் சாகித்தியங்கள் செய்தால் உடனே அதைக் கிருஷ்ணையரிடம் பாடிக் காண்பிப்பார். அவர் அதை ரசிக்கும் முறையைக் கொண்டு தம் சாகித்தியங்களின் தரங்களை எடை போட்டுக் கொள்வார்.

கிருஷ்ணையருக்கு நடேச ஐயர், ராமசந்திர ஐயர், பிரகதாம்பாள், சுப்பிரமணிய ஐயர், மங்களாம்பாள், ராதாகிருஷ்ணையர்—ஆக நான்கு பிள்ளைகளும் இரண்டு பெண்களும். இவர்களில் ராமசந்திர ஐயர் இப்போது இல்லை. பிரகதாம்பாள் பாண்டமங்கலம் நடேச ஐயரின் மனைவி ஆனார். மங்களாம்பாள் கன்னிவாடி ஜமீன்தார் ஸ்ரீ என். ஆர். ஐயர் (கல்கத்தா ராதாகிருஷ்ணையர்) அவர்களின் சுவீகாரப் புதல்வர் சிறுகளத்தூர் ராம்ஜிதாஸ் ஐயர் அவர்களின் மனைவி ஆனார்.

கிருஷ்ணையரின் சந்ததிகள் அனைவருக்குமே சிறந்த இசைப் புலமை பிறவி ஞானமாக அமைந்திருந்தது.

குஞ்சம்மாள் என்ற மங்களாம்பாளுக்குச் சங்கீத வித்து வான் வேப்பத்தூர் பாலசுப்பிரமணிய ஐயரின் சிட்சை. ஏறக்குறைய ஆயிரம் உருப்படிகள் வரையில் பாடம்.

குடந்தையில் வசித்து வந்த மாஜி முனிசீப் சுந்தர சாஸ்திரிகளுக்கும் கிருஷ்ணையருக்கும் நெருங்கிய நட்பு உண்டு. ஒருவர் வீட்டிற்கு மற்றவர் போய் வருவர். ஒரு சமயம் கிருஷ்ணையர் வீட்டுக்கு வந்த சுந்தர சாஸ்திரி கள் அங்கே மங்களாம்பாளின் பெரிய பாட்டு நோட்டைக் கண்டு, அதில் உள்ள சிறந்த உருப்படிகளைப் பார்த்துப் பிரமித்து அந்த நோட்டை எடுத்துச் சென்று பயன்படுத் திக் கொண்டார்.

கடைசிப் புதல்வராகிய ராதாகிருஷ்ணையர் சிறுபோதி லேயே ஞான பூர்வமாக மிக நன்றாகப் பாடும் ஆற்றலை உடையவர்; நல்ல சாரீரமும் உண்டு.

முனிசீப் சுந்தர சாஸ்திரிகள் வீட்டில் திருமண வைபவம். ராமநாதபுரம் பூச்சி ஐயங்கார் கச்சேரி. மதராஸ் பாலகிருஷ்ணையர் வயலின், கும்பகோணம் அழகனம்பி பிள்ளை மிருதங்கம். உமையாள்புரம் சுந்தரமையர் கடம்.

பந்தலில் ரஸிகர்கள் நிறைந்துவிட்டார்கள். கச்சேரி தொடங்கச் சிறிது தாமதம் ஆயிற்று. சிலர் விளையாட் டாகச் சிறுவன் ராதாகிருஷ்ணனை மேடையில் அமர்த்தி, 'ஏதாவது பாடு' என்றார்கள். பயம் அறியாத இளம் கன்று உடன்பட்டு விட்டது. சங்கராபரண ராகத்தில் அமைந்த 'எந்துகு பேதல' என்ற கிருதி கணகணவென்று முழங்கத் தொடங்கிற்று. பக்க வாத்திய வித்துவான்களும் ரசிகர்களும் சூழ அவையை நோக்கி வந்துகொண்டிருந்த பூச்சி ஐயங்கார் மறைவிடத்தில் சிறிது நின்றார். எதிரே

சென்றால் செயல் தடைப்படும் என்பது அவருக்கு. பாட்டு முழுவதும் கேட்ட பின்னர்ப் பக்கத்தில் உள்ளவர்களிடம் பாராட்டிப் பேசியபடி அவைக்கு வந்து சிறுவனை வாத்சல்யத்தோடு நோக்கித் தட்டிக் கொடுத்துவிட்டு மேடையில் அமர்ந்து கச்சேரியைத் தொடர்ந்தார்.

மற்றொரு சமயம் கிருஷ்ணையர் வீட்டு மாடியில் பூச்சி ஐயங்கார் உலவிக்கொண்டிருந்தார். சுறுசுறுப்பு மிகுந்த அவரால் ஒரு விநாடிகூட ஓய்ந்திருக்க முடியாது. ஒரு காரியமும் இல்லாவிட்டால் புனுகு பூனையைப்போல் குறுக்கும் நெடுக்குமாக உலவிக்கொண்டாவது இருப்பார். அவர் அங்கு இருப்பதை அறியாத ராதாகிருஷ்ணன் மனம் விட்டு வாய் விட்டுப் பாடலானார். பூச்சி ஐயங்கார் சந்தடியின்றி இருந்து கேட்கலானார். பாட்டின் இடையே ஓர் இடம்; அபூர்வமான பிடி; அபாரமான சங்கதி! அநாயாசமாக உதிர்ந்த அதைக் கேட்டு ஐயங்கார் அளவு கடந்த உவகை கொண்டார். தரையிலே கால் பாவாமல் தத்தித் தத்தி ஓடினார். கீழே சென்று கிருஷ்ணையரைக் கண்டு செய்தியை விண்டார். அங்கேயே அப்பொழுதே அந்தச் சங்கதியை ஸ்வரப்படுத்தி முழு உருக் கொடுத்துப் பாடி மகிழ்ந்தார்.

கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவி பாடும் என்பது போலக் குடும்பத்தில் உள்ள குழந்தைகள் உள்பட அனைவரிடமுமே இசை ஞானம் கமழ்ந்து திகழ்ந்தபோது குடும்பத் தலைவராகிய கிருஷ்ணையருக்குக் கர்நாடக சங்கீதம் மூச்சுக் காற்றாக இருந்ததில் வியப்பில்லை. ஆகவே அந்தக் கலை தழைத்துச் செழிக்க வேண்டுமென்று அவர் இரவும் பகலும் எண்ணமிட்டபடி இருப்பார். அதற்காகத் தம்மால் ஆனவற்றையெல்லாம் செய்வார். நல்ல கலைஞர்

களை நன்கு கவனிப்பார். முன்னேறி வரும் வித்துவான் களுக்குத் தக்க முறையில் ஊக்கம் கொடுத்து ஆதரிப்பார். அந்த முறையில் ராஜமாணிக்கம் பிள்ளைக்கு அவர் அளித்த ஆதரவு ஏராளம்.

ஏதோ ஒரு சமயம் எங்கோ ஓரிடத்தில் யாரோ ஒருவருடைய கச்சேரியில் ராஜமாணிக்கம் பக்க வாத்திய மாக வயலின் இசைத்ததைக் கிருஷ்ணையர் கேட்டார். 'கர்நாடக சுத்தம், தெளிவான ஞானம், லாகவமான வாசிப்பு, குளுமையான நாதம், ஜனரஞ்சகமான வழி. அடுத்த தலைமுறைக்கு ஆதரிச வழிகாட்டி'-என்றெல்லாம் மனத்தில் எண்ணினார். அன்று முதல் தம் கவனத்திற்கு வரும் கச்சேரிகள் அனைத்திற்கும் ராஜமாணிக்கத்தின் வயலினை ஏற்பாடு செய்தார்.

இப்படியாக இசைக் கலையில் பெருவாரியான ஈடுபாடு கொண்டிருந்த கிருஷ்ணையரின் சந்ததியார் அங்கங்கே சுகமாக வாழ்ந்து வருகின்றனர். மூத்தவரான நடேச ஐயரும் கடைசிப் புதல்வரான ராதாகிருஷ்ணையரும் தகப்ப னரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி இசைக் கலையில் உள்ள ஆர்வத்தினால் சென்னை மயிலை ரசிக ரஞ்சனி சபை போன்ற சிறந்த இசை ஸ்தாபனங்களில் ஈடுபாடு கொண்டு கலைப் பணி ஆற்றி வருகிறார்கள்.

''டாக்டர் முத்துசுவாமி ஐயர், கோட்டூர்க் கிருஷ்ணையர் இவர்களைப் போலவே வடுவக்குடி ராமையர், மணிக்குடி சுப்பிரமணியஐயர், மயிலாப்பூர் சுப்பிரமணிய முதலியார், சேத்துப்பட்டு பி. கே. சாரங்கபாணிமுதலியார் முதலிய பலர் எனக்கு மிக மிக நெருங்கிய நட்பு உடையவர்கள். இவர்கள் பல சந்தர்ப்பங்களில் பரிவு காட்டி ஆதரித்தவர் கள். நான் இவர்களை யெல்லாம் மறந்து வாழ முடியாது.

இப்படிக் கூறுவதனாலேயே மேற்குறித்தவர்களைத் தவிர மற்ற அன்பர்களைக் குறைத்து எண்ணுவதாகப் பொருள் கொள்ளக் கூடாது. என்னிடம் அன்பில்லாதவர்கள் எவருமே இல்லை. எனக்கு ஆதரவு தராதவர்களும் யாருமே இல்லை. எவரையும் எக்காலத்தும் நான் குறைத்துக் கூறுவதோ, குறைத்து நினைப்பதோ இல்லை. அனைவரையும் அனவரதமும் அன்பின் அவதார புருஷர்களாக எண்ணிப் போற்றியவாறுதான் இருந்து வருகிறேன்."

இவ்வாறு உணர்ச்சி பூர்வமாகக் கூறுகிறார் ராஜமாணிக்கம் பிள்ளை. இவர் கூறுவதற்கு ஏற்ப இவரோடு பழகிய அன்பர்களும் இப்படியேதான் கூறுகிறார்கள். "ராஜமாணிக்கம் பிள்ளையா? அவர் அன்புக் களஞ்சியம் அல்லவா? அவரோடு இருந்தால் கவலையே தலை நீட்டாதே! பொருள் செறிந்த அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாலே போதுமே!"-என்கிறார்கள். அன்பர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் அன்புப் பிறவி ராஜமாணிக்கம் பிள்ளை.

## 19. பொன்னுடை

(1932)

அந்த நாளில் கலைகளை ஆதரித்துப் போஷித்து வளர்த்து வந்த சம்ஸ்தானங்களுள் ராமநாதபுரம் சம்ஸ்தானத்திற்கு முக்கியமான இடம் உண்டு. அந்தப் பரம்பரையிலே தோன்றியவர்கள் அனைவருமே கலா ரசிகர்களாகவும் கலைகளின் போஷகர்களாகவும் விளங்கி வந்திருக்கிறார்கள். சந்தர்ப்பம் கிட்டுகிற போதெல்லாம் அவர்கள் கலைகளை ஆதரிக்கும் பொருட்டுச் செய்துள்ள சேவைகள் கல்லிலே பொறிக்கத் தக்கவை.

சண்முக நாகநாத சேதுபதி அவர்கள் இசைக் கலையை மகிழ்ச்சியோடு போற்றி வளர்ப்பவர். கலைஞர் களுக்கு வரையாது கொடுத்து ஆதரிக்கும் பெரும் வள்ளல். இந்தத் தலைமுறையில் பிரகாசித்து வரும் கலைஞர்களில் எவரும் சண்முக நாகநாத சேதுபதி அவர்களின் அன்புத் தளையிலிருந்து விடுபடவில்லை. ராஜமாணிக்கமும்தான்.

ராஜமாணிக்கம் வயலின் வாத்தியத் துறையில் சிறப் புற்று விளங்குவதைச் சேதுபதி கேள்விப்பட்டார். தக்க சந்தர்ப்பம் நேர்ந்தபோது சிறந்த பாடகர்களுக்கு அவரைப் பக்க வாத்தியம் வாசிக்க ஏற்பாடு செய்தார். ராஜமாணிக் கத்தின் வாசிப்பைக் கேட்டார். மட்டற்ற மகிழ்ச்சி பெற்றார். பிறகு அடிக்கடி அவருக்குச் சந்தர்ப்பம் அளித்து ஆதரித்து வந்தார்.

கேட்கக் கேட்கத் தெவிட்டாத ராஜமாணிக்கத்தின் வயலின் வாசிப்பில் நாள் ஆக ஆகச் சேதுபதி அவர் களுக்கு அளவு கடந்த பிரேமை ஏற்பட்டது. ராஜ மாணிக்கத்தின் இசை ஞானம், செயலாற்றும் லாகவம், பழகும் தன்மை ஆகியவற்றிலே சேதுபதி உள்ளத்தைப் பறி கொடுத்தார். தமக்கு அவர்பாலுள்ள அன்பை, அவருடைய கலையின்பால் உள்ள உயர்ந்த மதிப்பைத் தக்க முறையில் வெளியிட்டுக்கொள்ள விரும்பினார். சந்தர்ப் பத்தை எதிர்பார்த்திருந்தார். விரைவில் அரண்மனையில் ஒரு வைபவம் நேர்ந்துகொண்டது. அதில் ராஜமாணிக் கத்தின் வயலின் சோலோக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்யும் படி மகாராஜா அறிவித்தார். அவ்வாறே நிகழ்ந்தது.

ராஜமாணிக்கம் பிள்ளை அன்று மிகுந்த உற்சாகத் துடன் வாசித்தார். அன்றைக் கச்சேரியில் காம்போஜி ராக ஆலாபனமும், அந்த ராகத்தில் அமைந்த 'எவரிமாட'

என்ற தியாகராஜ கிருதியும் மிகச் சிறப்பாக அமைந்தன. மகாராஜா நன்கு ரசித்தார். ராஜமாணிக்கத்துக்கு ஏராள மான சம்மானங்களை வழங்கி விலை மிகுந்த பொன்னாடை யைப் போர்த்திக் கலையைக் கௌரவித்தார். இதை நேரில் கண்டவர்களும் கேள்விப்பட்டவர்களும் மிகுந்த சந்தோ ஷம் அடைந்தார்கள்.

## 20. சிறந்த பரிசு!
(1932)

சென்னை மயிலாப்பூர் நாட்டு வீராச்சி முதலி தெரு வில் வாழ்ந்துவரும் வக்கீல் பிரமுகர், எம். சுப்பிரமணிய முதலியார் சிறந்த ரசிகர்; கலையின் போஷகர். அவருடைய இல்லத்திலும், அவரைச் சார்ந்த உறவினர், நண்பர் ஆகி யோர் இல்லங்களிலும் நடைபெறும் வைபவம் எதுவும் சிறந்த இசைக் கச்சேரியின் துணையின்றி நடைபெறுவ தில்லை. "கச்சேரி இல்லாத வைபவமும் வைபவமா?" என்று பேசிவிட்டு அவர் சும்மா இருக்க மாட்டார். இடம், பொருள், ஏவல் முதலியவற்றிற்குப் பொருந்துகிற முறை யில் கச்சேரிகளைத் தேர்ந்தெடுத்து அமைத்துச் சிறப்பாக நடைபெறச் செய்துவிடுவார்.

காலஞ் சென்ற வயலின் வாத்திய மேதை மலைக் கோட்டை கோவிந்தசாமி பிள்ளை, சங்கீத வித்துவான் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, கும்பகோணம் ராஜமாணிக் கம்பிள்ளை முதலிய சிலவித்துவான்களிடம் முதலியாருக்கும் அவரைச் சார்ந்தவர்களுக்கும் விசேஷ அபிமானம் உண்டு. அந்த வித்துவான்களும் முதலியார், அவரைச் சார்ந்தோர் ஆகியவர்களோடு மிகவும் ஒட்டிப் பழகுவார்கள். "முதலி யாரின் அன்புச் செயலால் இன்று நான் பூமிக்கு உரியவன் ஆனேன்" என்கிறார் ராஜமாணிக்கம்.

"முதலியார் இசைக் கலைஞர்களிடம் வைத்திருக்கும் அன்பும் மதிப்பும் அளவிட்டுக் கூற முடியாதவை. அத்தகைய ஓர் இயல்பு அவரிடம் புதிதாக ஏற்பட்டது அன்று. அவருடைய தகப்பனார், பாட்டனார் முதலியோர் இசைக் கலைக்கு அடிமையாக வாழ்ந்தவர்கள். ஆகவே சுப்பிரமணிய முதலியாரின் கலை அன்பு பரம்பரையை ஒட்டி வழி வழியாக வந்த பிதிரார்ச்சிதமாகும். அதனால்தான் அது நிறைவுடையதாக இருக்கிறது. அவர் பேசுவதையும், பழகுவதையும் பார்த்தால் அவை உள்ளத்தோடு ஒட்டிய செயல்களாகப் பிறருக்குத் தோற்றா. உள்ளத்திலே கொந்தளித்துக் கொண்டிருக்கும் உணர்ச்சிகள் வெளியே தலை நீட்டா. 'என்னவோ மேலுக்குப் பேசுகிறார்' என்றுதான் புதியவர்கள் கருதுவார்கள். பலகாலம் மிக நெருங்கிப் பழகினவர்கள் மட்டுமே அவரைப் புரிந்துகொள்ள முடியும்.

"அவருடைய பேரன்புக்குப் பாத்திரமானவர்களில் நானும் ஒருவன். அவர் வீட்டில் நடைபெறும் வைபவங்களில் முதல் அழைப்பு எனக்குத்தான். கச்சேரி செய்வதற்காகப் போவேன்; கச்சேரிகளை அமைத்துத் தருவதற்கென்று போவேன்; ஒரு விதப் பொறுப்பும் இன்றி விருந்தாளியாக மட்டும் போவேன். எங்களிடையே பரிசயம் ஏற்பட்ட பிறகு நான் இல்லாமல் அவர் சம்பந்தப்பட்ட வைபவம் இல்லை.

"ஒரு சமயம் முதலியார் அவர்களுடைய சம்பந்தி மணலி சின்னசாமி முதலியார் அவர்கள் இல்லத்தில் திருமணம் ஒன்று நிகழ்ந்தது. அதிலே இசை நிகழ்ச்சிகள் சம்பந்தப்பட்ட பொறுப்புகளை வழக்கம்போல் சுப்பிரமணிய முதலியார் ஏற்றுக்கொண்டிருந்தார். எனக்கு அழைப்பு வந்தது; சென்றேன். வைபவத்தை முன்னிட்டு

மயிலாப்பூரில் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை கச்சேரி நடை பெற்றது. நான் அக்கச்சேரிக்குப் பக்கவாத்தியமாக வயலின் இசைத்தேன்.

"சின்னசாமி முதலியாரும் தம் சம்பந்தியைப் போலவே அன்பு மனம் படைத்தவர். அவரிடம் சுப்பிர மணிய முதலியார் என்னைப்பற்றி அதிகமாகச் சொல்லி யிருக்க வேண்டும். அவர் என்னிடம் காண்பித்த விசேஷ அன்பு, அளவற்ற மரியாதை இவற்றிலிருந்து நான் அவ்வாறு ஊகித்துக்கொண்டேன். அவர் என்னைக் கௌரவிக்க எண்ணினார். அதை உத்தேசித்து என்னு டைய சோலோக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தார்.

"அந்தக் கச்சேரி டவுனில் நடைபெற்றது. மதராஸ் வேணு நாய்க்கர் அவர்கள் மிருதங்கம் வாசித்தார். கச்சேரி முடிவில் சின்னசாமி முதலியார் எனக்கு ஒரு தங்கப் பதக்கத்தை விசேஷ வெகுமானமாக அளித்துக் கலையைக் கௌரவித்தார்.

"அன்று முதல் எனக்கு அந்தப் பிரமுகரின் தொடர் பும் நிலைத்து விட்டது. அவர் எனக்களித்த தங்கப் பதக்கத் தில் சிறந்த வேலைப்பாட்டுடன் உழுபடைச் சின்னம் பொறிக்கப் பெற்றிருந்தது. அதைப் பார்த்ததும் என் உள் ளத்தில் தோன்றிய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. மற்ற இடங்களில் இன்னும் விலைஉயர்ந்தனவாக, இன்னும் விசேஷ வேலைப்பாடு உடையனவாகக் கிடைக்கக்கூடிய பரிசுகளை எல்லாம் விட அது மிக உயர்ந்தது என்று என் உள்ளம் எண்ணிற்று. அதை மிகவும் ஜாக்கிரதையாகக் கொண்டு வந்து என் இல்லத்தில் நான் அனவரதமும் ஆராதித்து வரும் தெய்வத்தின் திருமுன் வைத்து வணங்கினேன். பிறகு பேழையில் பத்திரமாக அடக்கம் செய்தேன்.

"இது நடைபெற்றது 1932-இல். இதன் விளைவாக,- அப்படித்தான் என் உள்ளம் கருதுகிறது-அடுத்த ஆண்டில் நான் தஞ்சை ஜில்லாவில் சாக்கோட்டைக் கருப்பூர் என்ற இடத்தில் முதல் முதலாக நிலம் வாங்கினேன். அன்று முதல் சிறுகச் சிறுக, மேலும் மேலும் எனக்குப் பூமி சேர்ந்துகொண்டே வருகிறது. இது முதலியார் அவர்களுடைய பேரன்பின் விளைவு அல்லவா?" என்றார் ராஜமாணிக்கம் பிள்ளை.

சுப்பிரமணிய முதலியார் அவர்களைச் சந்தித்து ராஜமாணிக்கத்தைப் பற்றிய விவரங்களை விசாரித்தேன். அடக்கமான முறையில் அவர் சொன்னார்:

"வயலின் வித்துவான் ராஜமாணிக்கம் பிள்ளை அன்பே உருவானவர். அவருடைய உள்ளம் அருள் மயமானது. நட்புக்குப் பாத்திரமான மனிதர்களில் சிறந்தவர் அவர். என்னிடம் உள்ள எல்லை கடந்த அன்பினால் அவர் என்ன என்னவோ கூறி இருக்கிறார். அவ்வளவிற்கு நான் தகுதியுள்ளவன் அல்லன். பலாப் பழத்திலே ஈக்களும் எறும்புகளும் மொய்ப்பது பலாப்பழத்தினிடம் உள்ள சிறப்பினாலேயே அன்றி ஈ எறும்புகளின் அன்பினாலல்ல. கலைஞர்களை நாம் நேசிப்பது அவர்களிடம் உள்ள கலையின் சிறப்பினாலேயே அன்றி வேறு எதனாலும் அல்ல. வெறும் மனிதர்களிடம் நமக்கு அன்பும், அபிமானமும், மதிப்பும், பக்தியும் ஏற்படுகின்றனவா? இல்லையே!

"ராஜமாணிக்கம் சிறந்த கலைஞர் மட்டுமல்ல; உயர்ந்த மனிதர். தோற்றத்தால் கண்ணுக்கு நிறைந்தவர். பழக்கத்தால் உள்ளத்திற்கு நிறைந்தவர். நுட்பமான, வெகு சாதுரியமான, அவருடைய பேச்சை நாள் எல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாம். நுணுக்கமான ஒரு சொல்; அதிலே பல பொருள்.

"அவரை நம்பி ஒரு பொறுப்பை ஒப்படைத்தால் அதை அவர் நிறைவேற்றும் அழகே தனி. அநாவசியமாக உடலையும், உள்ளத்தையும் அலட்டிக் கொள்ளவே மாட்டார். நாலு பேர் அறிந்து பாராட்ட வேண்டும் என்பதற்காகத் தாம் படுகிற பாட்டை மிகையாக்கி அம்பலப் படுத்த மாட்டார். செய்கிற சுவடு தெரியாமல் செயல்களைச் செய்வார். அப்படி அவர் புரிகிற செயல் பிறரால் குறைகூற முடியாதபடி, வானளாவப் புகழும்படி இருக்கும். அநேகமாக எங்கள் வீட்டு வைபவங்களில் இசை நிகழ்ச்சிகளின் பொறுப்பனைத்தும் அவருடையவையே. அவரால் மற்றக் கலைஞர்களும் எங்களிடம் விசேஷ அன்புகொண்டு வஞ்சகமின்றி உழைத்துச் செயலைச் சோபிக்கச் செய்வார்கள்.

"1940-இல் என் பெண்ணுக்குக் கல்யாணம் ஆயிற்று. அதில் அரியக்குடி ஐயங்கார் அவர்களின் கச்சேரி. ராஜமாணிக்கத்தின் ஏற்பாடுதான். அக்கச்சேரியில் பக்கவாத்தியமாக வயலின் வாசித்தவரும் அவரேதான்.

"முதல் நாள் மயிலை விவேகானந்தர் கல்லூரியில் ஐயங்காரின் கச்சேரி நடைபெற்றதாம். அந்தக் கச்சேரியைக் கேட்ட ரசிக அன்பர்களில் சிலர் மறுநாள் எங்கள் வீட்டில் நடந்த கச்சேரிக்கு வந்தார்கள். எங்களுக்குப் பரிசயம் இல்லாதவர்கள். அதனால் அவர்களுக்குத் திருமண அழைப்பு இல்லை. அவ்வாறிருந்தும் அவர்கள் கலை ஆர்வத்தினால் கௌரவத்தை ஒதுக்கி வைத்துவிட்டு வலிய எங்கள் வீட்டு வைபவத்துக்கு வந்தார்கள். எல்லோரும் அநேகமாக நல்ல செயலில் உள்ளவர்களே. நாங்களும் அவர்களை அன்புடன் வரவேற்று உபசரித்தோம். 'சற்று இருந்து கச்சேரி கேட்டுவிட்டுப் போக எங்களை அநும

திக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்கள். வேண்டாமென்று சொல்லுவோம்? 'இதற்கு அநுமதி வேறு வேண்டுமா?' என்றேன்.

"கச்சேரி நடைபெற்றது. அந்த அன்பர்கள் பேசிக் கொண்டார்கள். 'நேற்று அங்கே கச்சேரி கேட்டோம்; இன்று இங்கே கேட்பது போல் இல்லையே! இதற்குக் காரணம் என்ன? இடத்தின் மாறுபாடா? சபையின் தகுதியா? ஐயங்காரின் உடல், உள்ளம் இவற்றின் ஏற்றத் தாழ்வா? அல்லது ஐயங்கார் நினைத்துச் செய்கிற செயலா?' —இப்படிப் பல பல பேசிக்கொண்டார்கள்.

"சில சமயங்களில் ரசிகர்கள் இம்மாதிரி பேசிக் கொள்வது இயல்பு. அன்று அந்த விழாப் பந்தலில் சிறந்த ரசிகர்கள் நிறைந்திருந்தார்கள். எங்கள் குடும்பத்தினர் கலையினிடத்தும் கலைஞர்களிடத்தும் அன்புடையவர்கள் என்பது ஐயங்கார் அறிந்தது. கச்சேரி ஏற்பாடு செய்தவர் ராஜமாணிக்கம் பிள்ளை. அவரே அமர்ந்து பக்க வாத்தியமாக வயலின் இசைக்கிறார். இவ்வளவும் சேர்ந்து ஐயங்காரின் உள்ளத்தில் அளவு கடந்த உற்சாகத்தை உண்டுபண்ணி இருக்கின்றன. அவர் சிறப்பாகப் பாடக் கேட்பானேன்? மாலை ஐந்து மணிக்குக் கச்சேரி ஆரம்பித்தது. இரவு ஒன்பது மணி ஆனபோது ஐயங்கார் எங்களிடம், 'கச்சேரியை நிறுத்தலாமா?' என்று மெல்ல வினவினார். நாங்கள் பதில் சொல்வதற்குள் ராஜமாணிக்கம் பிள்ளை குறுக்கிட்டார்.

" 'அவர்களைக் கேட்டால்? 'நிறுத்த வேண்டாம்; இன்னும் பாடுங்கள்; பாடிக்கொண்டே இருங்கள்' என்று சொல்வார்கள்? 'சிரமப்பட வேண்டாம்' என்றுதான் சொல்வார்கள். இன்னும் சற்று நேரம் நடக்கட்டுமே!

சபையினர் தம்மை மறந்து லயித்து இருக்கின்றனர். நேரம் செல்லச் செல்ல, செயல் புரியப் புரிய நமக்கும் உற்சாகம் அதிகரித்துக்கொண்டே போகிறது. இப்படிப்பட்ட நிலையில் கச்சேரியை நிறுத்துவானேன்?' என்றார்; பிறகு சிரித்துக்கொண்டே தாழ்ந்தகுரலில், 'நீங்கள் பாடத் தானே போகிறீர்கள்?' என்றார். ஐயங்கார் புரிந்து கொண்டு சிரித்தார்; கச்சேரியைத் தொடர்ந்தார். மேலும் ஒரு மணி நேரம் ஐயங்கார் பாடினார்; பிரமாதமாகப் பாடினார். அவரிடமோ, அவர் புரியும் செயலிடமோ அயர்ச்சி சிறிதும் இல்லை.

"கச்சேரி எல்லாம் முடிந்தபின் தனிமையில் பேசிக் கொண்டிருந்த போது நான் ராஜமாணிக்கத்தைக் கேட்டேன்; 'ஐயங்கார் மேல் உங்களுக்கென்ன கோபம்? நீண்ட நேரம் அவரைச் சிரமப்படுத்தி விட்டீர்களே?' என்று. அவர் சொன்னார்:

" 'கோபமா? ஐயங்காரிடமா? எனக்கா? அவரிடம் நான் கொண்டுள்ள அன்புக்கும், மதிப்புக்கும், பக்திக்கும் அளவே கிடையாதே! நாள் பூராவும் பாடினாலும் அவர் உடம்பில் சிரமமே ஏற்படாது; பாட்டில் சிறப்பு அம்சம் குன்றவே குன்றாது. தம் உடலையும் இசையையும் அந்த முறையில் வசப்படுத்தி வைத்திருக்கிறார் அவர். அந்த ரகசியம் எனக்குத் தெரியும். அதனால்தான் அவ்வாறு அவரை வேண்டிக் கொண்டேன். 'இசையை வாத்தியங்களின் மூலம் உயர்ந்த முறையில் வெளியிடுவதுதான் கஷ்டம்; அதே செயலை வாய்ப் பாட்டின் மூலம் செய்வது சுலபம்'—என்ற பொருள்பட, 'நீங்கள் பாடத்தானே போகிறீர்கள்?' என்று அவரிடம் கேட்டேன். வம்பு செய்கிற முறையில் உரிமையினாலும், சலுகையினாலும்

சொன்ன தமாஷ் வார்த்தைதான் அது. அவரும் அதைப் புரிந்துகொண்டு சிரித்தார். ஆனால் பாடுவது என்பது எத்தகைய சிரம சாத்தியமான செயல் என்பதையும், வாத்தியங்களைக் கொண்டு புரியும் செயலைவிட அது சுலபம் அல்ல என்பதையும் நான் அறியாதவன் அல்லன். அது அவருக்கும் தெரியும். அதனால்தான் சிரித்தார். முழு மனத்துடன் செயல் புரிய வேண்டிய இடம் எது என்பதைப் புரிந்துகொண்டு அதற்கேற்பச் செயலாற்றுவது எங்களுக்கு இன்று புதிதல்ல. அதனால்தான் அவரும் இணங்கினாரே அன்றி லேசில் கட்டுப்படக்கூடியவரல்லர் அவர். நானும் எல்லாரையுமே—சிறிது நேரம் செயல் புரிந்த உடனேயே உடலிலும் செயலிலும் களைப்புத் தோன்றிவிடக் கூடியவர் எல்லாரையுமே—இவ்வாறு கேட்டுக் கொண்டுவிட மாட்டேன்' என்றார்.''

இப்படி முதலியார் அவர்கள் ராஜமாணிக்கத்தைப் பற்றிச் சொன்னார்.

## 21. 'கில்லத்'

(1933)

கலைகளுக்கும் கலைஞர்களுக்கும் போாதரவு அளிக்கும் மைசூர்ச் சம்ஸ்தானத்தின் புகழ் அனைவரும் அறிந்தது. அங்கே பெரிய பெரிய இசைப் புலவர்கள் ஆஸ்தான வித்துவான்களாக இருந்து கலையை வளர்த்தார்கள். தசரா அங்கே ஒரு விசேஷ வைபவம்; கலைத் திருநாள். அப்போது கலாதேவி அங்கே ஆனந்த நடமிடுவாள். அது தவிர மற்றும் பல விசேஷ சந்தர்ப்பங்களிலும் கலையின் பரிமளிப்புச் சிறப்பாக இடம் பெறும். விசேஷ சந்தர்ப்பங்கள் தவிர மாதந்தோறும் கலைஞர்களை வரவழைத்து மரியாதை செய்து

அவர்கள் ஆற்றலைக் கண்டு ஆனந்தங்கொண்டு தக்க சம்மானம் அளித்துக் கௌரவிப்பதும் அந்தச் சம்ஸ்தானத்தின் வழக்கம்.

1933-இல் ராஜமாணிக்கம் பிள்ளைக்கு மைசூரிலிருந்து தந்தி வந்தது. அவர் தம் மாணவர் சம்பந்தம் பிள்ளையுடன் புறப்பட்டுச் சென்றார்.

அங்கே பிள்ளை அவர்களின் வயலின் சோலோக் கச்சேரி நடைபெற்றது. அவருடைய மாணவர் சம்பந்தம் பிள்ளையும் தம் குருவோடு சேர்ந்து வயலின் வாசித்தார். கச்சேரி மிகவும் சிறப்பாக அமைந்தது. மகாராஜாவும் மற்றவர்களும் கேட்டு மகிழ்ந்தார்கள். பெரும்பாலும் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் உயர்ந்த பட்சம் இருபது, முப்பது நிமிஷங்களுக்கு மேல் அவையில் அமர்ந்திருந்து பழக்கம் இல்லாத மகாராஜா அன்று அந்தக் கச்சேரியை ஒன்றேகால் மணி நேரம் இருந்து ரசித்தது குறிப்பிடத் தக்கது.

'கில்லத்' என்ற பெயரில் பட்டால் ஆன ஆடைகளை அளித்து வித்துவான்களைக் கௌரவிப்பது அந்தச் சம்ஸ்தானத்தின் வழக்கம். ராஜமாணிக்கம் பிள்ளைக்குத் தக்க சம்மானத்துடன் 'கில்லத்' மரியாதையும் அங்கே கிடைத்தது. அவர் பூரித்த உள்ளத்துடன் ஊர் திரும்பினார்.

## 22. மகளின் திருமணம்

(1935)

காலம் வெகு வேகமாகச் சென்று உலகத்தில் பல மாறுதல்களைத் தோற்றுவித்தது. ராஜமாணிக்கம் பிள்ளையின் செல்வி ஜீவரத்தினம் மணப் பருவம் எய்தியதும்

அந்த மாறுதல்களில் ஒன்று. அவர் தம் அருமை மகளுக்குச் சிறந்த வரனைத் தேர்ந்து திருமணம் நிச்சயித்தார்.

மதுரை ஜில்லா போர்டு தலைவராகப் பல காலம் பதவியில் இருந்து பொதுநலப் பணி புரிந்த ராவ்சாகிப் கதிர்வேல் பிள்ளை அவர்கள் குமாரர் முருகேசம் பிள்ளை. அவர் திண்டுக்கல் இன்ஜினீயர் காரியாலயத்தில் அலுவல் புரிந்து வந்தார். அவருடைய திருநிறைச் செல்வர் சிரஞ்சீவி அப்பாசாமி என்பவரையே ராஜமாணிக்கம் பிள்ளை வரனாகத் தேர்ந்தார்.

குறிப்பிட்ட நன்னாளில் கும்பகோணத்தில் திருமண வைபவம் சிறப்பாக நடைபெற்றது. ஏராளமான கனதனவான்களும் வித்துவத் பிரமுகர்களும் ரசிக மேதைகளும் வைபவத்திற்கு வந்திருந்தனர். உயர்தரமான விருந்து, மேளக் கச்சேரி, பாட்டுக் கச்சேரி முதலியவைகளுக்குக் குறைவில்லை. நேரில் வர இயலாத அன்பர்களும், சம்ஸ்தானதிபதிகளும், மடாதிபதிகளும், ஜமீன்தார்களும் உயர்ந்த பல பரிசுப் பொருள்களும் வாழ்த்துரைகளும் அனுப்பி யிருந்தனர்.

அரியக்குடி ராமானுஜ ஐயங்கார், செம்பை வைத்தியநாத பாகவதர் இவர்களின் பாட்டுக் கச்சேரியும், காரைக்குடி சகோதரர்களின் வீணைக் கச்சேரியும், ஸ்ரீமதி சரசுவதிபாய் அவர்களின் கதாகாலட்சேபமும் சிறப்பாக நடைபெற்றன. கச்சேரிகளுக்கு மைசூர் சௌடையா, பாப்பா வேங்கடராமையா, புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை, கும்பகோணம் அழகநம்பி பிள்ளை முதலியோர் பக்க வாத்தியங்கள் வாசித்துச் சிறப்பித்தனர். திருவீழிமிழலைச் சகோதரர்களின் நாதசுரக் கச்சேரி பிரமாதமாக அமைந்தது. சுமார் ஒரு வார காலத்திற்கு

அதிகமாக இந்த வைபவ நிகழ்ச்சிகள் குடந்தையில் திமிலோகப்பட்டன.

## 23. கோட்டையைத் தகர்த்தார்!

(1935)

திருவிசைநல்லூர் ஐயா அவர்களின் உற்சவ நிதி வசூலுக்காகக் கும்பகோணம் வாணி விலாச சபையில் செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயரின் கச்சேரி. கும்பகோண வாசிகளுக்கு மைசூர் சௌடையாவின் வயலின் வாசிப்பைக் கேட்க வேண்டுமென்று நெடுநாளைய அவா. அதை அறிந்திருந்த சபையின் கன்வீனரான ராஜமாணிக்கம் ஸ்ரீநிவாச ஐயருக்குப் பக்க வாத்தியமாகச் சௌடையாவை ஏற்பாடு செய்தார்.

கச்சேரி தினத்தன்று பகல் இரண்டு மணி வரையில் சௌடையா வந்து சேரவில்லை. ஏராளமான டிக்கட்டுகள் விற்பனையாகி விட்டன. பலர் முன்னதாகவே 'ரிசர்வ்' செய்து கொண்டிருந்தனர். இரண்டு மணியிலிருந்தே ரசிகர்கள் இடம் பிடித்து அமரலாயினர்.

மணி மூன்று. நிர்வாகிகளின் கவலை வரவர அதிகரித்தது. மணி நாலு ஆகிவிட்டதும் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தனர். ஸ்ரீநிவாச ஐயருக்கு அப்போதெல்லாம் அதிகமாக வாசித்து வந்த ராஜமாணிக்கமே அன்றும் வாசிப்பது என்ற முடிவுடன் செயலில் இறங்கினர்.

வித்துவான்கள் மேடைக்கு வந்தனர். சௌடையாவை எதிர்பார்த்த இடத்திலே ராஜமாணிக்கத்தைக் கண்டதும் வான் அதிரக் கரகோஷம் எழுந்தது. உடனே ராஜமாணிக்கம் மேடைமீது நின்று கை அமர்த்திப் பேசினார்.

"தவருமல் வருகிறேன் என்று நேற்றுக்கூடத் தந்தி வந்தது சௌடையா அவர்களிடமிருந்து. மனித யத்தனத்தை முன்னிட்டுக்கொண்டு அவர் கொடுத்த தந்தி அது. அதற்கும் மேற்பட்ட தெய்வ யத்தனம் ஒன்று இருக்கிறது என்பதை இந்த இடத்திலே நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். அவருக்கு எதிர்பாராதபடி என்ன அசந்தர்ப்பமோ! இது சகஜம்தானே? பண்பில் சிறந்த தமிழர் நாம். பண்பை மறந்து வீண் குழப்பத்தை உண்டாக்கிக்கொள்ளலாமா? நம் நாகரிகத்திற்கு அது அழகா? அதனால் பலன் என்ன? மனக் கஷ்டமும் கால நஷ்டமும்தான் மிச்சம். ஸ்ரீநிவாச ஐயர் அவர்கள் தேன் மதுர இசை பொழியக் காத்திருக்கிறார்கள். வீண் குழப்பத்தினால் இந்த அரிய சந்தர்ப்பத்தை நாம் இழப்பதா? உங்களுக்கு இன்று சௌடையா அவர்களின் வாசிப்பைக் கேட்க இயலாது போயிற்றே என்ற வருத்தமே தவிர, என் வாசிப்பைக் கேட்பதில் ஆட்சேபம் இருக்காது என்று எதிர் பார்க்கிறேன். இப்போதைக்கு அவர் ஸ்தானத்தில் அமர்ந்து வாசிக்கிறேன். கச்சேரி நடக்கட்டும். கேட்டு இன்புறுங்கள். கூடிய சீக்கிரம் சௌடையா அவர்களின் வாசிப்பைக் கேட்கும் வாய்ப்பு உங்களுக்குக் கிட்டும்; நானே கிட்டச் செய்கிறேன்."—

மீண்டும் பரபரவென்று கரகோஷம். முன்னதற்கும் பின்னதற்கும் எவ்வளவோ வித்தியாசம்!

ராஜமாணிக்கத்திடம் எங்கும் எவருக்கும் உயர்ந்த அன்பும் சிறந்த மதிப்பும் உண்டு. அவருடைய சொற்பொழிவு அங்கிருந்த சூழ்நிலையை உடனே மாற்றிவிட்டது. எங்கும் அமைதி. கச்சேரி 'ஜம்' மென்று ஆரம்பமாகிவிட்டது.

சுமார் ஒரு மணி நேரம் சென்றிருக்கும்; ஒருவர் வந்து பிள்ளையிடம் என்னவோ சொன்னார். பிள்ளை பதில் சொல்லி அனுப்பினார். பிறகு வழக்கமான மந்தகாசம் மேலும் அதிகரிக்க, வாசித்துக்கொண்டிருந்தார்.

சற்று நேரத்தில் சௌடையா சபையில் பிரவேசித்தார். உடனே சபையில் ஏக ஆரவாரம்! பிள்ளை எழுந்து கைலாகு கொடுத்து அவரை மேடைக்கு அழைத்து மாலை சூட்டி மரியாதை செய்தார். பிறகு சபையோரை நோக்கிக் கூறினார்: "கூடிய சீக்கிரம் சௌடையா அவர்களின் வாசிப்பை நீங்கள் கேட்கலாம்; நானே கேட்கும்படி செய்கிறேன் என்றேன். ஆம், இதோ செய்துவிட்டேன். மேடையிலே கச்சேரி நடுவிலே தாம் புரிகிற செயலிலே இன்னொருவருக்கு இடம் தரலாகாது என்பது மூடக் கொள்கை. அந்தச் சம்பிரதாயக் கோட்டையை இன்று நான் தகர்க்கிறேன்!"—என்றார்.

பிறகு செம்மங்குடியின் கீதவர்ஷமும் சௌடையாவின் வாத்திய வர்ஷமும் சபையை இன்ப வெள்ளத்தில் மூழ்கடித்தன.

## 24. கலைத் திறன்

(1935)

தென்னாட்டில் திருவையாற்றில் ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவம் எப்படியோ அதேமாதிரி திருவிசைநல்லூரில் ஐயா அவர்கள் உற்சவம். ஆண்டுதோறும் ஆறுநாள் அங்கே அல்லோல கல்லோலப்படும். மிகப் பெரியவர்கள் பலர் மிகுந்த பக்தி சிரத்தையோடு அந்த உற்சவத்தில் ஈடுபாடு கொண்டு உழைத்து உற்சவம் சிறக்கவும் உலகோர் உய்யவும் தாங்கள் அருள்பெறவும் பாடுபடுவது உண்டு.

ஏகாதசி முதல் பிரதமை முடிய ஆறு நாட்களிலும் அங்கே இசை முழக்கத்திற்கு இடைஈடே இருக்காது. எல்லா வித்துவான்களும் தங்கள் கைப்பொருளைச் செலவு செய்துகொண்டுதான் அங்கே வந்து இசைத்தொண்டு புரிந்து செல்வர். ஆண்டுதோறும் தவறாமல் சென்று வரும் வழக்கத்தை உடையவர்கள் அநேகம் வித்து வான்கள்.

வேணுகான விற்பன்னர் பல்லடம் சஞ்சீவிராவ் சதுர்த்தசி அன்று கச்சேரி செய்வார். சூலமங் கலம் வைத்தியநாத பாகவதரின் சத்கதா காலட் சேபம் அமாவாசையன்று நடைபெறும். சங்கீத பூபதி மகாராஜபுரம் விசுவநாத ஐயர் கச்சேரி விடாயாற்றி அன்று.

அங்கே இசைப் பணி புரியவும் பெரிய வித்துவான் களின் கச்சேரிகளைக் கேட்கவும் பிரபலமாகிவரும் இளம் வித்துவான்கள் பலர் வருவது உண்டு.

அந்த வரிசையில் கான கலாதர மதுரை மணி ஐயரும் ஒருவர். அவர் 1931 முதல் 1954 வரை பிரதி வருஷமும் அங்கு போய்வரத் தவறியதில்லை. அமா வாசை அன்று சென்றாலும் உற்சவ ஆரம்ப தினத்தன்றே சென்றாலும் விடாயாற்றிவரையில் அங்கே இருந்து விசுவ நாதையரின் கச்சேரியைக் கேட்டுவிட்டுத்தான் ஊர் திரும்புவார். அவருடைய சங்கீதத்தில் மணி ஐயருக்கு அத்தனைப் பிரேமை, அவ்வளவு பக்தி! 'அவர் என்னு டைய ஞானசாரியர்' என்று அடிக்கடி சொல்வார்.

கும்பகோணத்தில் இருந்தவரையில் விசுவநாதையர் ஆண்டுதோறும் திருவிசைநல்லூருக்குப் போய் வரத்

தவறியதில்லை. சென்னைக்கு வந்தபின் அது நடைபெற வில்லை.

1935-ஆம் ஆண்டு உற்சவத்தில் மகாராஜபுரம் விசுவ நாதையரின் கச்சேரி. கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை வயலின், உமையாள்புரம் கோதண்டராமையர் மிருதங்கம். வாய்ப்பாட்டு வித்துவானும் மிருதங்க வித்துவானும் வெவ்வேறு ஊர்க்காரர்கள் ஆயினும் அப்போதெல்லாம் மேற்குறிப்பிட்ட மூன்று வித்து வான்களும் கும்பகோணம் வாசிகளே. பெரும்பாலான கச்சேரிகளில் இவர்கள் மூவருமே சேருவதுண்டு. மேடையில் அவர்களைச் சேர்த்துப் பார்ப்பதனால், புலமை நிரம்பிய அவர்கள் ஆற்றலைச் சேர்த்து ரசிப்பதனால் ரசிகர் கள் பேரானந்த நிலையை எய்துவர்.

'தத்துவம் என்றால் ராதாகிருஷ்ணன்; தோடி என் றால் ராஜரத்தினம் பிள்ளை' என்று ஒரு சமயம் 'ஆனந்த விகடன்' பத்திரிகையில் அப்போது அதன் ஆசிரியராக இருந்த 'கல்கி' அவர்கள் குறிப்பிட்டார். கீர்த்தனாசாரிய சி. ஆர். ஸ்ரீநிவாச ஐயங்கார், ஆசிரியர் கல்கி, ஈ. கிருஷ் ணையர், எஸ். நீலமேகம் முதலிய அறிஞர்களின் இசை விமரிசனம் மதிப்பிற்குரியது. ஆகவே தத்துவத்திற்கும் தோடிக்கும் உவமை கூறிய கல்கி அவர்களின் கண்ணோட் டத்தின்படி, 'மனோதர்மம் என்றால் மகாராஜபுரம்' என் பது மிக மிகப் பொருத்தம்.

அவருடைய செயலில் கிளிப்பிள்ளையின் கூற்றை எந்த நாளிலும் எந்த இடத்திலும் எவரும் கண்டதே இல்லை. இன்று ஒன்று, நாளை வேறு, மறுநாள் இன் னொன்று, அடுத்தநாளில் வேறொன்று—இப்படித்தான் அவருடைய கற்பனை பொங்குமே தவிர, குறிப்பிட்ட ஓர்

எல்லைக்குள் சுழன்று சுழன்று வட்டமிடும் நிலையில் ஒரு நாளும் அவர் செயல் ஆற்றினதில்லை. இன்று-அறுபத்திரண்டாவது பிராயத்தில் - அவருடைய சாரீரம் அவர் இஷ்டத்திற்குப் பேசாமல் இருக்கலாம். சாரீரம் மறைந்தால் ஞானம் மறைந்து விடுமா? கற்பனை அழிந்துவிடுமா? மனோதர்மம் மங்கிவிடுமா? அவற்றின் சக்தி எங்காவது எப்போதாவது பளிச்சிட்டுப் பிரகாசித்தே தீரும். அநுபவம் உடைய ரசிகர்கள் அந்த வாய்ப்பை எதிர்பார்த்தே அவருடைய கச்சேரியில் கூடுவர்.

இதெல்லாம் இன்று. அன்று—சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்—இம்மாதிரியான பேச்சுக்கே இடம் இருந்ததில்லை. மற்ற உயர்வம்சங்களோடு தொட்ட இடம் பேசத் தக்க சாரீர வன்மையும் அவரிடம் அப்போது சேர்ந்திருந்ததால் ஒரு கச்சேரிகூடச் சோடைபோனதே இல்லை. எங்கே பார்த்தாலும், 'மகாராஜபுரம், மகாராஜபுரம்' என்ற முழக்கந்தான். ஆகவே 1935-இல் திருவிசைநல்லூரில் நடைபெற்ற அவருடைய கச்சேரியில் ஏராளமான ரசிகர் கூட்டம்.

கச்சேரி சிறப்பாக நடந்து கொண்டிருந்தது. அன்று விசுவநாத ஐயரின் மனோதர்மம் உச்ச நிலையை எட்டி இருந்தது. அதனால் அவர் அளவுகடந்த உற்சாகத்தை அடைந்திருந்தார். நேரம் செல்லச் செல்ல, உள்ளம் உருகிப் பாடப்பாட அவருடைய உற்சாகம் கட்டுமீறிப் போய்க் கொண்டிருந்தது. அந்நிலையில் அவர் கருத்து பிலஹரி ராகத்தில் சென்றது, ராகம் பாடினார்; பிரமாதமாகப் பாடினார். பிறகு உருப்படி. 'இந்த கன்னுனந்த மேமி' என்ற தியாகராஜ கிருதியைச் சிறப்புத் தோன்றப் பாடினார்.

அன்று ராஜமாணிக்கம் பிள்ளையும் மிகுந்த உற்சாக நிலையிலேதான் இருந்தார். பொதுவாகவே இம்மாதிரி சந்தர்ப்பங்களில் கலைஞர்கள் ஒருவரைப் பார்த்து ஒருவர் அதிக உற்சாகம் கொள்வது இயல்பு. ராஜமாணிக்கம் பிள்ளையிடம் அந்த இயல்பு மிக அதிகம். ஆகவே அவரும் பிலஹரி ராகத்தை வித்துவான் பாடிவிட்ட அதே அமைப்பில் வெகு அழகாக வாசித்து முடித்தார். பிறகு கீர்த்தனையிலும் வித்துவானோடு மெச்சத்தக்க முறையில் ஒத்துழைத்தார். அதாவது விசுவநாதையர் பாடுகிறபோது ராஜமாணிக்கம் பிள்ளை வாசித்தார். ஆனால் அதைப் பார்த்து அறிய முடிந்ததே தவிர, கேட்டு அறிய முடியவில்லை. வாத்தியத்தின் நாதம் பாடுபவரின் குரலோடு, வேறு பிரித்து உணர முடியாத நிலையில் அப்படி ஒன்று பட்டு இழைந்தது. என்றுமே பிள்ளை அவர்கள் மேடையில் பக்கவாத்தியமாக அமர்ந்து செயல்புரிகிறபோது பெரும்பாலும் இப்படித்தான்.

கீர்த்தனம் முடிவடைந்தது. விசுவநாத ஐயர் சரணத்தில் நிரவல் செய்து ஸ்வரம் பாட ஆரம்பித்தார். நாலைந்து ஆவர்த்தனங்களுக்குப் பின் காலப் பிரமாணத்தைத் தள்ளிப் போட்டார். மேலும் சில ஆவர்த்தனங்களுக்குப் பின் இன்னும் அதிகமான துரித காலத்தைக் கையாண்டார். இப்படியே போகப் போக ஆவேசம் வந்தவர் போல அவர் படுவேகத்தில் பாடிக்கொண்டே போக, ராஜமாணிக்கம் பிள்ளையும் சிரித்த முகத்துடன் அவரைப் பின் தொடர்ந்து குதூகலத்துடன் வாசித்துக்கொண்டே வந்தார்.

கோதண்டராமையரைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். இம்மாதிரி செயல்கள் எல்லாம் அவருக்குத் தண்ணீர் படுகிற பாடு. பெரும்பாலும் எப்போதுமே அவர் பற்றற்ற

யோகியின் நிலையிலே விளங்குவார். மேடை நிகழ்ச்சி களிலே மிகச் சிறந்த கட்டம் ஒன்று குறுக்கிட்டு மற்றவர் கள் அனைவரையும் 'ஆஹா ஆஹா' என்று கை தட்டி ஆர்ப்பரிக்க வைத்தாலும் கோதண்டராமையர் சற்றுக்கூட அசைந்து கொடுக்க மாட்டார். அதே மாதிரி, யாராவது செயல் புரிகிறபோது பிழை நேர்ந்தாலும் லேசாகக்கூட முகத்தைச் சுணங்கமாட்டார். தாம் பயின்ற கலையில் அப் பழுக்கு இன்றி அநாயாசமாகச் செயலாற்றும் வல்லமை அவருக்கு இருந்ததால் எதையும் அவர் பிரமாதமாகக் கருதுவதில்லை. அன்றும் அவ்வாறே பாடகர் அமைக்கும் காலப் பிரமாணத்தில் ஆணி அடித்தாற்போல நின்று விளை யாடிக் கொண்டிருந்தார்.

'இதற்கு மேல் இல்லை' என்று சொல்லக்கூடிய படு வேகமான காலப் பிரமாணம்! ஸ்வரங்கள் பல்லில் பட்டு, உதட்டில் உராய்ந்து, ஒலிக்க முடியாத வேகம்! விசுவநாத ஐயர் அந்த வேகத்தில் மிக நீண்ட ஆவர்த்தனம் ஒன்றைப் பாடி விட்டார்.

ராஜமாணிக்கம் பிள்ளை வாங்கி வாசிக்கத் தொடங்கி னார். வேகம், சஞ்சாரம், மனோ தர்மம் முதலிய எல்லா அம்சங்களிலும் விசுவநாத ஐயர் எப்படியெல்லாம் பாடி னாரோ அப்படியெல்லாம் இவரும் வாசித்தார். அத்துடன் தம்முடைய மனோதர்மத்தையும் கலந்து குழைத்துச் சர்க் கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தாற் போல அந்த ஆவர்த்தனத்தை, 'மிகப் பிரமாதம்' என்ற அளவில், 'இம் மாதிரி இதற்கு முன் கேட்டதில்லை' என்ற முறையில் வாசித்தார். திருப்பத்திற்குத் திருப்பம், அடிக்கடி கர கோஷம்! விசுவநாத ஐயர், 'பலே பேஷ்!' என்ற வாய் ஓயவே இல்லை.

ஆவர்த்தனம் முடிவடைந்தது. அதுவரையில் அடுத்த ஆவர்த்தனம் பாடத் தயாராக இருந்த விசுவநாத ஐயர் அந்த நேரத்தில் தம் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டார்.

"பேஷ் பேஷ்! மிகப் பிரமாதமாக அமைந்துவிட்டது. இனிமேல் இதைத் தொடர்ந்து நான் பாடப்போவதில்லை. இது இப்படியே இருக்கட்டும்" என்று கூறி, கூறியது போலவே வேறு பாட ஆரம்பித்தார். அந்த இடத்திலே ஒரு கரகோஷம்! அதற்குப் பொருள்........

சாதாரணமாக ஸ்வரப் பிரஸ்தாரத்தின் முடிவைத் தங்களுடையதாக ஆக்கி அந்நிலையிலே பல்லவி எடுப்பது தான் வாய்ப்பாட்டு வித்துவான்களின் வழக்கம். பெரிய வித்துவான்கள் விஷயத்தில் நூற்றுக்கு நூறு இது அமுலில் இருந்து வருவது. அவ்வாறிருக்க விசுவநாத ஐயர் இவ் வாறு நடந்துகொண்டார் என்றால் ராஜமாணிக்கம் பிள்ளை யின் கலைத் திறனைச் சொல்லவோ, அதைப் பகிரங்கமாக இவ்வளவு தூரம் பாராட்டி அதற்கு உரிய மதிப்பை அளித்த விசுவநாத ஐயரின் பெருந் தன்மையையும் கலாபக்தியையும் சொல்லவோ.?

## 25. இசைத் தட்டுகள்

**(1938)**

எங்கே பார்த்தாலும்—வீட்டுக்கு வீடு—கிராம போன் இசை முழக்க நாட்கள் அவை. கிராமபோன் கம்பெனியாருடைய தொழில் ஓங்கி நின்ற காலம் அது. அதற்கேற்ப அவர்களும் புதிது புதிதாகத் தோன்றும் திறமை மிகுந்த இசைப் புலவர்களைத் தேடிப் பிடித்து அவர்கள் இசையைப் பதிவு செய்து பரப்பி வந்தனர்.

1938-இல் 'பிராட் காஸ்ட்' கிராமபோன் கம்பெனியார் அந்த முறையில் ராஜமாணிக்கம் பிள்ளையை அணுகினர். அப்போது அவருக்கு வயது நாற்பது. பரிபக்குவமான ஞானம்; வாசிப்பில் பிரமிக்கத் தக்க லாகவம்; பல முறை பல மேடைகளுக்கு வாசித்து வாசித்துப் பல்வேறு விதமான சிறப்புக்களைக் கிரகித்து ஜீரணித்துக்கொண்ட தனி அநுபவம். இவ்வளவோடு மிடுக்கும், கனமும், நயமும், அழுத்தமும், சங்கதிக் கோவைகளும் ஜிலு ஜிலுப்பும் நிறைந்து ததும்பச் சில பாடல்களை அவர் இசைத் தட்டுகளில் பதிவு செய்தார்.

பிலஹரி ராகத்தில் அமைந்த 'இந்தகன்னு னந்த மேமி,' தந்யாசியில் அமைக்கப்பெற்ற 'சங்கீத ஞானமு' என்ற தியாகையர் கிருதிகள் இரண்டும், 'சாமிகி சரி எவரு?' என்ற பேகட ராக உருப்படியும் அவரால் முதல் முதலாகப் பதிவு செய்யப் பெற்றவை. அவை வெளியான புதிதில் எங்கும் அந்தப் பாடல்கள் அமைந்த இசைத் தட்டுகளின் முழக்கம்தான்!

இதன் பின்னர் அவர் இன்னும் பல பாடல்களை இசைத் தட்டுகளில் பதிவு செய்திருக்கிறார். அனைத்துமே சிறப்புடையவைதாம். ஆனால் அவை என்ன காரணத்தினாலோ மேலை நாட்டிலிருந்து பிரதி செய்யப்பெற்று வெளி வரவே இல்லை.

இந்த ஆண்டில் ராஜமாணிக்கம் பிள்ளையின் குடும்பத்தில் மற்றொரு சந்தோஷ நிகழ்ச்சி நடைபெற்றது. அவர் இன்னும் ஒரு பெண் குழந்தைக்குத் தந்தை ஆனார். பெரியோர்கள் அதற்குக் கோமளவல்லி என்று பெயரிட்டு மகிழ்ந்தனர்.

# 26. இசை வேளாளர் சங்கம்

(1938)

கும்பகோணத்தில் 1938-இல் 'இசை வேளாளர் சங்கம்' உதயம் ஆயிற்று. இசை வேளாளர் என்ற பெயர் நாதஸ்வர வாத்தியத்தைப் பாரம்பரையாகக் கையாள்பவர் இனத்தைக் குறிக்கும். அவர்கள் அதிகமாக வாழ்வது தஞ்சை ஜில்லாவில்தான். அந்த ஜில்லாவின் நடுநாயகம் கும்பகோணம். மற்ற இடங்களில் காட்டிலும் அந்த இடத்திலே அப்படி ஒரு சங்கம் உதயமாவது பொருத்தந் தானே?

தொழில் துறையில் நாதஸ்வரக்காரர்களிடையேயுள்ள குறைகளைப் போக்கவும் மற்றவர்களிடமிருந்து அவர்களுக்கு நியாயமான முறையில் கிடைக்க வேண்டிய மரியாதை, சம்மானம் முதலிய அம்சங்கள் நிலைக்கவும் அவர்களுள் ஒற்றுமை தழைக்கவும் இப்படியாகப் பல குறிக்கோள்களைக் கொண்டு தோன்றியது இசை வேளாளர் சங்கம்.

இச்சங்கத்தைத் தோற்றுவித்தவர் ராஜமாணிக்கம். கலைத் திறன், சிபாரிசு, பெரிய மனிதர்களின் தனி ஆதரவு, அதிருஷ்டம் இவற்றால் முன்னுக்கு வந்தவர்கள் போக எஞ்சியவர்களின் வாழ்க்கை நிலை படுமோசம். காலமெல்லாம் கலைக்காகப் பாடுபட்டுக் கலையில் தேர்ந்தும் ஆதரவற்றுத் தவிப்பவர் எத்தனையோ பேர். கலையிலும் முன்னேற்றம் காணாது, வேறு தொழிலுக்கும் அருகதை இல்லாது, வறுமையை வாழ்க்கைத் துணை ஆக்கிக்கொண்டு துன்பப் படுவோர் எண்ணிறந்தோர். இவர்களுக்கு ஏதேனும் நன்மை புரியவேண்டும் என எண்ணினார் ராஜமாணிக்கம். ஆண்டு, அறிவு, அநுபவங்களில் முதிர்ந்த

பெரியோர்கள், சம வயது உடையவர்கள், இளைஞர்கள் எல்லாரையும் கலந்துகொண்டு சங்கத்தை ஆரம்பித்தார். இவரையே தலைவராக எல்லாரும் தேர்ந்தெடுத்தனர். சங்க அலுவல்கள் சிறப்பாக நடைபெறத் தொடங்கின. அதற்கான செலவுகளை ராஜமாணிக்கம் தாமே ஏற்றுக்கொண்டார். ஏறக்குறைய, சராசரி ஆண்டு ஒன்றுக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேல் செலவு ஆயிற்று. பல நற்செயல்கள் கைகூடின.

சங்கத்தின் பெயரால் அங்கத்தினர்களைச் சில கட்டுத்திட்டங்களுக்கு உட்படுத்தி, முன்னேற்றங்களுக்கு உரிய சில சேவைகளைச் செய்தார். வித்துவான்களை எல்லாரும் நன்கு மதிக்கவேண்டும்; நன்றாக ஆதரிக்க வேண்டும்; வித்துவான்களும் அவரவர் நிலை, தகுதி முதலியவற்றை நன்கு உணர்ந்து அவற்றுக்கு ஏற்ப நடந்துகொள்ளவேண்டும்; எவ்வகையாலும் கலை அதற்குரிய கௌரவத்தைப் பெறவேண்டும்—இப்படியாகப் பற்பல நியதிகளை ஏற்படுத்தி, அவை நிலைபெறப் பாடுபட்டார். தொடர்ந்து ஒன்பது ஆண்டுகள் சங்கத்தின் தலைவராகப் பணிபுரிந்த ராஜமாணிக்கம் பிள்ளை இடையே சிறிது காலம் ஓய்வு பெற்றபின் இப்போது மீண்டும் தலைவராகப் பணியாற்றி வருகிறார்.

## 27. திருவிதாங்கூர் ஆஸ்தான வித்துவான்

(1940)

காயகசிகாமணி அரிகேசநல்லூர் முத்தையா பாகவதரைக் கலைகளை ஏற்றுமதி செய்யும் கப்பல் என்று கூசாமல் சொல்லலாம். அவர் பல சம்ஸ்தானங்களில், பல ஜமீன்

களில் சென்று தங்கி, கலை ஆட்சிபுரிந்தார். அங்கெல்லாம் தம்முடைய கலைத்திறமையை விளக்கஞ் செய்வதுடன் அவர் அமையவில்லை. சக-கலைஞர்களை அழைத்துப் பிரகாசிக்கச் செய்தார். இளம் கலைஞர்களுக்கு இடமளித்துக் கைதூக்கிவிட்டார். திருவிதாங்கூர் மகாராஜாவின் அழைப்பிற்கு இணங்கி அங்கே சென்று அவர் சில காலம் தங்கினார். அச்சமயத்தில் அங்கே அவர் இசைக்கலை வளர எடுத்துக்கொண்ட முயற்சிகள் பல. அவ்விடத்திற்கு ஆஸ்தான வித்துவான்களாக ஆக்கிவைத்தவர் சிலர்.

சங்கீத வித்துவான்கள்; முசிரி சுப்பிரமணிய ஐயர், செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர், ஜி. என். பாலசுப்பிரமணியம், ஆலத்தூர்ச் சகோதரர்கள் ஆகியோர்.

இந்த முறையில் ராஜமாணிக்கம் திருவிதாங்கூரில் ஆஸ்தான வயலின் வித்துவானாக நியமிக்கப் பெற்றார். அவரோடு பாப்பா வேங்கடராமையாவும், மாயூரம் கோவிந்தராஜ பிள்ளையும் ஆஸ்தான வயலின் வித்துவான்களாக நியமனம் பெற்றனர்.

ஆஸ்தான மிருதங்க வித்துவான்களாகப் பழனி சுப்பிரமணிய பிள்ளையும், பாலக்காடு மணி ஐயரும் பதவி ஏற்றார்கள்.

இவர்களால் அலங்கரிக்கப் பெற்ற திருவிதாங்கூர் அரசவை முத்தையா பாகவதரை நடுநாயகமாகக் கொண்டு, கர்நாடக சங்கீதக்கலை மேன்மையுடன் பிரகாசிக்கும் கேந்திரஸ்தானமாயிற்று.

"தொழில் முறையில் நான் முதல் முதலாகக் கச்சேரி செய்து, குளிர்ந்த மனத்தோடு கூடிய பெரிய மேதையிடம் விசேஷ சம்மானங்களைப் பெற்றது கரூரில்தான். அதற்கு அன்று அங்கே காரணமாக இருந்த முத்தையா பாகவதர்

அவர்களே கால் நூற்றாண்டுக்குப் பிறகு என்னை ஆஸ்தான வித்துவானாக்கி வைத்தார். இவைகளை என்னால் மறக்கவே முடியாது" என்கிறார் ராஜமாணிக்கம்.

## 28. சமயோசிதம்
(1941)

பேச்சு ஒரு கலை; அதில் பலவகை. கேட்பவரின் உள்ளத்தில் நன்கு பதிந்து அந்த இடத்திலே ஆணித்தரமான அபிப்பிராயத்தை வேரூன்றச் செய்வது ஒருவகை. பக்தி உணர்வைத் தூண்டுவது மற்றொரு வகை. ஆவேச உணர்ச்சியை உண்டுபண்ணுவது இன்னொருவகை. கவலையை மறந்து சிரிக்கச் செய்வது வேறொரு வகை. மேதா விலாசம் பரிமளிக்கச் சிலேடையாகப் பேசுவது ஒரு வகை.

கடைசியில் குறிப்பிட்ட முறையில் பேசுவதில் ராஜமாணிக்கம் பிள்ளை மிகவும் சமர்த்தர். மற்றவர்கள் இவ்வாறு பேசுவதற்கும் கலைஞர்கள் பேசுவதற்கும் வித்தியாசம் உண்டு. கலைஞர்கள் பேச்சிலே கலைச் சிறப்பும் சேர்ந்து மிளிரும், மணம் மிகுந்த மலர் மாலையிலே இழைந்தோடும் பொற்சரிகையின் இழைகள் போல.

செட்டி நாட்டிலே பிரமுகர் ஒருவர் இல்லத்திலே திருமண வைபவம். அதில் அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் கச்சேரி. பக்கவாத்தியமாக வயலின் இசைக்க, சங்கீத ரத்னம் மைசூர் டி. சௌடையாவை ஏற்பாடு செய்து முன் பணம் அனுப்பி விவரமாகக் கடிதமும் எழுதி இருந்தார்கள். முதல்நாள் வரையில் சௌடையாவிடமிருந்து பதில் இல்லை. வைபவம் நிகழ்த்துபவர்கள் மிகவும் கவலைப்பட்டார்கள். 'கடிதமும் பணமும் அவர் கைக்குச் சேர்ந்தனவோ என்னவோ; அவர் வெளியூர் சென்றிருந்து,

அவை அவரைத் தேடிக்கொண்டு போயிருக்கலாம்; அல்லது அவர் கச்சேரியை ஒப்புக்கொண்டதாக எழுதிய கடிதம் நமக்குக் கிடைக்காமல் தவறி இருக்கலாம்' என்று பல பல எண்ணிக் குழம்பினர்கள். குழம்பிக் கொண்டே இருந்தால் முடிவு? இவ்வளவு பெரிய கல்யாணத்தில் சிறந்த வித்துவானின் கச்சேரியை ஏற்பாடு செய்துவிட்டுக் கடைசியில் அது நடைபெருமல் போக விடுவதா?

தீவிரமாக யோசித்து ஒரு நல்ல முடிவுக்கு வந்தார்கள். 'இன்று பக்க வாத்திய வித்துவான்களில் தலைசிறந்தவர்கள் இருவர். ஒருவர் மைசூர் சௌடையா; மற்றவர் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை. ஒருவர் இல்லை என்ருல் மற்றவரை நாடவேண்டியதுதானே? அந்த முறையில் இப்போது நாம் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையை ஏற்பாடு செய்யலாம்' என்று தீர்மானித்தார்கள்; அவ்வாறே செய்தார்கள்.

மறுநாள் மாலை நேரம். காலையிலேயே அவ்விடத்தை அடைந்திருந்த ராமானுஜ ஐயங்கார், ராஜமாணிக்கம் பிள்ளை, மிருதங்க வித்துவான் எல்லாரும் உரிய நேரத்தில் வைபவப் பந்தலை நோக்கிப் புறப்பட்டனர். அப்போது எல்லோரும் ஆச்சரியப்படத்தக்க முறையில் சௌடையா அங்கே வந்து சேர்ந்தார். வைபவம் நிகழ்த்துபவர்களுக்கு அவரைப் பார்த்ததும் ஒருபுறம் சந்தோஷம் ஏற்பட்டது; மற்ருெருபுறம் குழப்பமும் ஏற்பட்டது. 'இப்போது என்ன செய்வது? இரண்டு வயலின் வித்துவான்களும் மதிப்பிற்கு உரியவர்கள்; இருவருமே நம் அழைப்பின் பேரிலேதான் இங்கே வந்திருக்கிருர்கள். இவர்களில் யாரை ஐயங்காரின் கச்சேரிக்கு வாசிக்கச் செய்வது?' என்று சங்கடப்பட்டார்கள்.

அவர்களுள் ஒருவர் ஒரு யோசனை சொன்னார். சிலர் அதை ஆமோதித்தனர். 'சரி. இந்த யோசனையை வித்துவான்களிடம் சொல்லுவோம். அவர்களும் ஆமோதித்தால் அப்படியே ஜமாய்த்துவிடலாம்' என்று வித்துவான்கள் இருக்கும் இடத்திற்குச் சென்றார்கள். தங்கள் யோசனையை வெளியிட்டார்கள்.

ஐயங்கார் அவர்களின் கச்சேரிக்குச் சௌடையா, ராஜமாணிக்கம் பிள்ளை இருவருமே வயலின் வாசிப்பது என்பதுதான் அந்த யோசனை.

ராஜமாணிக்கம் பிள்ளை இதைக் கேட்டுக் கலகல வென்று வாய்விட்டுச் சிரித்தார். "பேஷ்! பேஷ்! சரியான யோசனை! வரிசை அறிந்து கலையை ரசிப்பது உயர்ந்த செயல். எல்லா இடங்களிலுமே அதைக் காண்பது அரிது. உங்கள் யோசனை மிகப் பிரமாதமானது! அதன்படியே செய்துவிடலாம். ஆனால் அதற்காக நீங்கள் ஒரு காரியம் செய்யவேண்டும். நீங்கள் அதைச் செய்தால் நாங்கள் இதைச் செய்யத் தடையில்லை" என்றார்.

"நாங்கள் என்ன செய்ய வேண்டும்?"

"ஐம்பது ஆயிரம் ரூபாய் கச்சேரி மேடையில் தயாராக வைத்திருக்க வேண்டும்."

பிரமுகர்கள் திடுக்கிட்டார்கள்; ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். 'ஐம்பது ஆயிரமா? எதற்கு?' என்று கண்ணால் கேட்டுக் கொண்டார்கள். ஒருவர் ராஜமாணிக்கம் பிள்ளையையே நேரிடையாகக் கேட்டார்.

"பரிசாக அளிக்க" என்றார் ராஜமாணிக்கம் பிள்ளை.

"பரிசா! யாருக்கு?"

"தோற்றவருக்கு."

"தோற்றவருக்குப் பரிசா?"

"ஆமாம். மற்ற இடங்களில் ஜயித்தவருக்குப் பரிசு; இங்கே தோற்றவருக்குப் பரிசு!"

"நீங்கள் சொல்வது ஒன்றும் புரியவில்லையே. தோல்வி யாவது, ஜயமாவது? யாருக்கு ஜயம், யாருக்குத் தோல்வி?"

"அது கச்சேரியின் முடிவிலேதான் தெரியும்."

"சற்று விளக்கமாகத்தான் சொல்லுங்களேன்."

"இதோ சொல்கிறேன். சமமான யோக்கியதை உடைய இருவர் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் ஒரே காரியத்தில் ஈடுபட்டால் நிச்சயமாக இருவருமே ஜயிக்க முடியாது; இருவருமே தோல்வியுறவும் முடியாது. கண்டிப் பாக ஒருவர் செயலுக்கு ஒருவர் செயல் மயிரிழைப் பிர மாணமாவது ஏற்றத்தாழ்வாக இருந்தேதீரும். ஜயித் தவர், அவரைச் சார்ந்தவர் அனைவருக்கும் அளவுகடந்த மகிழ்ச்சி ஏற்படும். செய்தி காட்டுத் தீப்போல் நாடெங் கும் பரவும். அதிலிருந்து அவருக்கு எங்கும் பிரமாத மான வரவேற்பும், ஆதரவும் கிட்டும். தோற்றவருக்கோ இந்நிலை இல்லை. தோல்வி அவருடைய கலை வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடும். அதுமுதல் அவரை யாரும் தொழில் துறைக்கு அழைக்கமாட்டார்கள். அழைத்தா லும் செல்ல அவர் உள்ளம் இணங்காது. அதனால் வாழ் நாள் முழுவதற்கும் தேவையான பொருளை அவர் உடனடி யாகவே அடைந்துவிடுவது நலம் இல்லையா? இப்படி ஒரு போட்டிச் செயலை யார் ஏற்படுத்துகிறார்களோ அவர்கள் தானே அந்தச் சேம நிதிப் பொறுப்பையும் ஏற்கவேண் டும்? அதனால்தான் உங்களிடம் சொன்னேன்."

இப்போது எல்லாருக்கும் எல்லாம் புரிந்துவிட்டது. தங்கள் யோசனை எவ்வளவு சரி அற்றது என்பதை அவர் கள் நன்கு உணர்ந்தார்கள்.

"இவ்வளவு தெளிவாக எடுத்துக் கூறினதற்கு மிகவும் நன்றி. இதேமாதிரி இப்போது நாங்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கும் நீங்கள்தான் தகுந்த யோசனை சொல்லவேண்டும்" என்றார்கள்.

"எங்களில் ஒருவர் ஐயங்கார் அவர்களுக்குப் பக்க வாத்தியம் வாசிப்பது; இன்னொருவர் வயலின் ஸோலோக் கச்சேரி செய்துவிடுவது."

"யார் எதைச் செய்வது என்பதை யார் நிர்ணயிப்பது?"

இந்த இடத்தில் சௌடையா பேசினார். "நான் 'ஸோலோ' வாசித்துவிடுகிறேன்" என்றார்.

அனைவரும் அதை ஏகமனத்துடன் ஆமோதித்தனர். உடனே எல்லோரும் புறப்பட்டு விழாப் பந்தலை அடைந்தார்கள். சற்று நேரத்தில் ஐயங்காரின் கச்சேரி ஆரம்பம் ஆயிற்று. ராஜமாணிக்கம் பிள்ளை அக்கச்சேரிக்குப் பக்கவாத்தியமாக வயலின் இசைத்தார். அதே இடத்தில் இரவு சௌடையாவின் வயலின் ஸோலோக் கச்சேரி ஜீமூதமாக நடைபெற்றது.

நெருக்கடியான இதுபோன்ற சந்தர்ப்பங்களில் சமத்காரமாகப் பேசியும் பெருந்தன்மையாக நடந்து கொண்டும் சமாளித்துத் தம் கௌரவத்தையும், பிறர் கௌரவத்தையும், கலைக்குரிய மரியாதையையும் காப்பாற்றி எல்லா இடங்களிலும் எல்லாருக்கும் நல்லவராக விளங்குவதில் ராஜமாணிக்கம் பிள்ளை மிகவும் வல்லவர்.

## 29. யானைப் பரிசில்

(1942)

அரசாங்க அழைப்பின் பேரில் ராஜமாணிக்கம் பிள்ளை திருவிதாங்கூர் சென்றார். அங்கே ஒரு கலை

நிகழ்ச்சி. அப்போது அவர் அங்கே ஆஸ்தான வித்துவா ஞக இருந்து வந்தார். எப்போது சென்றாலும் மகாராஜா வின் விருப்பப்படி சிலநாள் அங்கே தங்கி இருந்து ஊர் திரும்புவது அவர் வழக்கம். இப்போதும் அப்படித் தான்.

ஒருநாள் மகாராஜாவும் ராணியாரும் ஓய்வுடனும் உல் லாசத்துடனும் இருந்த சமயம் ராஜமாணிக்கத்தை அழைத் தார்கள். சற்றுநேரம் அளவளாவினார்கள். பிறகு சிறிது நேரம் வயலின் வாசிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். மிருதங்கம் முதலிய தாள வாத்தியத் துணை எதுவும் இல் லாமல் அவர் வாசித்தார். ஆர்வமும் உற்சாகமும் மீதூர மிகப் பிரமாதமாக வாசித்துவிட்டார். ரசிகத்தன்மை மிகுந்த மகாராஜாவும் ராணியாரும் ஆனந்தபரவசம் எய் தினர்.

அந்தப் பரவச உணர்ச்சியோடு ராஜமாணிக்கத்தை நோக்கி மகாராஜா சொன்னார்.

"உங்களுடைய புலமைக்கு இந்த வையத்தையே பரிசாக வழங்கலாம். நீங்கள் ஆஸ்தான வித்துவான் பீடத்தில் அமர்ந்திருந்து எங்கள் அரசவையை அலங்கரிப் பது இந்தச் சம்ஸ்தானத்தின் பெரும் பாக்கியம். உங்கள் மனத்தில் அபிலாஷை ஏதாவது இருந்தால் தெரிவியுங் கள். நிறைவேற்றி வைக்கிறோம்" என்றார்.

"மகாராஜா அவர்களின் அன்பாலும் அருளாசியா லும் அடியேனுக்கு ஒரு குறையும் இல்லை. தங்களுடைய மனங்கனிந்த அன்பு ஒன்றே எனக்கு மதிப்பற்ற பரிசு அல்லவா?" என்றார் ராஜமாணிக்கம்.

மகாராஜா திருப்தியுறவில்லை.

"நீங்கள் இப்படிச் சொல்லக் கூடாது. உங்களுக்கு இப்போது ஏதாவது செய்ய வேண்டும் என்று எங்கள் மனம் அவாவுகிறது. உங்களுக்கு ஒரு குறைவும் இல்லை என்பதில் எங்களுக்கு மிகவும் சந்தோஷமே. உங்களைச் சார்ந்த யாருக்காவது...." என்று சற்று இழுத்தாற்போல் கூறி நிறுத்தினார்.

ராஜமாணிக்கம் சற்று நேரம் யோசித்தார். பிறகு சொன்னார்.

"இப்போது எது கேட்கவும் எனக்குத் தோன்ற வில்லை. ஆனால் மகாராஜா அவர்கள் அளவுகடந்த அன்போடு இவ்வளவு தூரம் வற்புறுத்துகிறபோது அதை மறுப்பதும் சரியில்லை. ஆகவே ஒன்று கேட்கிறேன். சர்வேசுவரன் என் நீங்காத உறவினர். கும்பகோணத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஆண்டவனுக்கு யானை இல்லை. மகாராஜா அவர்கள் அந்த ஆலயத்திற்கு யானை ஒன்று அளிக்க வேண்டுகிறேன்."

"ஆலயத்திற்கா!...."

மகாராஜா திடுக்கிட்டாற்போல இப்படிக் கேட்டதும் ராஜமாணிக்கத்திற்கு ஒன்றுமே புரியவில்லை. 'ஏதாவது பிசகு செய்துவிட்டோமோ?' என்று ஐயுற்றார். இதற்குள் அருகே இருந்த அநுபவஸ்தர் ஒருவர் சொன்னார்.

"மகாராஜா நேரிடையாக ஆலயத்திற்குத் தானமாக எதுவும் வழங்குவதில்லை."

ராஜமாணிக்கம் விழிப்புற்றார். உடனே தம் கோரிக்கையை மாற்றிக்கொண்டார். "எனக்கு ஒரு யானை கொடுங்கள்" என்றார்.

மகாராஜா பதில் சொல்லவில்லை. அவர் முகத்திலும் எவ்வித மாறுதலும் இல்லை. அந்நிலையில் அங்கே இருந்தவர்கள் பிரிந்தார்கள்.

"அன்றுமாலை ஆறு மணிக்குத்தான் எனக்கு மகாராஜா அவர்களின் பதில் கிடைத்தது. நேரிடையாக அல்ல; ரேடியோ அறிவிப்புமூலம்.

" 'லீலா என்ற ஆறுவயதுடைய பெண் யானை திருவிதாங்கூர் ஆஸ்தான வயலின் வித்துவான் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை அவர்களுக்கு மகாராஜா அவர்களால் பரிசாக வழங்கப் பெற்றது'-இதுதான் ரேடியோ அறிவிப்பு.

"டாக்டர் சி. பி. ராமசுவாமி ஐயர் அவர்கள் அப்போது அங்கே திவான் பதவி வகித்து வந்தார். அவருடைய சிறந்த அறிவும் உயர்ந்த ஆற்றலும் அந்தச் சம்ஸ்தானத்தில் நிகழ்த்தி வைத்த அபிவிருத்தித் திட்டங்களும் முன்னேற்றச் செயல்களும் எண்ணற்றன. எந்த ஒரு காரியமானாலும் மகாராஜா திவானைக் கலந்து ஆலோசியாமல் செய்வதில்லை. இதனால்தான் நான் யானையைக் கோரினபோது மகாராஜா பதில் சொல்லவில்லை. பிறகு தனிமையில் திவானைக் கலந்திருக்கிறார். ஸ்ரீ ராமசுவாமி ஐயர் தமிழ் நாட்டுப் பேரறிஞர் அல்லவா? அவர் கும்பகோணத்தைப் பற்றியும், கும்பேசுவரர், மங்களாம்பாள் ஆகிய தெய்வங்களின் சிறப்பைப் பற்றியும் விரிவாக மகாராஜாவுக்கு எடுத்துக் கூறி அந்த ஆலயத்திற்கு யானையை அர்ப்பணம் செய்வது சிறப்புத்தான் என்று ஆமோதித்திருக்கிறார். 'அப்படியானால் ராஜமாணிக்கத்திற்கு யானை வழங்கினதாக ரேடியோ மூலம் பிரகடனம் செய்துவிடச் சொல்லுங்கள்' என்று மகாராஜா உத்தரவு பிறப்பித்திருக்கிறார். இந்த விவரமெல்லாம் பின்னால் எனக்குத் தெரிந்தது.

"இந்த இடத்தில் ஈசுவர சங்கல்பம் ஒன்று இருக்கிறது. எங்கள் குலதெய்வம் முருகன். பூர்விகக் கிராமமாகிய ஆலங்குடியில் வாழ்ந்து வரும் முருகப் பெருமானைப் பலகாலமாக நாங்கள் வழிபட்டு வருகிறோம். கும்பகோணத்தில் நிரந்தரமாக வசிக்கத் தொடங்கிய பின் அண்மையில் உள்ள சுவாமி மலையில் கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் சுவாமிநாத சுவாமியை ஆராதித்து வருகிறோம். அந்தப் பழக்கத்தில் எடுத்ததற்கெல்லாம் சுவாமிநாத சுவாமியை வேண்டுவதுண்டு. கடிதம் எழுதுவது முதல் கல்யாணப் பத்திரிகை அச்சிடுவது வரை அனைத்திலும் 'சுவாமிநாதன் துணை' என்று குறிப்பிடுவது வழக்கம். இப்படி மூச்சுக்கு மூச்சு, சுவாமிநாதக் கடவுளை நினைக்கும் நான் அந்தக் கடவுளுக்கு யானை வேண்டும் என்று கேட்காமல் கும்பேசுவரனுக்கு வேண்டும் என்று ஏன் கேட்டேன்? அது எனக்கே புரியவில்லை. அதுதான் ஈசுவர சங்கல்பம் போலும்!

"ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களைச் சந்தித்தபோது அவர் என்னைப் பார்த்து நகைத்தார். அந்த நகைப்பில் பரிகாசம் தொனித்தது; அநுதாபம் ஒலித்தது. நான் ஒன்றும் புரியாமல் திகைத்தேன். 'என்ன?' என்று பவ்வியமாகக் கேட்டேன்.

" 'உன்னை மிகவும் புத்திசாலி என்று எண்ணியிருந்தேன். இப்போதுதான் அது தவறு என்று புரிந்து கொண்டேன்' என்றார்.

" 'எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்?' என்று கேட்டேன்.

" 'மகாராஜா எது வேண்டுமானாலும் கேள், தருகிறேன் என்றால் ஒன்றுமே அறியாத பாமரன் கூட, உப

யோகம் உள்ளதாக, பெருமானம் உள்ளதாக ஏதாவது கேட்பான். பொன், பொருள், வீடு வாசல், நிலபுலன்—இப்படி வாழ்க்கைக்கு உபயோகமாக எவ்வளவு இல்லை? எல்லாவற்றையும் விட்டு விட்டுப் போயும் போயும் யானையைக் கொடுங்கள் என்று கேட்டாயே! உன்னை என்னவென்று சொல்வது? அதனுல் உனக்கு என்ன உபயோகம்? யானையைக் கட்டி வைத்துத் தீனி போடுவது என்பது சாமானியமான விஷயமா? அதற்கு உனக்குத் தகுதி இருக்கிறதா? பகைவனை வேரறுக்க அவன் வீட்டடியில் யானையைக் கொண்டுபோய்க் கட்டுவது பழைய காலத்து வழக்கம். உன் ஆஸ்தி முழுவதும் இந்த யானையின் பராமரிப்புக்கே போதாதே! அப்படித்தான் யானையைக் கேட்டாயே, அதன் பராமரிப்புக்கான வசதிகளையும் சேர்த்தாற்போல் கேட்டுப் பெற்ருயோ? என்னவோ போ. உன் காரியம் கொஞ்சம் கூட எனக்குப் பிடிக்கவில்லை' என்று அலுப்பும் சலிப்புமாக ஒரே மூச்சில் பேசி முடித்தார் பாகவதர்.

"'யானை எனக்காக இல்லை ஐயனே. கும்பேசுவர சுவாமிக்காக' என்று கூறி அவரை ஒருவாறு சமாதானம் செய்தேன்.

"ரேடியோ அறிவிப்புக்குப் பிறகு என்னைக் காணும் அவ்வூர் வாசிகள் ஒருவருக்கொருவர் என்னைச் சுட்டிக் காட்டித் தங்களுக்குள் பேசிக்கொள்ளலானுர்கள், 'அதோ, அவர்தான் ராஜமாணிக்கம். நம் மகாராஜாவிடம் யானைப் பரிசில் பெற்றவர் அவர்தாம்!' என்று.

"மறுநாள் நான் ஊர் திரும்பினேன்.

"ஒரு பொருளைக் கேட்பது, அளித்துவிட்டதாக வாக்குப் பெறுவது இரண்டையும் விட முக்கியமானது, கேட்டுப் பெற்ற பொருளை உடைமையாக்கிக்கொள்வது.

அதிலும், யானை, ஆலயம், அரசன்—பெரிய விஷயம் அல்லவா? உரிய முறையோடு அதைச் செய்யவேண்டாமா? வேதம் உணர்ந்த வேதியர்கள், அவர்களுக்குத் துணையாக வேறு இரண்டு ஆட்கள்—இவர்களைத் தக்க கையுறைக ளுடன் அனுப்பி வைக்கவேண்டும். சாமானியர்களை அனுப்பி, அவர்கள் ராஜ சமுகத்தில் ஏறத்தாழ நடந்து கொண்டால், மகாராஜா அந்த மனிதர்களைப் பற்றிச் சற்றுக் குறைவாக மதித்துவிட்டால், 'இப்படிப்பட்ட மனிதர்களின் தொடர்புடைய மட்டமான கோயிலுக்கா நாம் யானையை அளித்தோம்?' என்று நினைக்க இடமாகும் அல்லவா? அதனால் மிகுந்த தகுதி உடைய மனிதர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்தேன். அவர்களும் அங்கே சென்று தக்கபடி நடந்துகொண்டார்கள். நல்ல நேரத் தில் அவர்களோடு லீலா அங்கிருந்து புறப்பட்டுவிட்டது. மகாராஜாவின் கட்டளைப்படி அங்கே லீலாவுடன் நெருங்கிப் பழகிய பாகர்கள் இருவரும் உடன் வந்தார்கள்.

" 'யானை திருவிதாங்கூரை விட்டுப் புறப்பட்டுவிட்டது; கும்பகோணத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறது' என்ற செய்தி எங்கும் பரவிவிட்டது. வழியில் உள்ள ஊர்களில் வாழும் அன்பர்கள் அந்த யானையைக் காணவும் அதற்கு மரியாதை செய்யவும் விரும்பினார்கள். சிலர் அதை ஒருநாள் தங்கள் கிராமத்தில் தங்க வைத்து உப சரித்து அனுப்பி வைக்கவும் ஆசைப்பட்டார்கள். இதன் விளைவாக ஒவ்வொரு நாளும் தபால் மூலம் எனக்குச் செய்தி வந்த வண்ணம் இருந்தது, 'தங்கள் லீலா எங்கள் கிராமத்தில் இன்று எங்கள் விருந்தாளியாகத் தங்கியிருக் கிறது. இங்கிருந்து நாளை புறப்பட்டுப் பயணத்தைத் தொடங்கும்' என்று.

"இப்படியாக லீலா ஒவ்வொரு கிராமமாக விருந் தோம்பிக்கொண்டே வந்து கும்பகோணத்தை அடைந்தது. ஜனங்கள் திரளாகச் சென்று அதைத் தரிசித்தார்கள்.

"ஆலயத்திற்குத் திருப்பணி செய்வதென்றாலும், அதிலும் பல சட்ட திட்டங்கள் உண்டு. நாம் ஒன்றை அர்ப்பணிக்கத் தயாராக இருக்கலாம்; அந்தப் பணி ஓர் அளவுக்கு மீறிய நிலை உடையதாக இருந்தால் தேவஸ் தானம் சட்டென்று அதை ஏற்றுக்கொண்டு விடுவதற் கில்லை. இந்த விஷயமும் அப்படித்தான். தேவஸ்தானத் துக்கு மேலிடத்து அங்கீகாரம், யானை இருக்கக் கொட் டகை, அதற்கு ஆகார வசதிகள்—இப்படிப் பல. இந்த ஏற்பாடுகளெல்லாம் நடைபெறச் சிறிது காலம் ஆயிற்று. அதுவரையில் யானையின் பராமரிப்புப் பூராவும் என்னுடைய தாயிற்று. அருகே ஒரு பெரிய நாணற்காடு, ஒரு தென்னந் தோப்பு. இவற்றை யானைக்காக ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கினேன். யானை பசியார உண்டு, களைப்பாற உலவிச் சுகமாக இருந்து வந்தது.

"நல்ல நாளில் ஆலயத்தாரின் அநுமதி பெற்றுக் கஜப் பிரதிஷ்டை செய்து கும்பேசுவரனுக்கும் மங்களாம்பிகைக் கும் விசேஷ அபிஷேக, அர்ச்சனை, ஆராதனைகள், நிகழ்த்தி யானையை ஆலயத்திற்கு அர்ப்பணிக்கும் பெரும்பேற்றைப் பெற்றேன். ஊரே திரண்டு வந்து ஆலயத்தில் கூடி இந்தப் பெரு விழாவில் பங்கு கொண்டது"—இவ்வாறு கூறி முடித்தார் ராஜமாணிக்கம் பிள்ளை.

'காசிக்குப் போனான், கங்கையைக் கொணர்ந்தான்' என்று இரண்டே வாக்கியங்களில் குறிப்பிடுவதுபோல 'ராஜமாணிக்கம் பிள்ளை திருவிதாங்கூர்ச் சம்ஸ்தானத்தி லிருந்து யானையைப் பரிசாகப் பெற்று வந்து கும்பேசுவர

சுவாமிக்குக் காணிக்கை ஆக்கினார்' என்று ஒரே வாக்கியத்தில் சொல்லி முடித்துவிடலாம். ஆனால் இந்தச் செலில் உள்ள இத்தனை செய்திகளும் உலகம் அறியத் தக்கன.

இந்த இடத்தில் நமக்குச் சங்ககாலத்து நிகழ்ச்சிகள் நினைவுக்கு வருகின்றன. அந்த நாளில் புலவர்களின் ஆற்றலை மெச்சி அரசர்கள் யானைப் பரிசு அளித்ததாகப் படிக்கிறோம். பரிசுகளில் சிறந்தது யானைப் பரிசு. அத் தகைய ஒன்றைத் தருவதோ, பெறுவதோ எளிதில் நிகழக் கூடியதன்று. என்றோ நடந்ததாக ஏட்டிலே படிப்பதை இன்று கண்ணெதிரே காணும் வாய்ப்பை நமக்கெல்லாம் அளித்தவர் ராஜமாணிக்கம். இந்த நிகழ்ச்சி அவருக்குத் தனிப் பெருமை அளிப்பது. கலை உலகத்தின் மதிப்பை மிகமிக உயர்த்துவது. கர்நாடக சங்கீத உலகின் இந்தத் தலைமுறையின் சரித்திரத்திலே பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கது. சிறந்த பரிசிலைப் பெறுவது பெரிது தான். தாம் பெற்ற பரிசிலை அப்படியே வழங்கிவிடுவது அதனினும் பெரிது. ராஜமாணிக்கத்தின் கலை ஆற்றலும் நற்பண்பும் இந்தப் பெருஞ் செயலால் ஒன்றை ஒன்று முந்த முயலுகின்றன.

## 30. கலையின் ஒளி

(1942)

கொச்சி சம்ஸ்தானத்தில் திருப்புணித் துறையில் சங்கீதக் கச்சேரி ஒன்று நிகழ்ந்தது. செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர் பாட்டு, ராஜமாணிக்கம் பிள்ளை வயலின், கோதண்டராமையர் மிருதங்கம்.

கச்சேரி சிறப்பாக நடைபெற்றது. கலைஞர்கள் சம்மானிக்கப் பெற்றனர். மகாராஜா செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயருக்கும், கும்பகோணம் ராஜமாணிக்கத்

தக்கும் விசேஷ வெகுமானங்களாக வீரச் சங்கிலியும் தோடாவும் அணிவித்துக் கௌரவித்தார். அப்போது ராஜமாணிக்கம் மகாராஜாவை வணங்க எழுந்தார். மகா ராஜா அதைத் தடுத்தார்.

"பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்கள் என்று வர்ணாசிரமங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் தலை யாயது பிராம்மண வர்ணம். பிராம்மணர்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள்; தெய்வத்தின் பிரதிநிதிகள்; தெய்வத் துக்குச் சமானமானவர்கள். அவர்களைத்தான் மற்றவர்கள் வணங்க வேண்டுமே தவிர, அவர்கள் மற்றவர்களை வணங்கக்கூடாது" என்றார்.

"நான் பிராம்மணன் அல்லவே?" என்றார் ராஜ மாணிக்கம்.

"அப்படியா? உங்கள் முகத்திலே தேஜஸ் ஜொலிக் கிறதே!"

ராஜமாணிக்கம் மென்முறுவல் பூத்தார்.

"மகாராஜா அவர்கள் பார்வையில் என்னிடம் ஏதா வது சிறிது சிறப்புத் தென்படுமானால் அது என் குருநாத ரின் அருளாசியால், அவர் அளித்த கலைப்பிச்சையால் ஏற்பட்டதாக இருக்கும். மகாராஜா அவர்கள் அதை மட்டும் கவனித்து என் பெயரின் பிற்பகுதியில் இணைந் திருக்கும் 'பிள்ளை' என்ற பதத்தைக் கவனிக்கவில்லை போல் இருக்கிறது" என்றார்.

"ஆம், ஆம்" என்று சிரக்கம்பம் செய்தார் மகாராஜா. பிறகு அந்நிகழ்ச்சியை நினைத்து மெல்லச் சிரித்தார். அவையிலுள்ள மற்றவர்களும் சிரித்தார்கள். 'தேஜஸ்' என்று வடமொழியிலும், 'தேசு,' 'ஒளி' என்று தமிழிலும்

குறிப்பிடப் பெறும் தோற்றத்திற்கும் கலையின் சக்திக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு பற்றி நீண்ட நேரம் பேசிக் கொண்டார்கள்.

## 31. எட்டையபுரம் சம்ஸ்தான வித்துவான்

(1942)

கவி ரத்தினம் பாரதி தோன்றிய எட்டையபுர சம்ஸ் தானம் கலையை நன்கு ஆதரித்துப் போஷிப்பதில் சிறப் புடையது. வாய்ப் பாட்டுத் துறையில் மிகத் தேர்ந்து 'பல்லவி வித்துவான்' என்ற தனிப் புகழுடன் வாழ்ந்து வந்த ராமசந்திர பாகவதருடைய பிறப்பிடம் அதுதான். அவர் அங்கே ஆஸ்தானத் தலைமை வித்துவானுகி இசைக் கலைக்குச் சிறந்த தொண்டு புரிந்தார். கலைஞர்களுக்கு ஆதரவு தந்தார். அவர் சரித்திரம் மிகப் பெரிது! மகான் சுப்பராம தீட்சிதர் அவர்கள் தோன்றியதும் இங்கேதான்.

இத்தகைய சம்ஸ்தானத்தில் 1942-இல் ராஜமாணிக்கம் சம்ஸ்தான வித்துவானுகப் பதவி ஏற்ருர். அவரோடு வாய்ப் பாட்டுவித்துவான் ஜி. என். பாலசுப்பிரமணியமும், மிருதங்க வித்துவான்களான பழனி சுப்பிரமணிய பிள்ளை யும், பாலக்காடு மணி ஐயரும் அங்கே ஆஸ்தான வித்து வான்களாக நியமனம் பெற்றவர்கள். இவர்களின் கூட்டுற வால் எட்டையபுரச் சம்ஸ்தானத்தில் இனிய கான மழை பொழியலாயிற்று.

## 32. 'கலாநிதி'

(1948)

சென்னை சங்கீத வித்துவத் சபையார் ஆண்டுதோறும் விமரிசையாக நடத்தி வரும் சங்கீத விழா மகாநாட்டுக்கு

ஆண்டிலும், புலமையிலும் முதிர்ந்த வித்துவான்களைத் தலைமை தாங்கச் செய்து அவர்களுக்குக் 'கலாநிதி' என்ற சிறந்த பட்டத்தை வழங்கி வருகிறார்கள். கர்நாடக சங்கீதக் கலைக்குச் சிறந்த தொண்டு.

1948-ஆம் ஆண்டு நடைபெற்ற சங்கீத மகாநாட்டுக்கு ராஜமாணிக்கம் தலைமை தாங்கினார். சென்னைக் கவர்னர் விழாவைத் துவக்கி வைத்தார். ராஜமாணிக்கம் விழா நாட்களில் நேரந் தவறாது அவைக்கு வந்து இருந்து அலுவல்களைக் குறைவறக் கவனித்தார். கலாநிதிப் பட்டத்தைத் தாங்கினார். தலைமைப் பேருரையில் சில அருமையான கருத்துக்களை வெளியிட்டார். அவை இளம் வித்துவான்களுக்கு அரிய உபதேசம்; ரசிகர்களுக்குச் சிறந்த பொக்கிஷம். அந்த உரை வருமாறு:—

கலாநிதி—தலைமை உரை:

**மா**ட்சிமை தங்கிய நமது சென்னைக் கவர்னர்த் தம்பதிகள் அவர்களுக்கும், சங்கீத வித்துவத் சபைத் தலைவருக்கும் அங்கத்தினர்களுக்கும் சங்கீத வித்துவான்களுக்கும் மற்றுமுள்ள சங்கீத ரசிகர்களுக்கும் பெரியவர்களுக்கும் நமஸ்காரம்.

சங்கீத வித்துவத் சபையின் இவ் வருஷ சங்கீத மகா நாட்டுக்கு என்னைத் தலைவராகத் தேர்ந்தெடுத்ததற்காக, வித்துவத் சபையாருக்கு முதலில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்குக் கிடைத்திருக்கும் இந்தக் கௌரவத்தை நான் எனது குருநாதரான பிடில் வித்துவான் திருக்கோடிகாவல் ஸ்ரீ ராமசுவாமி ஐயரவர்களின் திருவடிக் கமலங்களில் வணக்கத்துடன் சமர்ப்பிக்கின்றேன்.

சங்கீதத்திலும், சங்கீத சாஸ்திரத்திலும் வல்லவர்களான பிரமுகர்கள் எல்லோரும் சேர்ந்து நடத்தும் இந்த மகாநாட்டுக்குத் தலைமை வகிப்பது என்பது மிக்க பொறுப்பு வாய்ந்தது என்று கூறத் தேவையில்லை. வித்துவத் சபை நிர்வாகஸ்தர்களும், சங்கீத வித்துவான்களும் என்னுடன் ஒத்துழைப்பார்கள் என்ற தைரியத்தினால்தான் நான் இப்பதவியை ஏற்கத் துணிந்தேன். உண்மையில் அவர்களுடைய ஒத்துழைப்பையே நான் நம்பியும் இருக்கிறேன். ஆகவே அவர்கள் எனக்கு உதவியாக இருந்து, இவ்வருஷ மகாநாட்டை உபயோகமுள்ளதாகவும், வெற்றிகரமாகவும் நடத்தித் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக நம் எல்லோரையும் இங்கே ஒன்று சேர்த்திருக்கும் இந்த வித்துவத் சபையைப் பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்.

இந்தச் சபையானது நமது சங்கீத உலகத்தில் இன்று ஒரு பெரிய சக்தி வாய்ந்த ஸ்தாபனமாக விளங்கி வருவது யாவரும் அறிந்ததே. சென்ற இருபத்திரண்டு ஆண்டுகளாகக் கர்நாடக சங்கீதத்தின் பாதுகாப்புக்காகவும், வளர்ச்சிக்காகவும் இந்த வித்துவத் சபையார் அரிய பெரிய சேவைகளைச் செய்து வந்திருக்கிறார்கள்.

சங்கீத உலகின் பொக்கிஷங்கள் என்று மதிக்கக் கூடிய 'சதுர் தண்டிப் பிரகாசிகா,' 'சங்கீத சுதா,' 'சங்கீத சாராமிருதம்' ஆகிய பழைய கிரந்தங்களை ஏட்டுப் பிரதிகளிலிருந்து எடுத்து அச்சிட்டுப் பிரசுரித்திருப்பதை நாம் எவ்வளவு பாராட்டினாலும் போதாது.

இன்னும் சங்கீத சம்பந்தமான உண்மைகளைப் பிரசாரம் செய்வதற்காகவும், சிக்கலான சங்கீத விஷயங்

களைப் பற்றி அநுபவஸ்தர்களான சங்கீத வித்துவான்கள் கொண்டுள்ள அபிப்பிராயங்களை வெளியிடுவதற்காகவும் நமது வித்துவத் சபையார், உயர்தர சங்கீத சஞ்சிகை ஒன்றை நடத்தி வருவதும் போற்றத் தகுந்த காரியமாகும்.

சங்கீதம் மேலும் மேலும் செழிப்புடன் வளர்வதற்கு அவர்கள் செய்து வந்திருக்கும் ஒரு பெரிய உதவியையும் இங்கே குறிப்பிடவேண்டும். இதுவரையில் அநேக இளம் வித்துவான்களை முன்னுக்குக் கொண்டு வந்திருக்கும் பெருமை அவர்களைச் சாரும் என்று சொல்வது மிகையாகாது. இப்பொழுதும் அதே நோக்கத்துடன் அவர்கள் ஒவ்வொரு மாதமும் தங்கள் சபையின் ஆதரவில் புதிய இளம் வித்துவான்களின் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்து அவர்களில் யோக்கியதை மிகுந்தவர்களுக்கு, மகாநாட்டின்போது கச்சேரி செய்யச் சந்தர்ப்பம் அளித்து வருகிறார்கள். இவ்வாறு புதிய புதிய வித்துவான்களை உலகுக்கு அறிமுகப்படுத்தி, அவர்களைக் கைதூக்கி விடுவதில் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொள்ளும் இந்தச் சபையாருக்குச் சங்கீத வித்துவான்கள் மட்டுமன்றி, கலாரசிகர்களும் தங்கள் நன்றியைச் செலுத்தக் கடமைப்பட்டவர்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக, நமது சங்கீத வித்துவத் சபையார் ஒவ்வொரு வருஷமும் ஒரு சங்கீத மகாநாட்டைக் கூட்டி, அதில் அநேக சங்கீத வித்துவான்கள் பங்கெடுத்துக் கொள்ளச் செய்து வருகிறார்கள். சங்கீத வித்துவான்கள் ஒன்றுசேர்ந்து, ஒற்றுமையுடன் சங்கீதத்துக்கு உழைப்பதற்கு இது ஓர் அரிய சந்தர்ப்பம் என்பதை யாரும் மறுக்க முடியாது. மகாநாடுகளில் நடைபெறும் சங்கீத ஆராய்ச்சிகளும் சர்ச்சைகளும் அங்கே நிறைவேற்றப்படும் தீர்மானங்களும் கர்நாடக சங்கீதத்தின் வளர்ச்சிக்கு மிக

வும் உதவியாக இருக்கின்றன என்பதும் குறிப்பிடத் தகுந்த விஷயமாகும்.

சங்கீத வித்வத் சபையார் செய்துவரும் மற்ருெரு பெரிய காரியமும் பாராட்டத்தக்கது. சங்கீத மகாநாட்டை ஒட்டி வருஷா வருஷம் அவர்கள் சிறந்த வித்துவான்களின் கச்சேரிகளை ஏற்பாடு செய்கிருர்கள். அக்கச்சேரிகளைக் கேட்க இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான ரஸிகர்கள் வந்து கூடுகின்ருர்கள் என்பது ஒன்றே இச்சபையாரின் திறமைக்குப் போதிய அத்தாட்சி என்று சொல்லலாம். அகில இந்திய ரேடியோ நிர்வாகிகளுங்கூட அக்கச்சேரிகளைப் பதிவு செய்து ஒலிபரப்புகிருர்கள்.

மேற்கூறியபடி கர்நாடக சங்கீதக் கலையின் வளர்ச்சிக்காகப் பல துறைகளில் உழைத்து வந்திருக்கும் சங்கீத வித்துவத் சபையானது இன்று ஓர் உயர்ந்த அந்தஸ்தையும், சங்கீத உலகில் ஒரு முக்கியமான ஸ்தானத்தையும் வகித்து வருவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இதற்கெல்லாம், அதன் தலைவரான ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் ஒரு முக்கியப் பொறுப்பாளியாக இருந்து கொண்டு வருகிருர்கள். பல ராஜாக்களும், ஜமீன்தார்களும், செல்வந்தர்களும், இந்த வித்வத் சபைக்கு நன்கொடைகள் தந்து, தங்கள் ஆதரவை இன்றும் அளித்து வருவதெல்லாம், ஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயரவர்களும், அவருடன் ஒத்துழைத்து வரும் அகாடமியாரும் ஆற்றிவரும் தன்னலமற்ற உழைப்பினுலும், திறமை மிகுந்த நிர்வாகத்தினுலும்தான் என்பது பிரசித்தமாயிருக்கிறது. அவர்களுக்குச் சங்கீத உலகமே நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அரசாங்கத்தார் நிறுவப்போகும் புதிய சங்கீத கலா சாலையின் அமைப்பை நிர்ணயிப்பதற்காக, ஏற்படுத்தியிருக் கும் கமிட்டியில், நமது ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயரவர் களையும் சேர்த்திருப்பது நமக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருகின்றது. இதுவரையில், சங்கீத வித்துவான்களுடைய முன்னேற்றத்திற்காக அரிய சேவைகளைச் செய்து வந்தி ருக்கும் இவர், புதிய கலாசாலையின் அமைப்பு விஷயத்தி லும், சங்கீத வித்துவான்களின் நலனை மனத்திற்கொண்டு சேவை செய்வார் என்பதில் சந்தேகம் இல்லை.

மத்திய சர்க்கார் ஆரம்பிக்கப்போகும் இந்தச் சங்கீத கலாசாலை எவ்வாறு அமைக்கப்பட வேண்டுமென்றும் சுருங்கச் சொல்ல விரும்புகிறேன். இது பலத்த அஸ்தி வாரத்துடன் விசாலமான திட்டம் செய்துகொண்டு, பல பிரிவுகள் கொண்ட நம் கலையின் பண்டைக்காலந்தொட்டு வளர்ந்திருக்கும் எல்லாத்துறைகளையும் அணைத்துக் கொண்டு, தனிப்பட்டதோர் பெரும் சங்கீத சர்வகலாசாலை யாக அமைக்கப்பட வேண்டும். சதசுகளுக்கு வந்து பிர காசிக்கும்படியான பல வருஷங்கள் கொண்ட படிப்பிற்கும் உழைப்பிற்கும் ஏற்பாடு செய்யவேண்டும். இரண்டு மூன்று ஆண்டுகளில் சங்கீத நுனிப்புல் மேயும்படியான வகுப்புகளை மட்டும் இக்கலாசாலை ஏற்பாடு செய்யக்கூடாது. தாளம், வாத்தியங்கள், நூல் பதிப்பு, நாத சம்பந்தமான விஞ் ஞான ஆராய்ச்சிகள் எல்லாவற்றிற்கும் இந்தச் சங்கீத சர்வகலாசாலையில் இடம் இருக்கவேண்டும். இந்தச் சங்கீத ஸ்தாபனத்தின் தலைமைப் பொறுப்பையும் சங்கீத வித்து வான்களில் முக்கியமான ஒருவரே வகிக்க வேண்டும்.

இனி, சங்கீத வித்துவான்களுக்கும் ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். சங்கீதக் கலையானது முன் காலத்தில்

பல ராஜ சம்ஸ்தானங்களால் ஆதரிக்கப்பட்டு வந்தது. வித்துவான்களும் அவைகளையே நம்பி வாழ்நாள் முழுவதையும் சங்கீதக் கலைக்காகவே அர்ப்பணம் செய்து வந்தார்கள். ஆனால், இப்போதோ, நிலைமை மாறியிருக்கிறது. ஒரு சில சம்ஸ்தானங்கள்தான், சங்கீதக்கலை விஷயத்தில் சிரத்தை காண்பித்து வருகின்றன. அதற்கு நல்ல உதாரணங்களாக, திருவாங்கூர், மைசூர் சம்ஸ்தானங்களைச் சொல்லலாம். மாட்சிமை தங்கிய திருவாங்கூர் மகாராஜா அவர்களும், மாட்சிமை தங்கிய மகாராணி அவர்களும், சங்கீதக் கலையில் அளவற்ற அபிமானம் கொண்டவர்கள். அக்கலையைப் போஷிப்பதில் அவர்கள் மிகுந்த ஊக்கம் காட்டி வருகிறார்கள். முக்கியமாக அவர்களுடைய தாராளமான மனப்பான்மை விசேஷமாய்ப் போற்றத்தக்கது. அந்தச் சம்ஸ்தானத்தில், ஸ்ரீ சுவாதித் திருநாள் மகாராஜா அவர்கள் பெயரால் ஒரு சங்கீத ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டு, பிராசீன முறைகளைக் காப்பாற்றி, அது சிறப்பாக நடந்துவரும் விஷயம் யாவருக்கும் தெரியும். யோக்கியதையுள்ள வித்துவான்கள் அந்தச் சம்ஸ்தானத்தில் கௌரவிக்கப்பட்டு வருவதும் அநேகருக்குத் தெரிந்திருக்கலாம்.

அதைப்போன்ற ராஜ சம்ஸ்தானங்கள் சென்னை மாகாணத்தில் இப்போது வேறிடங்களில் இல்லாத குறையை ஓரளவு நீக்க வந்திருக்கிறது நமது சங்கீத வித்துவத் சபை. சங்கீத வித்துவான்களின் நலனுக்காகவும் சங்கீதக் கலையின் வளர்ச்சிக்காகவுமே இது நிறுவப்பட்டிருக்கிறது. எனவே, சங்கீத வித்துவான்கள் எல்லாரும் இந்தச் சபையோடு ஒத்துழைப்பது மிகவும் அவசியம். இதைத் தங்கள் சொந்த ஸ்தாபனமாகவே கருதி, தங்கள் முழு ஆதரவையும் அளித்து வரவேண்டும்.

இனி, சங்கீத சம்பந்தமாக என் அபிப்பிராயங்கள் சிலவற்றைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கடந்த வருஷங்களில் இந்தச் சங்கீத வித்துவத் சபையின் மகாநாடுகளுக்குத் தலைமைவகித்த வித்துவான்கள், சங்கீதத்தின் மேன்மையைப்பற்றிச் சாங்கோபாங்கமாக எடுத்துரைத்திருக்கிறார்கள். அதோடு சங்கீதத்தினால் ஏற்படும் உணர்ச்சியின் மூலம் நமக்கு உண்டாகும் ஆனந்தம் எத்தகையது என்பது இக்காலத்தில் எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்த விஷயமாகும். ஆகவே, அதே விஷயத்தைப் பற்றி நான் மீண்டும் விவரிப்பது அநாவசியமாகும்.

கர்நாடக சங்கீதத்தை நாம் அதன் தூய்மை கெடாது பாதுகாக்க வேண்டுமானால், நமது பெரியோர்கள் செய்துள்ள 'உருப்படி'களை அலட்சியம் செய்யாமல், அவைகளை நமது சங்கீதத்துக்கு முக்கிய ஆதாரங்களாகக் கொள்ள வேண்டும். அதாவது, பிராசீனமாயுள்ள கிருதிகள், வர்ணங்கள் முதலியவற்றிலுள்ள பிடிகளையும், சஞ்சாரங்களையும், சங்கதிகளையும் நன்றாகக் கவனித்து, ராக ஆலாபனையிலும், நிரவல், ஸ்வரம் முதலியவற்றிலும், அவற்றை அநுசரிக்க வேண்டும். கர்நாடக சங்கீதத்தைப் பாதுகாப்பதற்கு இந்த முறை மிகவும் அவசியமென்பது என் அபிப்பிராயம்.

சிறந்த உருப்படிகள், பழைய நல்ல வழிகள் இவைகளைக் கையாளும் வித்துவான்கள், விதூஷிகள் இருக்கும் போதே சங்கீதத்தின் வருங்காலப் பாதுகாப்பிற்காக, 'கிராமபோன் ரிகார்ட்' செய்துகொள்ளப்பட வேண்டும். இதைப் பற்றிப் பலதடவை பேசியும் ஒன்றும் செய்யாமல் நாம் பல பொக்கிஷங்களை இழந்துவிட்டோம் என்பது வருத்தத்துடன் நாம் ஒப்புக்கொள்ளவேண்டிய உண்மையான குற்றம். இத்துறையில் சில கம்பெனிகளும் முக்கிய

மாய் அகாடமியும் சமீபத்தில் ஊக்கம் காட்டி, இந்த நல்ல காரியத்தைத் துவக்கி இருப்பது மிகவும் போற்றத்தக்கது. இதைத் தொடர்ந்து நாம் கவனித்து முடிந்தவரையில், போய்க்கொண்டிருக்கும் வெள்ளத்தில் அணையைக் கட்டிக் காப்பாற்றிக் கொள்வோமாக.

இந்தச் சமயத்தில் க்ஷேத்திரக்ஞர், கவிகுஞ்சர பாரதி முதலியோருடைய பதங்கள் ஜாவளிகள் நினைவுக்கு வருகின்றன. முன்பெல்லாம் கச்சேரி முடிவில் திருப்புகழ்களையும், பதங்களையும், ஜாவளிகளையும் பாடி வந்தார்கள். பதங்களிலும், ஜாவளிகளிலும் ராக பாவம் பொதிந்து கிடப்பது எல்லாருக்கும் தெரிந்திருக்கும். அவற்றைக் கச்சேரிகளில் பாடி, அந்த உருப்படிகளின் மேன்மையை ரசிகர்களுக்கு எடுத்துக் காண்பிப்பது வித்துவான்களின் கடமையாகும்.

தற்பொழுது, சுருதி விஷயத்தில் சில வித்துவான்கள் அநுஷ்டித்து வரும் முறையைப் பற்றிக் கூறுவது அவசியமென்று நினைக்கிறேன். உயர்ந்த சுருதியில் தெம்புடன் நன்றாகப் பாடக்கூடிய சாரீரம் வாய்த்திருந்தும், சில வித்துவான்கள் சுருதியைக் குறைத்து வைத்துக்கொண்டே பாடி வருகிறார்கள். தாரஸ்தாயியில் அதிகமாகச் சஞ்சரிக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே அவர்கள் அவ்வாறு செய்து வருகிறார்கள். மத்திய, மந்திரஸ்தாயியில் சஞ்சாரமுள்ள உருப்படிகளை அவர்கள் பாடும்போது, பொது ஜனங்கள் அவைகளைச் சரிவரக் கேட்டு ஆனந்திக்க முடியாமல் இருக்கிறது. முன்பு பிரபலமாயிருந்த பிரம்ம ஸ்ரீ கோனேரி ராஜபுரம் வைத்தியநாதையரவர்கள், பிரம்ம ஸ்ரீ பூச்சி ஸ்ரீநிவாசையங்கார் அவர்கள் முதலிய வித்துவான்கள் நாளிலிருந்து நான் கேட்டு வந்த அநுபவங்களில் தாரஸ்தாயி

பஞ்சமமே பிடிக்கப் பிரியப்பட மாட்டார்கள். எப்போதாவது பிடித்தால் அது அபூர்வமாகவும், ஆச்சரியமாகவுந் தான் இருக்கும். ஆனால் இக்காலத்திலோ மேல் ஸ்தாயி பஞ்சமத்தை எட்டிப் பிடிப்பதிலேயே சில வித்துவான்கள் சிரத்தை எடுத்துக்கொள்கிறார்கள். மந்திர சஞ்சாரமும் இப்போது விட்டுப் போய்விட்டது. பாடகர்கள் மேல் ஸ்தாயியில் அதிகமாகச் சஞ்சரிக்க எண்ணி, குறைவான சுருதியை வைத்துக்கொள்வதால், பிடில் வாசிப்பவர்கள் வழக்கத்திற்கு மாறாக, மத்திம சுருதி செய்துகொண்டு பிடில் வாசிக்க நேரிடுகிறது. அபூர்வமாக வித்துவான்கள் மந்திர ஸ்தாயியிலும் சஞ்சரிக்கும்போது, மத்திம சுருதி வைத்துக்கொள்ளும் பிடில் வித்துவான்கள், பாட்டுடன் மந்திர ஸ்தாயியில் வாசிக்க இயலாமற் போய்விடுகிறது. ஆகையினால், பாட்டு வித்துவான்கள் கூடியவரையில் சுருதியை உயர்த்தி வைத்துக்கொண்டு பாடுவதுதான் பக்க வாத்திய வித்துவான்கள் வாசிப்பதற்கும், பொது ஜனங்கள் தெளிவாகக் கேட்டுச் சந்தோஷப் படுவதற்கும் சௌகரியமாக இருக்கும். பாட்டு வித்துவான்களைப் போலவே, சுருதியைக் குறைத்து வைத்துக்கொள்ளும் நாதஸ்வர வித்துவான்களும், அதிகச் சுருதி வைத்துக் கொண்டு வாசித்தால்தான் அதிகமான ஜனங்களைத் திருப்தி செய்ய முடியும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

மந்திரஸ்தாயி சஞ்சாரம் செய்யவேண்டுமென்று அகாடமி வித்துவான்களுக்கு அவ்வப்போது வேண்டுகோள் அனுப்பிக் கொண்டிருப்பதை நான் நினைவு மூட்ட விரும்புகிறேன். அதிலும் ஒலி பரப்பியின் உதவி இருக்கும் இந்த நாளில் மந்திர சஞ்சாரத்தை வித்துவான்கள் கையாள வசதியிருக்கிறதால், அதை வித்துவான்கள் அவசியம் கையாள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

லய சம்பந்தமான விஷயத்தில், இக்காலத்தில் சில வித்துவான்கள் தங்கள் கச்சேரிகளில் தாள சம்பந்தமான வேலைப்பாடுகளைக் கையாளுவதில் சிரத்தைக் குறைவாக இருந்து வருவது வருந்தத் தக்கதாகும். ராக சம்பந்தமாக உழைக்கவேண்டியது சங்கீதத்திற்கு எவ்வளவு அவசியமோ அதே போல், லய சம்பந்தமாக உழைக்க வேண்டியதும் மிகவும் அவசியமாகும். வித்துவான்கள் பொதுஜனங்களுக்கு அவற்றில் ஒரு ருசியை ஏற்படுத்தவேண்டும். இவ்விதம் செய்தால்தான், லய சம்பந்தமான நுணுக்கங்களை நிரந்தரமாகக் காப்பாற்ற முடியும். லயம் என்பது இசையின் முக்கியமான அம்சமே. ஸ்வரத்தைப்போல் அதுவும் உயிர் போன்றதாயிருந்தும் அதைப் பலர் மேலாகக் கருதாமலிருப்பது தவறே. அதுவும் வித்துவத் நிரம்பிய அகாடமி போன்ற ஸ்தாபனங்களில் லய வேலைப்பாடுகளின் நுணுக்கங்களிலும் அழகுகளிலும் ருசி இல்லையென்றால், வேறெங்கே அவை சோபிக்கப் போகின்றன? முற்காலத்தில் கச்சேரி முடிவில், தாள வேலைப்பாடுகள் நிறைந்த திருப்புகழையும் தில்லானாவையும் பாடுவது வழக்கமாக இருந்தது. மற்றும் அநேக தாளப் பிரபந்தங்களும் இதற்காகவே செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் அப்பழக்கம் இப்போது அநேகமாக மறைந்துவிட்டதென்றே சொல்லலாம்; வித்துவான்கள் திருப்புகழ்களைத் தங்கள் கச்சேரிகளில் பாடி, அந்த அரிய உருப்படிகள் மறைந்துவிடாதபடி பாதுகாக்க வேண்டியது அவசியமாகும்.

இன்னுமொரு முக்கிய விஷயத்தையும் குறிப்பிட வேண்டும். ஒரு பிரபல வித்துவான் தம்முடைய சொந்த வர்ண மெட்டில் ஒரு பிரபல சாகித்தியத்தை அமைத்துப் பாடி, அதற்குப் பொது ஜனங்களிடையே ஒரு பிராபல்

யத்தையும் உண்டாக்கிய பிறகு, மற்ெருரு பிரபல வித்து வான் அதே சாகித்தியத்தை வேறு ஒரு வர்ண மெட்டில் அமைத்துப் பாடி வருவதை நாம் காண்கிறோம். இதனுல் வித்தியார்த்திகளுக்கு எதைப் பாடம் பண்ணுவது என்பதி லும் பொது ஜனங்களுக்கு எதைக் கேட்பது என்பதிலும் ஒரு குழப்பம் ஏற்பட ஹேதுவாகிறது. அத்துடன் வித்துவான்களுக்குள்ளும் ஒற்றுமைக் குறைவு ஏற்படு கிறது. ஸ்ரீ தியாக பிரம்மம் போன்ற மகான்கள் அமைத்த வர்ண மெட்டுக்களையே மாற்றிப் பாடுவதென்பதும் தப் பான காரியமாகும். அதேபோல் ஓர் உருப்படியானது ஒரு தாளத்தில் அமைக்கப்பட்டிருக்கும்போது, அதையே வேறு ஒரு தாளத்தில் அமைத்துத் தம் இஷ்டப்படி பாடு வதும் விரும்பத் தக்கதல்ல.

சங்கீதக் கலையானது குருகுல வாசத்தின் மூலம் அப்பியசிக்கப்பட்டு வந்த கலை. அது இக்காலத்தில் பல சங்கீத ஸ்தாபனங்கள் மூலமாகவும் குறுகிய காலத்திற் குள்ளும் போதிக்கப்பட வேண்டியிருக்கிறது. இந்த ஸ்தாபனங்களில் சாதக முறைகள் விரிவுபட வேண்டும். நாளுக்கு நாள் கலை குறுகிக்கொண்டே போகக்கூடாது. குரு, தமது சிஷ்யனுக்குப் போதிக்கக்கூடிய சாதக முறை களையெல்லாம் இந்த ஸ்தாபனங்களும் சரிவரக் கற்றுக் கொடுத்தால்தான், வித்தியார்த்திகளுக்கு நல்ல அஸ்தி வாரம் ஏற்பட்டு அக்கலையில் முன்னேற முடியும். ஆகவே, வித்தியார்த்திகள் சாதக முறைகள் விஷயமாக அதிகக் கவ னம் செலுத்தவேண்டும் என்று வற்புறுத்துகிறேன். மேலும் குருகுல வாச முறையில் பரிச்சிரமப்பட்டுத் தயா ரான வித்துவான்களில் ஒருவரை வித்தியார்த்திகள் குரு வாக அடைந்தால், தங்கள் அடிப்படை ஞானத்திலும் சாதக முறைகளிலும் விசேஷமான அநுபவங்களை

அடைந்து, எதிர்காலத்தில் மிகுந்த யோக்கியதை உள்ளவர்களாவார்கள் என்பது நிச்சயம். நமது புது ஸ்தாபனத்திலும் எவ்வளவுக்கெவ்வளவு இந்தக் குருகுல முறையின் வழி சேர்த்துக்கொள்ளப்படுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு சங்கீதப் படிப்பில் சிறப்பும், நிறைவும் ஏற்படும் என்பது திண்ணம்.

வாத்திய சங்கீதத்திற்குச் சங்கீத சபைகளும், பொது மக்களும் இன்னும் அதிக ஆதரவு அளிக்க வேண்டியது அவசியமாகும். வீணை, புல்லாங்குழல், பிடில், கோட்டு வாத்தியம், நாகஸ்வரம் முதலிய தனி வாத்தியங்களின் கச்சேரிகள் நிறைய நடைபெற்றால்தான், சங்கீதத்தின் நுட்பங்கள் குறையாமல் சங்கீதம் நன்றாக அபிவிருத்தி அடையக்கூடும்.

இனி, முன்னணிக்கு வந்துகொண்டிருக்கும் பிடில் வித்துவான்களுக்கு என் அநுபவத்திலிருந்து சில யோசனைகளைக் கூற விரும்புகிறேன்.

1. வாய்ப்பாட்டு வித்துவான்கள் வீணை, பிடில், முதலிய வாத்தியங்களைச் சாதகம் செய்துகொள்ள வேண்டியது அவசியம் என்பது போல், பிடில் வித்துவான்களும், வாய்ப்பாட்டை நன்றாகச் சாதகம் செய்து பாட்டினுடைய போக்குகளையும், நுட்பங்களையும் அறிந்துகொள்வது மிக்க அவசியம். அப்போதுதான் எந்தக் கச்சேரியிலும் திறமையோடும், தைரியத்தோடும் பிடில் வாசிக்க முடியும்.

2. பக்க வாத்தியம் வாசிக்கும்போது, வித்துவான்களின் பாட்டை அநுசரித்தே பிடில் வாசிக்க வேண்டும். அதாவது, தங்கள் திறமையைக் காண்பிக்க வேண்டிய தனி ஆவர்த்தனம் போன்ற ஒரு சில சந்தர்ப்பங்களைத் தவிர, மற்றச் சந்தர்ப்பங்களில், வாய்ப்பாட்டுக்கு அநுசரணை

யாகவே வாசித்து வரவேண்டும். பாட்டுகளின் இடை யிடையே வித்துவான்கள் பாடி முடிக்கும் கடைசிச் சங்கதி களைப் பிடிலில் வாசிப்பது உசிதமாக இருக்கும். அதோடு வித்துவான்கள் பாட்டின் நடுவில் நிறுத்தி, சங்கதிகளை வாசிக்க எதிர்பார்க்கும்போதும் அவற்றைப் பிடிலில் வாசிக்க வேண்டும். இடைவிடாமல் மத்தியம காலத்தில் வித்துவான்கள் பாடிக்கொண்டிருக்கும்போது, பொருத்த மில்லாமல் கூடவே வாசித்துக் குழப்பாமல் அவர்கள் நிற்கப் போகும் ஸ்வரத்தை முன்னதாகவே ஊகித்து, அந்த ஸ்வரத்தை வாசிப்பது, பாட்டு வித்துவான்களுக்கு மிக்க உபயோகமாக இருக்கும் என்பதைக் கவனிக்க வேண்டும். சுருங்கக் கூறின், வித்துவான்களுடைய பாட்டைத் தங்களுடைய உதவியினால் எவ்வளவு அதிக மாகச் சிறப்பிக்க முடியுமோ அவ்வளவு சிறப்பிக்க முயற்சி எடுத்துக்கொண்டு வாசிக்க வேண்டும்.

இது போலவே, இளம் லய வித்துவான்களுக்கும் ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். சில சந்தர்ப்பங்களைத் தவிர மற்றச் சமயங்களில் பாட்டைப்போல் தாள வாத்தியங் களில் வாசிப்பது கச்சேரியின் உயர்தரத்தைப் பாதிக்கிறது. பாடுகிற சமயத்தில் வாசிக்கும்போதும் பாட்டுக்குப் பொருத்தமான மேற்காலச் சொல்லுகளால் போஷித்து வாசிப்பது மிகவும் சோபிதமாக இருக்கும்.

சங்கீத வித்துவத் சபை மகாநாட்டில் நடைபெற்று வரும் சங்கீத சர்ச்சைகளைப் பற்றியும் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ராக லட்சணங்களைப்பற்றி எவ்விதம் விஸ்தாரமாகச் சர்ச்சைகள் நடைபெறுகின்றனவோ, அவ் விதமே தாள சம்பந்தமான விஷயங்களைப் பற்றியும் சர்ச்சைகள் செய்ய வேண்டியது அவசியமாகும். லய

சம்பந்தமான வித்துவான்களை அழைத்து அவர்களைக் கொண்டு லய சம்பந்தமான சர்ச்சைகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று வித்துவத் சபையாரை நான் கேட்டுக் கொள்கிறேன்.

அகாடமியார் பரத நாட்டிய சம்பந்தமான தத்துவங்களையும் ஆராய்ச்சி செய்வதற்கு அவற்றில் தேர்ந்த வித்துவான்களை வரவழைத்து, அவைகளைச் சர்ச்சை செய்ய ஆதரவளித்து, அக்கலையின் நிலையை உயர்த்தவும் வேண்டுகிறேன்.

மகா நாடுகளில் நடைபெறும் சர்ச்சைகளிலும், நிறைவேற்றப்படும் தீர்மானங்களிலும், மேடைகளில் பிரபலமாகக் கச்சேரிகள் செய்து வரும் வித்துவான்கள் கலந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம் என்று கூறுவேன். மகாநாடுகளில் நிறைவேற்றப்படும் தீர்மானங்களை அவர்கள் தான் முதலில் அநுஷ்டானத்திற்குக் கொண்டுவர வேண்டும். அவர்கள் மூலமாகத்தான் அத்தீர்மானங்கள் சங்கீத உலகத்தில் நன்கு பிரசாரமாக முடியும்.

சங்கீத வித்துவத் சபையாரும் அந்தத் தீர்மானங்களைப் பற்றி எல்லா வித்துவான்களுக்கும், சங்கீத ஸ்தாபனங்களுக்கும் நன்கு தெரியப்படுத்தி, 'இப்போதிருக்கும் விளம்பரம் போதாது' என்ற குறையைப் போக்க முயல வேண்டும்.

அகில இந்திய ரேடியோவில் தற்போது கேட்கப்பட்டு வரும் பாட்டுகள் சம்பந்தமாய் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். மாதம் ஒரு முறையோ, இரு முறையோ ஒவ்வொரு ரேடியோ நிலயத்திற்கும் அருகே உள்ள வித்துவான்களில் சிலரை நியமித்து, அவர்களால் பரீட்சிக்கப்

பட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்ட இளைஞர்களையே பாட விட வேண்டும் என்று நான் அபிப்பிராயப்படுகிறேன்.

கடைசியாகப் பொது மக்களுக்கு ஒரு விஞ்ஞாபனம்:-

புதிதாகக் கச்சேரி மேடைக்கு வரும் இளம் வித்துவான்களை ஆதரிக்க வேண்டியது பொது மக்களுடைய கடமையாகும். பெரிய வித்துவான்களுடைய கச்சேரிகளைக் கேட்கும்போது எவ்வித ஆர்வத்துடன் செல்கிறார்களோ அதே ஆர்வத்துடன் புதிய வித்துவான்களுடைய கச்சேரிக்கும் சென்று அவர்களை உற்சாகப்படுத்த வேண்டும். அப்போதுதான் அந்த வித்துவான்கள் தங்கள் முழுத் திறமையையும் காண்பித்துச் சங்கீதத் துறையில் நல்ல பெயர் எடுக்க முடியும். ஆகவே பொது மக்கள் ஒரு கச்சேரியைக் கேட்கும்போது, தங்களுக்கு அபிமானமுள்ள மற்றொரு வித்துவானை மனத்தில் எண்ணிக்கொண்டு கேட்காமல், அந்த அந்த வித்துவான்களின் பரிச்சிரமத்தை உணர்ந்து பாட்டை ரசித்து, அவர்களைப் பாராட்ட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்னும் ஒரே விஷயத்தைப் பற்றி மட்டும் சொல்லி விட்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

இன்று நமது தேசம் ஒரு சுதந்திர நாடாகத் திகழ்வதற்கு நம் தேச மக்களின் ஒற்றுமையான உழைப்பே முக்கிய காரணமாகும். எனவே ஒற்றுமையின் முக்கியத்துவத்தைப் பற்றி நான் அதிகமாக ஒன்றும் கூறத் தேவை இல்லை. தேச முன்னேற்றத்திற்கு மக்களின் ஒற்றுமை எவ்வளவு அத்தியாவசியமானதோ, அதே போல் கர்நாடக சங்கீதத்தின் வளர்ச்சிக்கும் சங்கீத வித்துவான்களின் ஒற்றுமையும், ஒத்துழைப்பும் மிக அவசியமாகும். இந்திய சர்க்கார் சுதந்தர இந்தியாவில் கலைகளுக்கு உதவி செய்ய

முன் வந்திருப்பதை நாம் போற்றுகிறோம். அவர்கள் சென்னையில் ஆரம்பிக்கப் போகும் கல்லூரியை நிரந்தரமாய் உதவி செய்து மேலும் வளர்த்துக் கர்நாடக சங்கீதக் கலைக்கே முக்கிய ஸ்தாபனமாய் அதைச் செய்ய வேண்டு மென வேண்டிக் கொள்கிறேன். இந்த விஷயத்தில் வித்து வான்களும் தங்கள் ஒத்துழைப்பைப் பூராவாக அளிக்க வேண்டும். இந்துஸ்தானி வித்துவான்கள் இவ்வருஷத்திய நம் மகாநாட்டில் கலந்துகொண்டு நம்முடன் ஒத்துழைப் பதும் நம் நாட்டுக் கலையின் வருங்கால வளர்ச்சிக்கும் பெருமைக்கும் நல்ல அறிகுறி என்று எண்ணுகிறேன்.

இவ்வளவு காலமாகச் சங்கீத வித்துவான்கள் எவ்வித வித்தியாசமுமின்றி வாழ்ந்து வந்தது போல், இனி மேலும் எவ்வித வேற்றுமையும் இல்லாமல் சங்கீதத்தின் நலனுக் காகவும், சங்கீத வித்துவான்களின் க்ஷேமத்துக்காகவும் பாடு பட்டால்தான் சங்கீதக் கலை மேன்மையுடன் பிரகா சிக்கும்.

## 33. பாராட்டு

*(1948)*

**1948**-ஆம் ஆண்டில் ராஜமாணிக்கம் பிள்ளைக்குச் சென்னை சங்கீத வித்துவச் சபையார் 'சங்கீத கலாநிதி' என்ற சிறப்புப் பட்டம் அளித்ததை ஒட்டி நாடெங்கும் பரந்து வாழும் அவருடைய நண்பர்கள் அங்கங்கே அவரவர் தகுதிக்கு ஏற்பப் பாராட்டு விழா நடத்தினார்கள். சுமார் மூன்று மாத காலத்திற்கு அதிகமாக எங்கே பார்த்தாலும் விழாமயம்!

கும்பகோணத்தில் பிறந்து வளர்ந்து கலை பயின்று செயல் புரிந்து அங்கேயே வாழ்ந்து வருபவர் ராஜமாணிக் கம் பிள்ளை. மற்ற ஊர்களில் எல்லாம் விழா அமளிப்படு

கிறபோது கும்பகோணத்தின் பங்கு குறைந்துவிடுமா? அங்கே உள்ள அன்பர்கள் கூடி ராஜமாணிக்கம் பிள்ளையைப் பாராட்ட ஒரு பெரிய விழாவை நடத்தத் திட்டமிட்டார்கள். பிரமுகர் எஸ். ஏ. வேங்கடராமன் இல்லத்திலேதான் விழா நடைபெற்றது. உள்ளூர்ப் பிரமுகர்களும் அழைப்பின்பேரில் வெளியூர்களிலிருந்து வந்திருந்த பிரமுகர்களும் சங்கீத வித்துவான்களும், ரசிகமேதைகளும் மற்றும் பொதுமக்கள் பலரும் அவையில் வந்து கூடியிருந்தார்கள். கானகலாதர மதுரை மணி ஐயரின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. வேணுகான மேதை நாகராஜராவ் முதலிய இசை அறிஞர்கள் பலர் முன்னணியில் அமர்ந்து இசையை ரசித்தார்கள்.

கச்சேரிக்கு முன்பு சிலர் பேசினார்கள். மணிஐயரையும் பேசும்படி கேட்டுக் கொண்டார்கள். அவர் அடக்கமாகச் சில வார்த்தைகள் சொன்னார்.

"பேசி எனக்குப் பழக்கம் இல்லை. பேசும்படி பெரியவர்கள் பணிக்கிறார்கள். அதைத் தட்டுவது முறை அல்ல. தவிர, ராஜமாணிக்கம் பிள்ளை அவர்களைப் பாராட்டி இரண்டு வார்த்தைகளாவது பேசவேண்டும் என்று ஆசையாகவும் இருக்கிறது. ஆனால் அவரைப்பற்றிப் பேசும் தகுதி எனக்குச் சிறிதும் இல்லை. நான் மிகச் சின்னப் பிராயத்தினனாக இருக்கிறபோதே பிள்ளை அவர்கள் பிரமாதமாகக் கச்சேரிகளில் வாசித்து வந்தார். எனக்கு அப்போதெல்லாம் இசையைப் பற்றி எதுவுமே தெரியாது. ஆயினும் அவர் வாசிப்பைக் கேட்கக் கேட்க என் உள்ளம் பூரித்துப் பொங்குவதை நான் உணர்வேன். அதிலும் முக்கியமாக ஸ்ரீமான் சஞ்சீவிராயர் அவர்கள் அருமையாகப் புல்லாங்குழல் வாசிக்க, அதற்கு மிக அநுசரணையாக

ஸ்ரீ பிள்ளை அவர்கள் வயலின் இசைக்க, அதைக் கேட்கும் வாய்ப்பைப் பெற்ற எத்தகைய பாமர உள்ளமும் பரவச முறும். ராயர் அவர்கள் மத்திய ஸ்தாயியில் வாசிக்கிற போது பிள்ளை அவர்கள் தாரஸ்தாயியில் சஞ் சாரம் செய்வார்; அவர் தாரஸ்தாயிக்கு வந்து மிக அழ காக வாசிக்கத் தொடங்கினதும் இவர் மத்திய ஸ்தாயிக்கு மாறி இழையோட்டங் கொடுப்பார். அப்போது கேட் பதற்கு எப்படி இருக்கும் என்பதைச் சொல்லில் வருணிக்க முடியாது. கேட்டுத்தான் அநுபவிக்க வேண்டும். நான் அப்படி நிரம்பக்கேட்டு அநுபவித்தவன். அப்போதெல் லாம் என் உள்ளத்தில் ஓர் ஆசை எழுவது உண்டு. நாம் இசைபயின்று, மளமளவென்று முன்னேறி, கச்சேரி செய்ய ஆரம்பித்து, நமக்கு இத்தகைய சிறந்த வித்துவா ணின் வயலின் பக்கவாத்தியமாக அமையும் வாய்ப்பும் கிட்டுமா என்பதுதான் அந்த ஆசை. அது வீண் போக வில்லை. பிள்ளை அவர்கள் என் வேண்டுகோளுக்கு இணங்கி என் கச்சேரிகள் பலவற்றிற்குப் பக்கவாத்தியம் வாசித்துச் சிறப்பித்திருக்கிறார். அவருடைய கலைத் திறனும் நற்பண்புகளும் நாளெல்லாம் புகழத்தக்கன. இப்படி ஞானம் ததும்பச் செயலாற்றிக் கேட்பவர்களை மெய்ம்மறக்கச் செய்து பல காலமாகக் கர்நாடக சங்கீதக் கலைக்கு ஸ்ரீமான் ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் ஆற்றி இருக்கும் தொண்டு மகத்தானது. சங்கீதகலாநிதி என்ற பட்டம் அவருக்கு மிகவும் பொருத்தமானது. அவரைப் பாராட்ட இதுபோன்ற எத்தனை விழாக்கள் நடந்தாலும் தகும்.”—இவ்வாறு பேசி முடித்தார் மணி ஐயர்.

பிறகு நாகராஜராவ் பேசியபோது குறிப்பிட்டார்: “மணிக்குப் பேசத் தெரியாதாம்! எந்நேரமும் பாட்டி

லேயே கவனத்தைச் செலுத்தி இருப்பவர்களுக்குப் பேச்சைப்பற்றியும் மற்றவற்றைப்பற்றியும் நினைக்க நேரம் ஏது? ஆனால் பேசத் தெரியாது என்று மணி சொன்னதைத் தான் நாம் கேட்டோமே தவிர, பேச்சு என்னவோ தெரியாத பேச்சாக இல்லை. பதினைந்து நிமிஷம் எல்லாரும் அதை மெய்ம்மறந்துதான் கேட்டுக்கொண்டிருந்தோம். மதுரை மணியின் சங்கீதந்தான் மதுரம் என்றால் பேச்சும் மதுரமாக இருக்கிறது'' என்றார்.

ராஜமாணிக்கம் பிள்ளை நன்றியுரை கூறியபோது சொன்னார்:— "மூர்த்தி சிறிது கீர்த்தி பெரிது என்ற வாக்கியத்தை அடிக்கடி கேட்கிறோம், சொல்கிறோம். அது மதுரை ஸ்ரீ மணிஐயர் அவர்கள் விஷயத்தில் நூற்றுக்கு நூறு பொருத்தம். இசை வேறு, சுருதிவேறு என்பதை அவரிடம் காண முடியாது. கண்குத்திப் பாம்பு போல் ஸ்வரங்களைப் பொறுக்கி எடுத்து, மணிமணியாக உச்சரித்து, மணமிகுந்த மாலையாகத் தொடுத்துக் கலாதேவிக்கு அர்ப்பணம் செய்யும் சிறந்த பணியில் ஈடுபாடு கொண்டு வெற்றி காண்பதில் அவருக்கு இணை அவரே தாம்! தம்முடைய சிறுபிராயத்தில் தம்மிலும் பெரியவர்கள் செய்யும் காரியத்தை, அதில் உள்ள சிறப்பை நன்கு புரிந்துகொள்வதற்கு எத்தனை திறமைவேண்டும்? 'எனக்கு அப்போது ஒன்றுமே தெரியாது' என்கிறார் அவர். நம்பக்கூடிய விஷயமா? பெரிய வித்துவான்களின் செயல்களைப் பற்றிச் சிறிய வயதிலேயே எடைபோட்ட இவருடைய ஞானம் எத்தகையது என்பதை நீங்களே சொல்லுங்கள்!''—என்று அவர் சபையோரை நோக்கிக் கூறினதும் அங்கே எழுந்த கரகோஷமும் 'ஆகா'காரமும் நகை ஒலியும் அடங்க வெகுநேரம் ஆயிற்று.

## 34. மேலும் கீழும்
(1948)

**வேறு** ஓரிடத்தில் நடைபெற்ற பாராட்டு விழா வுக்குத் தலைமை வகித்த ஆசிரியர் கல்கி அவர்கள் பேசுகையில் அவருக்கே உரித்தான தனி நடையில் நகைச்சுவை நனி சொட்டச் சொட்டப் பிள்ளை அவர் களைப் பற்றிய சம்பவம் ஒன்றைக் குறிப்பிட்டார்.

"ஒரு சமயம் நான் ரெயிலில் பிரயாணம் செய்த போது நிகழ்ந்தது இது. ரெயில் புறப்படச் சிறிது நேரம் இருந்தது. நான் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் அமர்ந்திருந்தேன். ஒருவர் வந்து ஏறினார். ஆசனங்களை ஆராய்ந்தார்; பிறகு அமர்ந்தார். நான் அவரிடம் சொன்னேன்:

"'ஐயா, இப்பொழுது ஒருவர் இங்கே வரப் போகிறார். அவரால் மேல் ஆசனத்தில் ஏறிப் படுக்க இயலாது. தயவு செய்து நீங்கள் இந்த ஆசனத்தை அவருக்கு விட்டுவிட்டு மேல் ஆசனத்திற்குச் சென்றால் மிகவும் நலமாக இருக்கும்' என்றேன்.

"அவர் என் சொல்லை மதித்துப் பதில் பேசவில்லை. 'முடியாதவர்கள் முன்கூட்டியே யோசனை செய்து அதற் குத் தக்கபடி ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். அதை விட்டு இப்போது வந்து இப்படியெல்லாம் பேசினால்? தய வாவது, தாட்சிண்ணியமாவது? அதெல்லாம் முடியாது' என்று கண்டித்துக் கூறிவிட்டார்.

"அப்போது என் உள்ளம் எண்ணிற்று. 'கச்சேரி மேடைகளில் பக்கவாத்தியம் வாசிக்கிறபோது வாய்ப் பாட்டு வித்துவான்களை அநுசரித்து, கீழேயே சஞ்சாரம் செய்ய வேண்டியது வயலின் வித்துவானுக்குத் தவிர்க்க

முடியாததாக இருக்கிறது. அங்கேதான் மேல் இடம் கிடைக்கவில்லை. இங்கேயாவது கிடைக்கிறதே! இந்த மகாநுபாவர் நிர்ப்பந்தமாக அந்த வாய்ப்பை அளிக்கிறரே!' என்று நான் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் ராஜமாணிக்கம் பிள்ளை வந்து பெட்டியில் ஏறினர். அவரை மேற்குறித்த நண்பர் ஏற இறங்கப் பார்த்தார். உடனே விரித்திருந்த தம் படுக்கையை அவசர அவசரமாகச் சுருட்டினர். பிறகு சொன்னர்:

" 'ஐயா, சற்று முன் இவர் உங்களுக்காக இந்தக் கீழ் ஆசனத்தை வேண்டி என்னிடம் பேசினர். நான் மறுத்தேன். இப்போது உங்களை நேரில் பார்த்ததும் அவர் கோரிக்கை எவ்வளவு சரியானது என்பது விளங்கி விட்டது. நீங்கள் கீழேயே இருந்துகொள்ளுங்கள்; நான் மேல் ஆசனத்திற்கே போகிறேன்'—இப்படிக் கூறிவிட்டு அவர், மேல் ஆசனத்தில் தம் படுக்கையை விரித்தார்.

"வண்டி ஓடிக்கொண்டிருந்தது. திடீரென்று நான் சிரித்தேன். 'எதற்குச் சிரிக்கிறீர்கள்?' என்று கேட்டார் ராஜமாணிக்கம் பிள்ளை. நான் சொன்னேன்:

" 'கச்சேரி மேடைகளில்தான் உங்கள் விருப்பம்போல் மேல் இடத்து சஞ்சாரங்களுக்கு வாய்ப்புக் கிடைப்பதில்லை. இங்கே இந்த அன்பர் 'மேல் இடந்தான் தர முடியும்' என்றதும் இங்கேயாவது உங்களுக்கு மேல் இடத்து வாய்ப்பு இருக்கிறதே என்று சந்தோஷப்பட்டேன். என்னிடம் அப்படி வாதமிட்ட அவருக்கு உங்களைப் பார்த்ததும் கருணை பிறந்துவிட்டது. உங்களைக் கீழே விட்டுவிட்டு அவர் மேலே போய்விட்டார். கடைசியில் ரெயில் பிரயாணத்தில் கூட உங்களுக்கு மேல் இடம் இல்லை என்பதை எண்ணியதும் சிரிப்பு வந்துவிட்டது'

என்றேன். இதைக் கேட்டு ராஜமாணிக்கம் பிள்ளையும் குலுங்கக் குலுங்க நகைத்தார்"—என்றார் ஆசிரியர் கல்கி.

இப்படிப் பாராட்டு விழாக்களிலே வித்துவான்களும் மற்றவர்களும் ஒருவரை ஒருவர் பாராட்டுகிற முறையில் சமற்காரமாகப் பேசிக்கொண்டாலும் அந்தப் பேச்சிலும் சிறந்த உண்மை பொதிந்து கிடப்பது குறிப்பிடத் தக்கது.

## 35. இங்கிதம்

**(1948)**

தஞ்சையில் திருவிழா. புஷ்பப் பல்லக்குக் காட்சியைக் காண வெளியூர்களிலிருந்து பலர் வந்திருந்தார்கள். ஊர், ரெயில்வே ஸ்டேஷன், ரெயில் எங்கும் கூட்டம்.

திருச்சியிலிருந்து வந்து விழாவைக் கண்டு களித்துவிட்டுத் திரும்பிய அன்பர் ஒருவர் ரெயிலில் கூட்டம் மிக அதிகம் என்பதை எண்ணி அப்போது இருந்து வந்த 'இண்டர்' வகுப்பு டிக்கட்டைப் பெற்றுப் பிளாட்பாரத்தை அடைந்தார். அதே சமயத்தில் ரெயிலும் பிளாட்பாரத்தை அடைந்து நின்றது. ஜன நெருக்கடியின் ஊடே புகுந்த அந்த அன்பர் மெல்ல ஒரு பெட்டியைப் பிடித்து ஏறி அமர்ந்தார். அங்கே எதிரெதிர் ஆசனங்களில் இரண்டு பெரிய மனிதர்கள் மட்டுமே வீற்றிருந்தனர். அவர்களில் ஒருவர் ராஜமாணிக்கம் பிள்ளை.

மேல் மூச்சு வாங்க அருகே வந்து அமர்ந்த அன்பரைக் கடைக்கண்ணால் பார்த்தார் ராஜமாணிக்கம் பிள்ளை. அந்த அன்பர் இறுக மூடிக்கொண்டிருந்த கரத்தில் டிக்கட்டும் சில்லறை நாணயங்களும் இருப்பதைக் கண்டார்.

வண்டி நகரத் தொடங்கிற்று.

"பார்த்தீர்களா திருநாள் கூட்டத்தை?" என்று எதிரே இருந்த பெரிய மனிதரிடம் கேட்டார் ராஜமாணிக்கம் பிள்ளை.

"அடேயப்பா! இங்கேயே இப்படி என்றால் ஊருக்குள் இன்னும் எப்படி இருக்குமோ?" என்றார் மற்றவர்.

"இதையெல்லாம் எண்ணித்தான் பெரும்பாலும் இண்டரிலும் மூன்றும் வகுப்பிலும் பிரயாணம் செய்கிற நான் இன்று இரண்டாம் வகுப்பு டிக்கட் எடுத்தேன்" என்றார் ராஜமாணிக்கம் பிள்ளை.

அவர்கள் உரையாடலைக் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த அந்த மூன்றாவது நபர் திடுக்கிட்டுப் பரபரப்புடன், "என்ன என்ன? இது இரண்டாம் வகுப்பா?" என்றார்; இருக்கை கொள்ளாமல் எழுந்து நின்றார்.

ராஜமாணிக்கம் பிள்ளை முறுவலித்தார். கையமர்த்தி, "உட்காருங்கள்" என்றார். பிறகு, "ஓடுகிற ரெயிலில் எழுந்து நின்று என்ன செய்யப் போகிறீர்கள்? உங்கள் கையில் இருக்கிற டிக்கட்டைப் பார்த்துவிட்டு, உங்களுக்காகவே தான் இப்படிப் பேசினேன். உங்களைப் பார்த்தால் நல்லவராகவே தோன்றிற்று. வேண்டுமென்று வகுப்பு மாறிப் பிரயாணம் செய்பவராகத் தோன்றவில்லை. 'இண்டர்' வகுப்பு, இரண்டாம் வகுப்பு இவை தோற்றத்தில் ஏறத்தாழ ஒரே மாதிரி இருப்பதால் அவசரத்தில் தவறி ஏறிவிட்டீர்கள் என்றுதான் எண்ணினேன். பரிசோதகர் வந்து பிடித்துக்கொண்டால் நீங்கள் பதில் சொல்ல நேருமே, அதற்குள் இதை உங்களுக்கு விளக்கிவிட வேண்டும் என்ற எண்ணம். ஆயினும் எந்தப் புற்றிலே பாம்பு இருக்குமோ! நல்லாரைப்போல் பொல்லார்; பொல்லாரைப்போல் நல்லார். இந்தக் காலத்துப் பிள்ளைகளிடம்

தவற்றைக்கூட வெகு இங்கிதமாக அல்லவா எடுத்துச் சொல்ல வேண்டி இருக்கிறது? நீங்கள் வெடுக்கென்று எடுத்தெறிந்து பேசிவிட்டால் என்ன செய்வது என்ற யோசனை. உங்கள் கையிலிருந்து எட்டிப் பார்த்த டிக்கட் எனக்கு வழிவகுத்துக் கொடுத்தது; விஷயத்தை விளக்கினேன். இதனால் என்மேல் வருத்தம் எதுவும் இல்லையே?'' என்றார் சிரித்துக்கொண்டே.

"வருத்தமா? நல்ல கதை! என் மானத்தைக் காத்த தங்களுக்கு நான் எவ்வளவோ கடமைப்பட்டவனானேன். உங்களுக்கு என் நன்றி கலந்த வணக்கம்'' என்று கரங் குவித்த அந்த அன்பர் அடுத்த ஸ்டேஷனில் ரெயில் நின்றதும் இறங்கி இண்டர் வகுப்பைத் தேடிச் சென்றார். அப்போது திருச்சியிலே வசித்துவந்த எழுத்தாளர் ''மஹி'' என்ற டி. ஆர். குருசாமிதான் அந்த அன்பர்.

இங்கிதத்தில் சம்பன்னர் ராஜமாணிக்கம் பிள்ளை.

## 36. மற்றொரு மருமகன்

(1954)

தமது இரண்டாவது பெண் கோமளவல்லி திருமணப் பிராயத்தை எய்தியதும் ராஜமாணிக்கம் பிள்ளை மகளின் கல்யாண முயற்சியில் ஈடுபட்டார். மாயூரத்தின் அண்மையில் உள்ள விளநகர் என்ற சிற்றூரில் இசை வேளாளர் குலத்தில் தோன்றிய என். சுப்பையாவை மாப்பிள்ளையாகத் தேர்ந்தார்.

வைபவம் கும்பகோணத்தில் அதிவிமரிசையாக நடைபெற்றது. அதை முன்னிட்டுக் குடந்தையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தெய்வங்களுக்கெல்லாம் ராஜமாணிக்கம் விசேஷ ஆராதனைகள் நிகழ்த்திவைத்தார்.

மூத்தபெண் ஜீவரத்தினத்தின் திருமணத்தில் நிகழ்ந்த சிறப்பம்சங்களுக்குச் சற்றும் குறைவில்லாமல் இத்திருமண வைபவமும் நடைபெற்றது.

அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார், ஆலத்தூர்ச் சகோதரர்கள், எம். எல். வசந்தகுமாரி, பாப்பா வேங்கடராமையா, பழனி சுப்பிரமணிய பிள்ளை, மூர்த்தி முதலிய வித்துவான்களும் விதூஷிகளும் இசைக் கச்சேரி செய்தார்கள். திருவடமருதூர் வீருசாமி பிள்ளை, குழிக்கரை பிச்சையப்ப பிள்ளை முதலியோர் நாதசுரக்கச்சேரி செய்தார்கள். பிள்ளை அவர்களின் மாணவர்கள் வைபவ நிர்வாகங்களிலும் இசை நிகழ்ச்சிகளிலும் கலந்துகொண்டு இந்தத் திருமண விழாவைப் பிரமாதமாகச் சிறக்கச் செய்தார்கள்.

# கலைச் சிறப்பு

## கலை மணம்

ராஜமாணிக்கம் பிள்ளையின் இசைப் புலமை குன்றின் மேல் இட்ட விளக்கெனை நாடெங்கும் பிரகாசித்தது. தெளிவான ஞானம், இனிமையான வாசிப்பு, சரளமான பழக்கம், நயமான பேச்சு, தாராள மனம், திட்டமான செயல் முதலிய நல்லம்சங்கள் அவரிடம் அதிகம். இவை அனைத்தையும் தொழில் முறையிலே கலந்து சிறப்பெய்திய வர் அவர். விநயமும் மேதையும் விகசிக்கப் புன்னகை புரிவது அவருடைய தனி இயல்பு. மரியாதையும் அடக்க மும் அவருடைய கலை வாழ்க்கைக்கும் தனி வாழ்க்கைக் கும் அமைந்த வலுவான இரு சகடங்கள் போல. தேச பக்தியிலும் தெய்வ பக்தியிலும் மிகச் சிறந்தவர் அவர். சங்கீதத்திலும் இங்கிதத்திலும் சம்பூரணர். அவருடைய பேச்சு தீஞ்சுவைக் கனிபோல. இவ்வளவும் சேர்ந்து அவரைக் கலைவானில் திகழும் ஜோதியாக ஆக்கின.

முன்னர்க் கூறியவை தவிர, புதுக்கோட்டைச் சம்ஸ் தானம், சிவகங்கை, சேத்தூர் முதலிய ஜமீன்கள் ஆகிய இடங்களிலிருந்து அடிக்கடி இவருக்கு அழைப்பு வந்து கொண்டே இருந்தது.

புதுக்கோட்டை மகாராஜாவினுடைய தங்கையின் திருமணத்தில் இவருடைய கச்சேரி வெகு சிறப்பாக நடை பெற்றது. அங்கே உள்ள சங்கீத சபைக்கு இவர் அடிக்கடி சென்று கச்சேரிகள் நிகழ்த்தி வந்திருக்கிறார்.

வடக்கே பம்பாய், கல்கத்தா, பங்களூர், டில்லி முதலிய பெரிய நகரங்களில் உள்ளவர்கள் அடிக்கடி இவருடைய

வாத்திய இசையைக் கேட்டு இன்புறும் வாய்ப்பைப் பெற்றனர்.

இவை தவிர, தென்னாட்டில் உள்ள மடாலயங்களிலும் இவருக்கு நல்ல வரவேற்பு உண்டு. திருவாவடுதுறை மடத்தில் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் காலத்தில் தம் குரு ஸ்ரீ ராமசுவாமி ஐயரோடு ஒரு முறை போய் வந்தார். அதிலிருந்து பிறகு திருவடமருதூர்க் கோயில் விழாவில் பண்டார சந்நிதிகளின் மேற்பார்வையில் அடிக்கடி இவருடைய கச்சேரி நடைபெற்று வந்தது.

தருமபுர ஆதீனத்தில் நடைபெற்ற இவருடைய கச்சேரியைக் கேட்டுப் பெரு மகிழ்ச்சி கொண்ட ஆதீன கர்த்தர் பொற்சரிகைகளால் ஆன சாதரா முதலிய வெகுமானங்களை அளித்து இவரைக் கௌரவித்தார்.

## கலைஞர்களின் ஆதரவு

காலஞ்சென்ற தாள வாத்திய மேதை புதுக் கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளைக்கு ராஜமாணிக்கத்திடம் அளவு கடந்த வாத்சல்யம். எங்கே கச்சேரி ஏற்பாடு நடந்தாலும் ராஜமாணிக்கத்தைக் கேளாமலே அவருக்காக அதை ஏற்றுக்கொண்டுவிடுவார். 'ரேட்டு' மிக உயர்வாகவே பேசி வாங்கி அளிப்பார். தாள சம்பந்தமான நுணுக்கங்கள் பல சொல்லித் தருவார். புத்திர ஸ்தானத்தில் அபிமானம். நன்னெறி, நல்லொழுக்கங்கள், நல்ல நினைவுகளை வளரச் செய்தவர். ஏராளமான கச்சேரிகளை ஏற்பாடு செய்து கொடுத்து நிரம்ப வருமானத்தை உண்டுபண்ணி நல்ல நிலையில் இருத்திப் பார்த்து மனக்களிப்பு எய்தியவர்.

இந்த முறையில் மிருதங்க வித்துவான் பழனி முத்தையா பிள்ளையும் சற்றும் சளைத்தவர் அல்லர். ஏறக்

குறைய தட்சிணாமூர்த்தி பிள்ளையைப் போலவே அன்பு காட்டி ஆதரித்தவர் அவர்.

காஞ்சீபுரம் நாயனா பிள்ளை அவர்களுக்கும் ராஜ மாணிக்கத்திடம் நிறைந்த அன்பும் மதிப்பும் உண்டு. அவருடைய கச்சேரிகளுக்கு இவர் நிரம்ப வாசித்திருக்கிறார்.

மலைக்கோட்டை கோவிந்தசாமி பிள்ளைக்கு இவரிடம் நிறைந்த அன்பு உண்டு; இவருக்கு அவரிடம் அளவிறந்த பக்தி!

## கலைஞர்கள் உடன்பாடு

அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார், மகாராஜபுரம் விசுவநாத ஐயர், அம்மங்குடி ராதாகிருஷ்ண ஐயர், வேப்பத்தூர் பாலசுப்பிரமணிய ஐயர், வேணு கானம் நாகராஜ ராவ், பல்லடம் சஞ்சீவி ராவ், செம்பை வைத்தியநாத பாகவதர், முசிறி சுப்பிரமணிய ஐயர் ஆகியோரின் கச்சேரிகளுக்கு ராஜ மாணிக்கம் அடிக்கடி வாசித்திருக்கிறார். அடுத்த தலைமுறையினரான செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர், ஜி. என். பாலசுப்பிரமணியம், ஆலத்தூர்ச் சகோதரர்கள், மதுரை மணி ஐயர், எம். எம். தண்டபாணி தேசிகர் ஆகியோருக்கும் ஏராளமாக வாசித்திருக்கிறார். அனைவரிலும் அதிகமாக, சுமார் முப்பது வருஷ காலம் தொடர்ந்து வாசித்தது அரியக்குடி ஐயங்காருக்குத்தான்.

## சிறந்த வாத்தியம்

ஏழுமலை ஆசாரி என்பவர் மூலம் முதலில் சென்னை 'மிஸ்க்மித்' (Misqmith) கம்பெனியிலிருந்து சிறந்த வயலினைப் பெற்றுத் தக்க முறையில் பக்குவம் செய்து கையாண்டு வந்தார். பின்னர் இத்தாலியிலிருந்து, இங்குள்ள

சிலர் கூடி 'ஆர்டர்' செய்ததன்பேரில் சில வாத்தியங்கள் வந்தன. அவற்றுள் ஒன்றைப் பெற்ற ராஜமாணிக்கம் பிள்ளை அதை எடுத்து ஆளுமுன் சுவாமிமலைக்குச் சென்று சுவாமிநாத சுவாமிக்குப் பக்தி சிரத்தையோடு ஆராதனைகள் செய்து அக்கடவுளை வணங்கி வாத்தியத்தை ஏற்றார். உடனே திருவண்ணாமலை சென்றார். அங்கே வாழ்ந்து வந்த பகவான் ரமண முனிவரிடம் ராஜமாணிக்கத்திற்கு அளவு கடந்த பக்தி உண்டு. தமது இருபத்துநாலாவது பிராயத்திலேயே அம்முனிவரின் தரிசனம் தமக்குக் கிட்டியது தம் முற்பிறப்பின் நற்றவம் என்பது ராஜமாணிக்கத்தின் அபிப்பிராயம். முப்பதாவது வயதில் ரமணாசிரமத்தில் ரமண ஜயந்தி வைபவத்தில் மிக ஈடுபாடு கொண்டார். அது முதல் மகரிஷி அவர்களை அடிக்கடி தரிசித்து வந்தார். புதிய வாத்தியத்துடன் அங்கே சென்ற அவர் முனிவரை வணங்கிப் பயபக்தியுடன் அவர் முன்னிலையில் அமர்ந்து வாசிக்கலானார். ரமணர் கேட்டு மகிழ்ந்தார். முறுவல் புரிந்தார். பெரும்பாலான மக்கள் அவரிடம் காணக் கூடியது விலைமதிப்பற்ற அந்தப் புன்னகைதான். ஆனால் இங்கே, இப்போது புன்முறுவலோடு இரண்டு வார்த்தைகளும் அருளினார்: "பயப்படாமல் இரு" என்றார். இதற்கு என்ன பொருள் என்று முதலில் ராஜமாணிக்கத்திற்கு விளங்கவில்லை. அவர் இதைப்பற்றி எண்ணமிட்டுக்கொண்டிருக்கையில் அங்கே இருந்த பெரியவர்கள் ராஜமாணிக்கத்தின் அதிருஷ்டத்தைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். வேத சாத்திரங்களை நன்கு ஓதி உணர்ந்த பெரியோர்கள் பலர் ரமண பகவானைச் சூழ்ந்து இருப்பார்கள். அத்தகைய பெரியவர்களில் சிலர்தான் அப்போதும் அங்கே இருந்தார்கள். அவர்கள்தாம் மேற்கூறியபடி ராஜமாணிக்கத்தின் பேற்றைப் புகழ்ந்தார்கள்.

"பகவான் திருவாய் மலர்வதே அபூர்வம். அதிலும் 'பயப்படாமல் இரு' என்ற வார்த்தைகள் சாமானிய மானவை அல்ல. 'சத்தியம், நேர்மை, வாய்மை முதலிய வற்றால் சிறந்தவர்கள் வாழ்க்கையில் யாருக்கும் பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. கலையில் மேன்மை பெற்றவர் கள் கலைத்துறையில் எவருக்கும் பயப்படவேண்டிய பிரமேயம் இல்லை. ஆக இரு துறைகளிலும் எவருக்கும் பயப்படாமல் நீ வாழ்வதற்குரிய மேன்மைகள் உனக்கு ஏற்படட்டும். எல்லா மேன்மைகளையும் பெற்று நீ நெடுங் காலம் வாழ்வாயாக'—என்ற பொருள் அந்த வாக்கியங் களில் புதைந்து கிடக்கின்றன" என்று அவர்கள் விளக்கம் கூறினார்கள்.

## வாத்தியச் சிறப்பு

நாதஸ்வரம் முதலிய வாத்தியங்களை அடிக்கடி நிரம் பக் கேட்டுச் சிறந்த பல விஷயங்களை அவர் கிரகித்திருக் கிறார். சகாராம் ராவ் அவர்களின் கோட்டு வாத்தியக் கச்சேரியை ஏராளமாகக் கேட்டிருக்கிறார். அதனால் அந்த வாத்தியத்திலே அவருக்குப் பிரேமை உண்டு. ஆனால் எந்த வித்துவானின் கச்சேரியைக் கேட்டாலும், யாருடைய வாத்தியத்தை விசேஷமாக ரசித்தாலும் தம் குருவின் வாசிப்பிலேதான் அவருக்கு விசேஷப் பிரேமை. அந்தப் பிரேமையும், பக்தியுமே அவரைச் சிறந்த ஞான வானாக்கிப் புகழேணியின் உச்சியிலே அமர்த்தி வைத்தன.

அவர் சம்பிரதாயத் தூய்மையோடு பயின்றவர். ஞானத்தை வெகுவாகப் பலப்படுத்திக் கொண்டவர். ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளாக இசையுலகில் பெருந் தொண்டு ஆற்றி வருபவர். இன்று மிகச் சிறப்புடன்

பிரகாசித்து வரும் வயலின் வித்துவான்களுள் முன்னணி வரிசையில் இருப்பவர். லட்சண லட்சியங்களை நன்கு அறிந்தவர். சம்பிரதாய முறை வழுவாதவர். சுவாநுபூதி. கன, நய, சுக பாவங்களை வாத்தியத்தில் கமகக் கோவையுடன் பொழிந்து தாம் அநுபவித்துப் பிறரையும் ஆனந்தத்தில் ஆழ்த்துபவர். அவர் கையில் சுகபாவம் மிகுதி என்பது அறிஞர்கள் முடிவு. அவர் செயலில் தெளிவு உண்டு; திட்டம் உண்டு.

சம சுருதி வாசிப்பு, கலையின் ஒரு சிறப்பம்சம்; கடினமான அம்சம். ஆனால் தக்குச் சுருதியில் வாசிக்கும்போது சகஜமாக எதிர்பார்க்கக்கூடிய தொய்வும் நாதக் குறைவும் நலிவும், வெறுப்புணர்ச்சியும், சுத்தமில்லாத சங்கதிகளும், அவல ஒலியும் இவரிடம் காணப்பட மாட்டா. மாறாக, 'எச்சு' சுருதியிலே நிலைத்து நின்று புரிகிற ஜாலங்களை இங்கும் காணலாம். அழுத்தம், நாதக்கட்டு, சுகபாவம், காம்பீரியம் முதலிய சிறப்பம்சங்கள் 'தக்கு' சுருதியிலும் நிறைந்தே ஒலிக்கும். அவ்வளவுக்கு வாத்தியத்தைச் சாதகம் செய்து வசப்படுத்திக் கொண்டிருக்கிறார் அவர்.

நான்கு தலைமுறையினருக்கு அவர் பக்கவாத்தியம் வாசித்திருக்கிறார். நான்கு தலைமுறையினரில் அவருடைய துணையைப் பெறாத வித்துவான் எவருமே இல்லை என்று கூறலாம். உதாரணம்: உமையாள்புரம் சாமிநாதையர், மகாராஜபுரம் விசுவநாதய்யர், செம்மங்குடி ஸ்ரீநிவாசஐயர், தஞ்சைத் தியாகராஜன்.

## மூன்று நிலைகள்: (i) ஞானம்

வயலின் வாத்தியத்தில் ஞான பூர்வமாகச் சிறப்பெய்துவது வேறு; சபா ரஞ்சகமாகச் 'சோலோ' வயலின்

கச்சேரி செய்வது வேறு; பக்க வாத்தியமாக இசைப்பது வேறு. மூன்றும் தனித் தனி அம்சங்கள்.

ஒருவர் நிறைந்து ததும்பும் ஞானம் உடையவராக இருக்கலாம்; அந்த ஞானத்தை வெளிக் காட்டத் தக்க முறையில் வாசிக்கும் ஆற்றலும் பெற்றவராக இருக்கலாம். அவர் ஆளும் வழிகளைப் பிறர் ஆள முடியாதபடி தனிச் சிறப்புப் பெற்றவராகவும் இருக்கலாம்; ஆனால் சுமார் மூன்று மணி நேரம் அவர் மேடையில் அமர்ந்து தனி வயலின் கச்சேரி செய்வதை யாராலும் ரசிக்க முடியாமல் போய் விடலாம். அது மட்டுமல்ல; அவரே ஒரு வாய்ப் பாட்டுக் கச்சேரியில் பக்கவாத்தியமாக அமர்ந்தாலும் பாடகருக்கு அநுகுணமாக, சபா ரஞ்சகமாக, வாசித்து அனைவரையும் இன்ப உணர்ச்சியிலே ஈடுபடுத்த முடியாமலும் போய் விடலாம். அவர் பெரிய ஞானவான், அபார மான சாதகி—அவ்வளவே அவர் சிறப்பு!

## (ii) சோலோ

ஒருவர் 'ஸோலோ' தனி வயலின் கச்சேரி செய்ய வென்று மேடையில் அமர்ந்தால் மூன்று மணியோ நாலு மணியோ—எதிரே அமர்ந்திருப்பவர்கள் அவ்வளவு பேரை யும் மகுடியிலே கட்டுண்ட சர்ப்பம்போல மெய்ம்மறந் திருக்கச் செய்து விடலாம். ஆனால் அவரே பக்கவாத்தி யக்காரராக அமரும்போது அவர் சிறப்பு ஒரு சிறிதுகூடச் சோபிக்காமல் போய் விடலாம்.

ஒருவர் சாமானியப் பாடகர் முதல் பெரிய பெரிய வித்துவான்கள் வரை பலருக்கும் வாசித்து வித்துவான்கள், ரசிகர்கள் அனைவரையும் திருப்தியுறச் செய்யலாம். அவரே சோலோக் கச்சேரி செய்தால், ஒரு மணி நேரமாவது

அவை கலையாதபடி சிறப்பாகச் செயலாற்ற முடியாமல் போய் விடலாம்!

## (iii) பக்க வாத்தியம்

பக்கவாத்தியம் வாசிப்பது என்பது எளிதான செயல் அல்ல. சோலோக் கச்சேரியில் ஒருவர் தோல்வியுற்றால், அல்லது சிறப்புப் பெற்றால் அதற்குரிய புகழும் மற்றதும், அவருக்கு மட்டுமே உரித்தானவை. பக்கவாத்தியத்தில் அப்படி அல்ல; மூவர் நால்வர் கூடிச் செய்யும் செயலில் ஒருவர் புரியும் நன்மை தீமைகளில் மற்றவர்களுக்கும் நிச்சயமாகப் பங்கு உண்டு. பாடகர் மிகச் சாமானியராக இருந்தாலும் சிறந்த பக்கவாத்தியங்களின் ஒத்துழைப்புக் காரணமாகக் 'கச்சேரி வெகு பிரமாதம்' என்று பெயர் பெற்றுவிடும். அதே மாதிரி, பாடகர் மிகச் சிறப்புடையவராக இருந்தாலும் பக்கவாத்தியங்களின் குறையால் 'கச்சேரி வெகு மட்டம்' என்று ஏற்பட்டு விடுவதும் உண்டு. இரண்டுக்கும் காரணம் பக்கவாத்தியங்களே.

ராஜமாணிக்கம் சோலோக் கச்சேரி செய்வதிலும், பக்கவாத்தியமாக இசைப்பதிலும் தனித் தனியே புகழ் பெற்றவர். அவர் 150-க்கு மேற்பட்ட சோலோக் கச்சேரிகள் செய்திருக்கிறார். எண்ணிறந்த ரசிகர்கள் கேட்டு இன்புற்றிருக்கிறார்கள். ஆனாலும் பக்கவாத்தியம் வாசிப்பதிலேதான் அவருக்கு அபாரமான புகழ்! இன்று அவர் அறுபதாவது படியில் அடி வைத்திருக்கிறார். இன்றைய அவர் உடல் நிலையும் சுமாராக இருக்கிறது. இருப்பினும் வித்துவான்களும், ரசிகர்களும் அவரை விரும்பி வரவேற்கிறார்கள். சம்பாதித்துத்தான் ஆக வேண்டும்; புதிதாகப் புகழ் தேட வேண்டும் என்ற நிலை

யில் அவர் இல்லாவிட்டாலும் அன்பர்களின் அழைப்பை மறுக்க மனமின்றியும், பழைய வழிகளின் சிறப்பை முன்னேறி வரும் புதிய கலைஞர்கள் உணர வேண்டும் என்ற பரந்த நோக்குடனும் செயலில் ஈடுபடுகிறார். ஊறிப் போன தெளிவான ஞானத்தினாலும், அடிநாளில் செய்த அபார சாதகத்தினாலும் புது வைரத்தின் போலிப் பளபளப்பாக இல்லாமல் நன்கு பட்டை தீட்டப் பெற்ற பழைய காலத்து உயர்ந்த ஜாதி வைரத்தைப் போல் திண்மையுடனும், தண்மையுடனும் தமது ஞானத்தைப் பரப்பி ஒளி வீசிக்கொண்டிருக்கிறார்!

## அந்த நாளில்

அந்த நாட்களில் கேட்டு ரசிக்க வேண்டும் அவருடைய வாசிப்பை! 'கர்நாடக சுத்தம் என்றால் என்ன?' என்பது புரியாத அளவிற்கு நவீனம் கலந்து குழப்பத்தை உண்டு பண்ணும் காலம் இது. கேட்கக் கேட்கத் தெவிட்டாதது கர்நாடக சங்கீதம். ஒரே நாளில், ஒரே ராகத்தை, ஒரே கிருதியைப் பலர் பல முறை பாடினாலும் அலுப்புச் சலிப்பின்றிக் கேட்கக் கூடியது கர்நாடக சங்கீதம். கர்நாடகம் அல்லாதது ஓர் அளவிற்கு மேல் நமக்குச் சலிப்பை உண்டு பண்ணக் கூடியது; புளித்துப் போகக் கூடியது. நாம் செய்த பெரும் பாக்கியத்தினால் கர்நாடக சங்கீதத்தை முறை வழுவாது பாடக்கூடிய, வாசிக்கக்கூடிய பெரிய வித்துவான்கள் நம்மிடையே வாழ்ந்து வருகிறார்கள். அந்த அடிச்சுவட்டில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கக் கூடிய இளம் வித்துவான்களும் தோன்றி வருகிறார்கள். அப்படி நம்மிடையே வாழ்ந்து வரும் பெரிய வாத்திய வித்துவான்களில் ராஜமாணிக்கம் குறிப்பிடத் தக்கவர்!

கர்நாடக சுத்தமான சங்கீதத்தை வயலின் வாத்திய வழி வரையாது வழங்கும் வள்ளல் அவர். யுத்தத்தில் ஜயிக்கப் படைப் பலம் அவசியம். பலவீனம் உள்ளவர்கள் பலவான்களைப் பக்க பலமாகச் சேர்த்துக்கொள்வது உண்டு. நல்ல வலு உடையவர்களுங்கூட அதிக நன்மையை எதிர்பார்த்துப் பலசாலிகளைத் தம்மோடு சேர்த்துக் கொள்வர். இசைமேடைகளில் ராஜமாணிக்கத்துக்கு அத்தகைய வரவேற்பு என்றும் உண்டு. மிக மிகச் சாமானிய வித்துவான்களின் கச்சேரிகள்கூட அவருடைய கூட்டுறவால் பிரமாதமான சோபையைப் பெற்றிருக்கிறது என்றால் சிறந்த வித்துவான்களுடைய கச்சேரிகளின் உயர்வைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

## தனிச் சிறப்பு

ராஜமாணிக்கம் பக்கவாத்தியம் வாசிக்கும்போது அபூர்வமான, கொண்டாடத் தக்க சில வழிகளைக் கையாள்வார். புன்சிரிப்பினாலும், சாதுரியப் பேச்சினாலும் பாடகரின் உள்ளத்தில் உற்சாகமூட்டுவதில் அவர் வெகு சமர்த்தர். 'நீ பலசாலி', 'நீ கெட்டிக்காரன்', 'நீ மேதாவி' என்றெல்லாம் தொடர்ந்து கூறிச் சாமானியனையும் சூரனாக்கி விடுவதுபோல அவர் சொற்கள், செயல்கள் ஆகியவை வித்துவானுடைய உள்ளத்தைத் தொட்டு மேதையைத் தோற்றுவிக்கும். ஆனால் இச்செயலிலும் அவர் மிகுந்த நிதானம் உடையவர். தவறாக, அதிகமாக ஒருவரை வீண் துதி செய்து தூக்கிவிட்டு வீழ்ச்சியை உண்டுபண்ண மாட்டார்.

அவர் தந்திகளில் வில்லைப் பதிக்கிறபோதே, பாடகரின் உள்ளத்தில் சோர்வு இருந்தால் அது மறைந்து

உற்சாக உணர்ச்சி தலை எடுக்கும். மனத் தத்துவத்தை அறிந்தவர்போல் பாடகர் பாட நினைப்பதை வாத்தியத்தில் மெல்ல இசைத்து அடி எடுத்துக் கொடுப்பார். பாடகர் உற்சாகமாகப் பாடிக்கொண்டே போகிறபோது தாமும் பின்னோடு இசைத்துக்கொண்டே போய்ப் பாடகரின் செயலுக்குக் குறுக்கே நின்று அவருடைய உற்சாகத்தைக் குலைக்க மாட்டார். பாடகர், சங்கதிகளைப் பாடுபட்டுப் பிரமாதமாக உருவாக்கிக்கொண்டு வருகையில், 'எனக்கும் எல்லாம் தெரியும்' என்ற முறையிலோ, 'நான் உன்னைவிடச் சிறந்தவன்' என்கிற நினைப்பிலோ பாடகர் பாடுகிற சங்கதிகளை எல்லாம் தம் வாத்தியத்தில் தொடர்ந்து இசைத்துக் குளற மாட்டார். செயலின் சோபிதத்தைக் கெடுக்கவே மாட்டார். பாடகர் பாடும்போது மெல்லெனை வில்லைப் போட்டுக்கொண்டே இருப்பார்; அவர் பாடி முடித்ததும் தாம் வாசிக்க ஆரம்பிப்பார்.

## இளம் பாடகர்களுக்கு

இந்த முறையில் அவரிடம் இரண்டு வகைகள் உண்டு. இளம் பாடகர்களின் கச்சேரிகளில் பாடகர் ராகம் பாடி நிறுத்தினதும் அவர் பாடியதை முதலில் தாம் வாசிப்பார். பிறகு அந்த ராகத்தை இன்னும் எப்படி எல்லாம் ஆளமுடியும் என்று வாசித்துக் காண்பிப்பார். வாசித்து நிறுத்திக் குறிப்பாகப் பாடகரை நோக்குவார். பாடகர் அக்குறிப்பைக் கவனியாவிடில் ஒரு முறை 'உம்' கொட்டிக் கவனிக்கச் செய்வார். பாடகர் அவர் வாசித்த முறையைப் பின்பற்றி மீண்டும் அந்த ராகத்தை நன்கு பாட வேண்டும் என்பது குறிப்பு. இப்படி அவர் கை கொடுத்து ஆதரித்து முன்னுக்குக் கொண்டு வந்த வாய்ப்பாட்டு வித்துவான்

களில் அநேகர் இன்று முன்னணியிலே பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த அநுபவத்தை நேரில் கண்ட ரசிகர்களே அதை மறக்காதபோது அச்செயலுக்குப் பாத்திரரான வித்துவான்கள் ராஜமாணிக்கத்தையும், அவருடைய உதவியையும் எப்படி மறக்க முடியும்?

ராகத்தில் போலவே கீர்த்தனைகள், ஸ்வரப்பிரஸ்தாரங்கள் முதலிய அம்சங்களிலும் மேற்குறித்த முறை உண்டு.

## பெரிய வித்துவான்களுக்கு

இளம் பாடகர் விஷயத்தில் இப்படி நடந்துகொள்ளும் ராஜமாணிக்கம் பிள்ளை பெரிய வித்துவான்கள் விஷயத்தில் சிறிது வேறு விதமாக நடந்துகொள்வார். ராகம், ஸ்வரப் பிரஸ்தாரம் முதலியவற்றை, 'வாங்கி வாசிக்கிற'போது எல்லை மீறாதவராக—நாணயம் பிறழாதவராக—செயலாற்றுவார். எடுப்பு, வித்துவான் பாடிய முறையில் இருக்கும். மத்திய பாகத்தில் விசேஷ சங்கதிகள் அவருடைய தனிப் பாணியில் ஒலிக்கும். முடிவில் வித்துவான் பாடிவிட்ட இடத்தைத் தொட்டுக்கொண்டு, வாங்கின கடனைத் திருப்பிக் கொடுப்பது போல வித்துவானின் 'தாரணை' கெடாத முறையில் வாசிப்பை நிறுத்துவார்.

சம யோக்கியதையுடைய வாய்ப்பாட்டு வித்துவானும், வயலின் வித்துவானும் கச்சேரியிலே செயலாற்றுகிற போது பாடகர் பாடிய வழி ஒன்றாகவும் அதே செயலை வயலின்காரர் செய்யும்போது அந்த வழி வேறாகவும் பிளவு பட்டு இருக்குமானால் பாடகரின் கற்பனை—மனோதர்மம்—காற்றிலே பறந்துவிடும். அடுத்து அவர் செய்ய வேண்டிய செயல் நினைவிலிருந்து மறைந்துவிடும். வயலின் வித்துவான் வாசித்து நிறுத்திய பின் பாடகர் மேலே தொடரும் வழி

புரியாமல் சற்று நேரம் இங்கும் அங்கும் நோக்குவதும், பாடிவிட்ட ராகத்தின் ஜீவ ஸ்வரங்களை உள்ளுக்குள் நினைப்பூட்டிக்கொள்வதும் ஆகிய தவிப்பு, சில இடங்களில் நேர்வதுண்டு. காரணம் மேற்குறித்த மாறுபட்ட செயல் முறைகள் தாம்.

ராஜமாணிக்கம் பிள்ளை தம் வாழ்நாளில் இப்படிப் பட்ட தவற்றை ஒருபோதும் செய்தவர் அல்லர். 'பக்க வாத்தியம் பக்குவ வாத்தியமாக இருக்க வேண்டும்' என்பதை நன்கு உணர்ந்தவர் அவர். அதனாலேதான் எல்லா வித்துவான்களும் அவரைப் பெரிதும் விரும்புவது.

## பங்குப் புகழ்

தனிப் புகழ் என்ற ஓர் ஆசை மனித இயல்பின் தவிர்க்க முடியாத ஒரு பகுதி. மற்றவற்றிற்கு அது எவ்வளவிற்குப் பொருந்துமோ; இசைக் கச்சேரியில் அது பொருந்தவே பொருந்தாது. யாரும் அதை மனத்தில் நினைக்கவே கூடாது. செயல் என்ற ஒன்றிற்குக் காரணர் கள் பலர். செயல் பரிமளித்தால் புகழ் உண்டு; சம்பந்தப் பட்ட அனைவருக்கும் அதில் பங்கு உண்டு. அப்படிக் கிட்டுகிற 'பங்குப் புகழ்' தான் தங்கும் புகழ். தனிப் புகழ் நிலைக்காது; நீடிக்காது. சுஸ்வரங்களின் நடுவே ஓலமிடும் அபஸ்வரத்தைப் போன்றது, குழுவிற்குள்ளே ஒருவர் பெறும் தனிப் புகழ். சம்பிரதாய முறைக்கு விரோதமாக மற்றவர்களைக் குறைத்து, தான் உயர முயல்கிறபோதே மற்றவர்களைவிடத் தாழ்ந்து விடுகிறான் மனிதன். புகழை அவனுக்கு அளிப்பவர்களே பின்னர் அவனை இகழ்கிறார் கள். புகழும் செயல் அப்போதைய உற்சாக உணர்ச்சியின் விளைவு; இகழும் செயல் பின்னர் நிதானமான நிலையில்

தனிப் புகழ் பெற்ற மனிதனின் முறைப் பிசகான போக்கை எண்ணிப் பார்த்ததன் விளைவு. இத்தகையோர் ஒரு குழுவில் இணையலாகாது; இணைந்துவிட்டால் பின்னர்ச் சட்ட விரோதமாக நடந்துகொள்ளக் கூடாது; சட்டத்தோடு ஒட்டித்தான் போக வேண்டும்.

ராஜமாணிக்கத்தைப் போல இதை நன்கு அறிந்து அநுஷ்டிப்பவர் வெகு சிலர். இதே மாதிரி மனப்பான்மையுடன் பல காலம் செயலாற்றிப் புகழுடம்பு பெற்றவர் தாள வாத்திய மேதை புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை அவர்கள்.

## ஸ்வாநுபூதி

ராஜமாணிக்கத்தின் வாசிப்பில் அயர்ந்து மறந்துங் கூடக் கமக நலிவையோ, ஸ்வரச் சேதத்தையோ, வாசிப்பில் அலட்சிய பாவத்தையோ, அதிகப்படியையோ நாம் காண முடியாது. பிடிப்புக் குன்றாத, அதாவது 'டெம்போ'க் குறையாத வாசிப்பு அவருடையது. கண்ணை மூடிக் கொண்டு கேட்டால் அவர் வாசிப்பது சில இடங்களில் சில சமயங்களில் வாயால் பாடுவதுபோல் இருக்கும். வித்துவான்கள் அவரை விரும்பிப் பக்கவாத்தியத்திற்கு அழைப்பதற்கு இது ஒரு முக்கிய காரணம். இந்த நிலையை அவர் பெற்றதற்குக் காரணம் அடிநாளில் அவர் போதிய அளவு வாய்ப்பாட்டுப் பயிற்சி பெற்றதுதான். இன்றுங்கூட அவருக்கு அந்தத் துறையில் அளவு கடந்த ஆர்வம். அடிக்கடி ஸ்வாநுபூதியாய்ப் பாடி மகிழ்வார்.

## 'தர்ம பத்தினி'

"ஒன்றை நன்றாகத் தெரிந்துகொள்வது வேறு; பிறருக்கு அதை விளக்கமாக எடுத்துச் சொல்வது வேறு;

தாமே அதன்படி நடந்துகொள்வது வேறு. இந்த மூன்றி லும் சிறப்புடையவர்கள் அபூர்வம்.

"கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை அத்தகைய அபூர்வப் பிறவிகளில் ஒருவர். பக்கவாத்தியம் என்றால் எப்படி அமைய வேண்டும் என்பதை நன்கு அறிந்தவர் அவர். அறிந்தபடி அநுஷ்டித்தும் வருபவர்.

"இன்று, கச்சேரி நன்கு அமையப் பல சாதனங்கள் தேவைப்படுகின்றன. ஏதாவது இரண்டொன்றில் குறை தோன்றினாலும் கச்சேரி சாரமில்லாமல் போய் விடுகிறது. ஆனால் சில காலத்திற்கு முன்பு இவ்வளவு உப-பலங்கள் தேவையாக இல்லை. கச்சேரி நடக்கும் இடம், நேரம், பக்கவாத்தியங்கள் இவை சிறப்புடையனவாக இருந்தால் போதும்; கச்சேரி பிரமாதமாக அமைந்துவிடும்.

"பக்க வாத்தியமாக வயலின் இசைக்க ராஜமாணிக்கம் பிள்ளை வரப்போகிறார் என்றதும் கச்சேரி செய்பவர், அதை ஏற்பாடு செய்பவர் இவர்களுக்கு நிம்மதி; ரசிகர் களுக்கு நிம்மதியோடு சந்தோஷமும்கூட. அவருடைய வாசிப்பிலே அத்தனை சிறப்பு; அவ்வளவு பக்குவம்!

"ஒரு குடும்பத்திற்குத் தர்ம பத்தினி எப்படியோ அப்படி மேடைக் கச்சேரிக் குழுவுக்கு ராஜமாணிக்கம் பிள்ளை. வீட்டிலே ஒரு வைபவம். தலைவன், வந்தவர்களை வரவேற்று, விருந்தளித்து, உபசரித்து வழி அனுப்பு கிறான். அவனுடைய செயல்களுக்கு உறுதுணையாக இருப்பவள் தலைவி. 'உத்தமமான குணங்கள் நிரம்பப் பெற்ற தலைவியே தலைவனின் தர்ம பத்தினி' என்று குறிப் பிடுவது வழக்கம். அத்தகையவள் விருந்தினரின் முன்னே

தோன்றி, சிரித்துப் பேசி எல்லாம் செய்யமாட்டாள். அச் செயல்களைத் தலைவனின் பொறுப்புக்கே விட்டுவிடுவாள். தான் பின்னே இருந்து தலைவனின் செயல்கள் சிறக்கப் பாடுபடுவாள். விருந்தினர்கள் தலைவனை, அவன் செயல் களை, விருந்தைப் புகழ்ந்துகொண்டே செல்வார்கள். அந்தப் புகழ்ச்சியில் தர்ம பத்தினிக்கும் பங்கு உண்டு. அத்தகைய பங்குப் புகழைத்தான் அவள் விரும்புவாள். தனிப் புகழை விரும்பமாட்டாள். தனிப்புகழை விரும்பு பவள் உத்தம குணம் நிறைந்த தலைவி ஆகமாட்டாள்.

“இசை மேடையில் தம் செயல் தனித்துச் சிறக்காமல் கண்காணித்துக்கொள்பவர் ராஜமாணிக்கம் பிள்ளை. பாட் டுக்கு முரணாக, அதியாக அவர் வாசிப்பதே இல்லை. பாட்டின் தரத்திற்கு ஏற்பத் தராசில் நிறுத்தது போலவே எந்த அம்சத்தையும் கையாள்வார். அப்படிக் கையாள்கிற போதே தம்முடைய ஞானம், சொந்தப் பாணி, சிறப்பு அம்சம் அனைத்தும் அங்கங்கே பளிச்சிட இழைந்து கொடுப்பார்.

“கலவை ஒரு கலை. அதில் ஏற்றத் தாழ்வு ஏற்பட் டால் ரஞ்சகம் இருக்காது. அந்த நுட்பத்தை நன்கு அறிந்த ராஜமாணிக்கம் பிள்ளை அடங்கி நின்று அளவோடு வாசித்து அதிலே தம் முத்திரையையும் பதித்துச் செயலில் பரிமளத்தை ஊட்டுவார். ஆகவே கச்சேரிக் குழுவுக்கு அவர் குடும்பத்தின் தர்ம பத்தினி போல என்பதில் தடை என்ன? ஒரு கூட்டத்தில் இப்படி நான் குறிப்பிட்டேன். இதையே தலையங்கமாக்கி ராஜமாணிக்கம் பிள்ளையைப் பற்றி நீண்ட கட்டுரை ஒன்று எழுதினர் ஆசிரியர் கல்கி” என்று மகிழ்ச்சி பொங்கக் கூறுகிறார் சங்கீத வித்துவான் ஜி. என். பாலசுப்பிரமணியம்.

## 'ஞானக் களஞ்சியம்'

" 'ஞானக் களஞ்சியம்' என்றால் திரு ராஜமாணிக்கம் பிள்ளைக்கு முற்றும் பொருந்தும். அதுமட்டுமல்ல, 'குணக் குன்று' என்றும் அவரைக் குறிப்பிடலாம். அவர் பிரமாதமாக இசை மேடைகளில் செயல் ஆற்றிக்கொண்டு வருகையில் அதே துறையில் அவருக்கு இணையாகத் திகழ்ந்து கொண்டிருந்தவர்கள் ஒரு சிலரே. எனினும் அவருக்குத்தான் வரவேற்பு அதிகம. அப்போது பிரபல மாக விளங்கிக்கொண்டிருந்த வாய்ப்பாட்டு வித்துவான்கள் அனைவருமே அவரை விரும்பினார்கள். அத்தகைய ஓர் உயர் நிலை, சகஜமாக யாரிடமும் கர்வத்தை உண்டுபண்ணக் கூடியது; தமக்கு அடுத்த நிலையில் உள்ளவர்களை அலட்சிய மாக நினைக்கும்படி செய்யத் தக்கது. ஆனால் அவரிடம் அந்த மனோபாவம் அணுவும் இல்லை. சிறு வயதுடைய வாய்ப்பாட்டு வித்துவான்கள், வாத்திய வித்துவான்கள் எவரையுமே அவர் உதாசீனமாக எண்ணியதில்லை. வயதில் சிறியவர்களை மட்டுமல்ல; யோக்கியதையில் வளர்ச்சி பெறாதவர்களைக் கூட நன்கு மதித்து நடத்தும் இயல்பினர் அவர். பக்க வாத்திய வித்துவான்களில் அவர் சிறந்த யோக்கியதை உடையவர். இப்படிப்பட்டவர்கள் வாய்ப் பாட்டு வித்துவான்கள் போதிய தகுதியைப் பெற்ற பிறகு தான் அவர்களுக்கு வாசிக்க முன் வருவர். ராஜமாணிக்கம் பிள்ளையோ பிரமாதமான யோக்கியதையும் கர்வப்படத் தக்க ஆதரவும் பெற்றிருக்கும் சமயத்திலும் போதிய தகுதியை அடையாத இளம் வாய்ப்பாட்டு வித்துவான் களுக்கு நிரம்ப வாசித்திருக்கிறார்; அவர்கள் முன்னேற உதவி இருக்கிறார்.

"நான் மேடைக்கு வந்து ஓரளவு பிராபல்யம் பெறு முன்பே அவர் பெரிய மனம் வைத்து எனக்கு வாசிக்க முன் வந்தார். பல கச்சேரிகளுக்கு வாசித்தார். எனக்கு உற்சாகம் உண்டுபண்ணி ஊக்கம் அளித்தார்.

"அன்று மட்டும் என்ன? இன்றும் அவர் அம்மாதிரி செயல்களில் சற்றும் பின் வாங்காதவர். அவர் உள்ளம் அருள் நிறைந்தது; கடல் போன்றது" என்று உணர்ச்சி மிகக் கூறுகிறார் கானகலாதர மதுரை மணி ஐயர்.

# குணச் சிறப்பு

## மரியாதை

ஸ்ரீ மகான சபையின் ஆதரவில் திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில் 4-8-57 அன்று அயிலூர் கிருஷ்ணனின் வாய்ப் பாட்டுக் கச்சேரி நடைபெற்றது. அவருக்குப் பக்க வாத்தியமாக வயலின் இசைப்பதற்கென்று ராஜமாணிக்கம் பிள்ளை வந்திருந்தார். வழக்கம் போல் தேசிகர் இல்லத்தில் தங்கி இருந்தார். நண்பர் ஒருவருடன் அவரைக் காணச் சென்றேன். உணவுக்குப் பின் ஓய்வில் இருந்த அவரிடம் அவருடைய மாணவர் கிருஷ்ணசாமியின் மனைவியார், அவருடைய தங்கை இருவரும் வந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அன்புடன் எங்களை வரவேற்ற ராஜமாணிக்கம் பிள்ளை வயதில் மிக இளையவரான என் நண்பரிடம் பேசுகிறபோது மரியாதைச் சொற்களை உபயோகித்தார். எனக்கு என்னவோபோல் இருந்தது. ஆட்சேபித்தேன். ராஜமாணிக்கம் பிள்ளை சிரித்துக் கொண்டே சொன்னார்.

"மரியாதை உள்ள இடத்தில் உரிமையும் வாத்சல்யமும் குறைந்துவிடும் என்ற நினைப்பில் நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள் என்று நான் கருதுகிறேன். அதில் ஓரளவு உண்மை இருக்கிறது என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் 'லௌகிகம்' என்ற நவீன நடைமுறைகளால் கவரப்பெற்ற இந்த யுகத்தில் மரியாதைக்கு மிக முக்கியத்துவம் உண்டு. முதலாவது, பிறருக்கு மரியாதை கொடுப்பதால் நம் மரியாதையை நாம் காப்பாற்றிக்கொள்கிறோம்; நம்முடைய பெருமையை நாமே வளர்த்துக்

கொள்கிறோம். இரண்டாவது, நாம் ஒருவருக்கு மரியாதை அளித்தால் நம்மைப் பின்பற்றி மற்றவர்களும் அவருக்கு மரியாதை அளிக்க முன் வருகிறார்கள். மூன்றாவது, மரியாதை முதலிய பண்புகளைப் பயின்றுவரும் பின் சந்ததியாருக்கு நாம் ஒரு வழி காட்டியாகிறோம். அன்பும் உரிமையும் வாத்சல்யமும் உள்ளத்தின் ஆழத்திலே பதிந்து கிடப்பவை. மரியாதை நடவடிக்கைகளால் அவை ஒரு போதும் பாதிக்கப்பெறா. அப்படி பாதிக்கப் பெறுமானால் அந்த அன்பு, உரிமை, வாத்சல்யம் முதலியன உண்மையானவை அல்ல என்றுதான் பொருள்."

இப்படி ஒரு சிறு பிரசங்கத்தைச் செய்து முறுவல் பூத்தார் ராஜமாணிக்கம் பிள்ளை.

## சரள பாவம்

"உங்கள் வாழ்க்கை வரலாறு நிறைவேறி இருக்கிறது. அதை ஒருமுறை நான் படித்து நீங்கள் கேட்டால் நலம். குறைகள் இருந்தால் தவிர்த்துக்கொள்ளவும், புதிய செய்திகள் ஏதாவது இருந்தால் சேர்த்துக்கொள்ளவும் சௌகரியமாக இருக்கும்" என்றேன்.

"நாளை நான் தங்கள் இல்லத்திற்கு வருகிறேன். காலை முதல் மாலைவரையில் தங்குகிறேன். அப்போது இதை வைத்துக்கொள்ளலாம்" என்றார்.

என் உடம்பு சிலிர்த்தது. வேதம், சாத்திரம், சுஸ்வரமான சங்கீதம், நற்றமிழ் முதலியவற்றை நன்கு பயின்று வாழ்நாள் முழுவதும் அந்த அந்தக் கலைக்குத் தொண்டாற்றி உலக மக்களை உய்விப்பவர்கள் தெய்வப் பிறவிகள் என்பது என் அபிப்பிராயம். அத்தகையோரைக் காண்பது, அவர்களோடு நெருங்கிப் பழகுவது, உரையாடுவது

முதலியன பெரும் பேறு என்று கருதுபவன். அப்படிப் பட்டவர்கள்—வருந்தி வருந்தி அழைத்தாலும் வாராதவர்கள்—வலிய நம் இல்லத்திற்கு வருவதாகச் சொன்னால் அதை லேசாக எண்ணிவிட முடியுமா? வலியச் சென்று அருள் புரியும் தன்மை ஆண்டவனுக்கே உண்டு. அடுத்த படியாக அவனுடைய அம்சம் பொருந்திய, பிரதிநிதிகளிடம் காணலாம். தேர்ந்த புலமை பெற்ற ராஜமாணிக்கம் பிள்ளையின் கூற்று இதற்கு ஒரு சான்று. அன்று ஒரு சங்கீத சபையார் அவரை விருந்துக்கு வருந்தி அழைத்திருக்கிறார்கள். அதையும் தட்டிக்கொண்டு அவர் என் இல்லத்திற்குத் தாமாகவே விரும்பி வந்தார் என்பது பின்னால் தெரிந்தது.

மறுநாள் காலை பதினொரு மணிக்குத் தம்முடைய மாணவர் நடனசிகாமணியுடன் பிள்ளை அவர்கள் வந்து சேர்ந்தார். சந்தர்ப்பம் அநுமதித்த சிலருக்குத் தகவல் கொடுத்திருந்தேன். அவர்களும் வந்து சேர்ந்தார்கள். கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன், நான் பணி புரிந்து வரும் அமுத நிலையத்தின் தலைவர் ஸ்ரீ ரா. ஸ்ரீ. ஸ்ரீகண்டன், சங்கீத வித்துவான்கள் களக்காடு ராம நாராயண ஐயர், கீரனூர் மு. ராமசுவாமி பிள்ளை ஆகியோரும், அடுத்த தலைமுறையினராகத் தயாராகி வரும் சங்கீத மாணவ மாணவிகளில் சிலர்—செம்பை வைத்தியநாத பாகவதர் அவர்களின் மாணவி சித்தூர் கே. எல். ரங்கநாயகி, ஜி. என். பாலசுப்பிரமணியம் அவர்களின் மாணவர் எஸ். தியாகராஜன், மதுரை மணி ஐயர் அவர்களின் மாணவர் திருவெண்காடு ஜயராமன் முதலியோரும் மற்றும் நண்பர்கள் சிலரும் வந்திருந்தார்கள்.

## கலை உபதேசம்

இசைக் கலைஞர்கள் உள்ள இடத்திலே இசை முழக்கத்துக்கும் இசையைப் பற்றின பேச்சிற்கும் பஞ்சம் ஏது? பிள்ளை அவர்கள் வித்தியார்த்திகளைப் பாடச் சொல்லிக் கேட்டார். தம் மகிழ்ச்சியை வெளியிட்டார். "இவர்களுக்குப் பாடுவதற்கு ஏற்ற சாரீரம் வாய்த்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். ஞானம் இருக்கிறது, ஆர்வம் இருக்கிறது, வருங்காலத்தில் நன்கு சோபிப்பார்கள்" என்று மற்றவர்களிடம் சொன்னார். பிறகு பொதுவாகக் குறிப்பிட்டார்.

"கச்சேரியில் மற்ற அம்சங்களைப் போல 'நிரவல்' என்பதும் ஒன்று. சாகித்தியத்தின் ஒரு பகுதியைச் சில முறை ஏற்றத் தாழ்வுடன் உச்சரிப்பதோ, ராக பாவம் தோன்றச் சாகித்தியப் பகுதியை மடக்கி மடக்கிப் பாடுவதோ நிரவல் ஆகிவிடாது. ராக ஸ்வரங்களும், சாகித்திய அட்சரங்களும் இடையீடு இன்றி இணைந்து ஒலிக்க, அதே சமயத்தில் சாகித்தியம் சிதைவுறுமலும் ராக பாவமும் சாகித்திய பாவமும் தனித்து ஒலிக்காமல், இழைந்து குழைந்து ஒலிக்கும்படி, ஞானமும் லயப் பிரக்ஞையும் தோன்ற விஸ்தாரமாகப் பாடப் பெறுவதே நிரவல். ராகம் பாடுவது, கீர்த்தனம் பாடுவது, சுரம் பாடுவது என்றெல்லாம் சொல்லுமிடத்து 'நிரவல் பாடுவது' என்று சொல்வதில்லை. 'நிரவல் செய்வது' என்று சொல்வதுதான் வழக்கில் இருந்து வருகிறது. அது ஏன்? பாடுவது என்பது தயாராக இருக்கும் சமையலை எடுத்துப் பரிமாறுவது போல. செய்வது என்பது பொருள்களை வைத்துக்கொண்டு உணவு தயாரிப்பது போல. நிரவலில் ஞானம்-எல்லா

அம்சங்களிலும் நிறைந்த ஞானம் – வேண்டும். அதைப் பக்குவமாக வெளியிடும் ஆற்றல் வேண்டும்.

"ஸ்வரம் பாடுவதிலும் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய ஓர் அம்சம் உண்டு. ஸ்வரங்கள் ஏழுதான். அவற்றை மாலைபோல் தொடுத்து அடுக்கடுக்காக வெளியிடும்போது கேட்பவர்கள் பரவச நிலை எய்துகிறார்கள். வெறும் ஏழு, ஏழு நூறாக, ஏழு ஆயிரமாக, இன்னும் அதிகமாக ரசிகர்கள் கருத்தில் பரிமாணம் பெறுகின்றன. ஆயினும் அவர்கள் உள்ளம் 'சோ' என்ற மழையின் நடுவே நிற்கும் மனிதனின் மனநிலையை எய்தினால்தான் ஸ்வரப் பிரஸ்தாரம் செய்பவருக்கு வெற்றி. சாரீரம், சுருதி, லயம், பாணி எல்லாம் உயர்வுடையனவானாலும் ஒரே ஓர் அம்சம் குறிப்பாகக் கவனித்துக் கையாளத் தக்கது. ஸ்வரம் தனித் தனியே 'பட் பட்' என்று தெறித்து விழலாகாது. ஒன்றுக்கு ஒன்று தாரணை உடையதாக இருக்க வேண்டும். 'சர்க்க'சில் 'பார்' வேலை செய்பவர் சுழன்று சுழன்று ஒரு கம்பியிலிருந்து இன்னொரு கம்பிக்குத் தாவுகிறார். மாறி மாறிப் பல கம்பிகளில் தாவிக்கொண்டே போகிறார். அப்போது ஒன்றை விட்டுத்தான் இன்னொன்றைப் பற்று கிறார். ஆனால் பார்க்கிறவர்களுக்கு அவர் விடுகிற சுவடும் தெரிவதில்லை, பிடிக்கிற சுவடும் தெரிவதில்லை. ஓர் இடத்தில் நின்று நிலைப்பதையே 'கார்வை' என்று பெரும்பாலும் குறிக்கப்படுகிறது. ஆனால் பாட்டில் மட்டுமன்றி, பேச்சு முதலிய ஒலி வடிவம் பெற்ற எல்லாவற்றிலுமே கார்வை என்பது உண்டு. ஆகவே ஒரு ஸ்வரத்தின் கார்வை, அடுத்துப் பிறக்கும் ஸ்வரத்தோடு உறவு கொண்டு இழைந்திருக்க வேண்டும். விட்டுப் போன உறவினரிடையே சௌஜன்யம் இராது. ஓர் இடத்தில் அவர்கள் சந்தித்தால் நாலு பேர் கொண்டாடத்தக்க முறையில் இருக்காது,

அவர்கள் சந்திப்பு, 'பட் பட்' என்று தொடர்பு அற்ற முறையில் பாடப் பெறும் ஸ்வரமும் இப்படித்தான் சோபை அற்றுப் போம்."

இவ்வாறு கூறிப் பந்துவராளி கிருதி ஒன்றின் சரணத்தில் நிரவல் செய்து, ஸ்வரம் பாடிக் காண்பித்தார். எல்லாரும் மிகுந்த மகிழ்ச்சிக்கு உள்ளானார்கள்.

## வில்லும் சொல்லும்

இதன் பின்னர் அவருடைய வாழ்க்கை வரலாற்றை நான் படிக்கத் தொடங்கினேன். அவர் உன்னிப்பாகக் கேட்கத் தொடங்கினார். அங்கங்கே ஆமோதிப்பும் திருத்தங்களும் புதிய குறிப்புக்களும் கொடுத்துக்கொண்டே வந்தார். அப்படிக் கொடுத்த புதிய குறிப்பினால் சில அத்தியாயங்கள் நீண்டன. அவற்றுள் 'யானைப் பரிசில்' என்ற அத்தியாயமும் ஒன்று. முன்னர்க் கிடைத்த செய்திகளைக் கொண்டு நான் அதை மிகச் சுருக்கமாக எழுதி இருந்தேன். அதைக் கேட்டு அவர் மெல்ல நகைத்தார்.

"காசிக்குப் போனான், கங்கையைக் கொணர்ந்தான் என்பது போல ரத்தினச் சுருக்கமாக அமைந்திருக்கிற இந்த அத்தியாயத்துக்குள் இன்னும் பல விவரங்கள் இருக்கின்றன" என்றார். விரிவாகச் சொல்லுமாறு நாங்கள் அனைவரும் கேட்டோம். அவர் சொன்னார். அப்படிச் சொல்லும்போது சிலேடையாகவும் ஹாஸ்யமாகவும் பல சொற்களைக் கையாண்டார்.

"ஓஹோ! நீங்கள் வில்லைத்தான் மிகப் பிரமாதமாக ஓட்டுவீர்கள் என்று நினைத்தேன்; சொல்லையும் வெகு லாகவமாகப் பிரயோகிக்கிறீர்களே!" என்றார் கி. வா. ஜ. அவர்கள். எல்லாரும் அதை மிகவும் ரசித்தார்கள்.

மாலை ஆறு மணி வரையில் பொழுது போனதே தெரியவில்லை. அதற்கு மேல் பிள்ளை அவர்கள் விடை பெற்றுப் புறப்பட்டார். அந்த நாள் என் வாழ்க்கையில் மறக்க முடியாத ஒரு நல்ல நாள்!

## அருள் மனம்

சந்தர்ப்பம் கிட்டுகிறபோதெல்லாம் பிறருக்கு உதவுவதில் கருத்து உடையவர் ராஜமாணிக்கம் பிள்ளை. முக்கியமாக முன்னுக்கு வரக்கூடிய குணங்குறிகளை உடைய இளம் பாடகபாடகிகளைத் தகுதி அறிந்து ஊக்கி, அவர்களுக்கு உற்சாகமூட்டி, வேண்டிய உபதேசங்களைச் செய்து கை தூக்கி விடுவதைத் தம் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டவர். அந்தச் செயலில் அவருக்குப் பெரும்பாலும் வெற்றி உண்டு. இளைஞர்களிடம் குறை கண்டால் அதைத் திருத்தாமல் விட அவருக்கு மனம் வராது. அப்படித் திருத்துகிறபோது அவர்கள் உள்ளம் புண்படாது கண் காணித்துக்கொள்வதில் அவர் மிகவும் சமர்த்தர். அதே மாதிரி, முன்னேறி வருகிற வித்துவான்களுக்குப் பக்க வாத்தியம் வாசித்து உதவுவதிலும் மிகுந்த ஆர்வம் உடையவர். அன்று தொடங்கிய இந்த நற்பணியில் அவர் இன்றுங் குன்றாத ஊக்கம் உடையவராகவே விளங்குகிறார். அது மட்டும் அல்ல; வயதிலோ, கலையம்சத்திலோ குறைவு உடையவர்களையும் அவர் உள்ளம் குறைத்து மதிப்பிடுவதில்லை; அவர்களை அவர் அன்புடனும் மரியாதையுடனும் நடத்துகிற உயர்வு மிகமிகப் பாராட்டத் தக்கது. மேலும் இளைஞர்களுக்குக் கலை நுணுக்கங்களைப் போதிக்கிற போதே இடையிடையே தக்க உவமான உவமேயங்களைக் கூறி மரியாதை, பக்தி, ஊக்கம் முதலிய பண்புகளைப் புகட்டுவதிலும் அவர் மிகத் தேர்ந்தவர். எங்காவது,

எப்போதாவது தகுதியுடைய இளம் வித்துவான்களின் திறனைக் கண்டால் அதை மனத்தில் பதிவு செய்துகொண்டு தக்க சந்தர்ப்பம் கிட்டுகிறபோது போராட்டம் நிகழ்த்தி யாவது அத்தகையோருக்கு ஆதரவு தேடித் தரும் அருள் மனம் படைத்தவர் அவர்.

## ஆதரவு

தம்முடைய அநுபவம் ஒன்றைக் கூறுகிறார் ஒரு சங்கீத வித்துவான்.

"ஒரே மனிதரிடம் எல்லா நல்லம்சங்களும் பொருந்தி இருப்பது மிகக் கடினம். ராஜமாணிக்கம் பிள்ளையின் நிலை அதற்கு விலக்கு. மனிதத் தன்மை, கலை ஆர்வம், ஆற்றல், நேர்மை, சொல்வன்மை, தூய்மை, உபகாரத் தன்மை, பெருமதி, சலனமற்ற மனப்பான்மை—இவற் றோடு மற்றும் பல நல்ல அம்சங்களும் நிறைந்தவர் ராஜ மாணிக்கம் பிள்ளை. முன்னுக்கு வரக்கூடிய அறிகுறி எவரிடம் இருந்தாலும் அத்தகையோரை ஆதரித்து அவர் கள் மேலுக்கு வரத் தம்மால் இயன்றதை எல்லாம் செய்ய அவர் பின்வாங்கவே மாட்டார்.

"காஞ்சீபுரத்தில் ஒரு வைபவம். அங்கே பிரபல வித்துவான்களின் கச்சேரிகள் நிகழ்ந்தன. இடையே எனக்கும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. அப்போது நான் மிகச் சிறு வயது உடையவன். என் தந்தையாரின் அரு ளாசியால் ஓரளவு இசை ஞானத்தைப் பெற்றிருந்தாலும் பெரியோர்கள் எதிரே பாட அஞ்சினேன். ஆண்டவன் அருளாலும் குருநாதர் ஆசியாலும் ஒருவாறு பாடிச் சமா ளித்தேன். கச்சேரிக்குப் பின் ராஜமாணிக்கம் பிள்ளை என்னை அழைத்து ஊர் பேர் வினவினார். பிறகு, 'நன்றாகப் பாடினீர்கள். ஞானம் இருக்கிறது. சாரீரம் இருக்கிறது.

பாடும் முறையும் நன்றாக இருக்கிறது. அக்கறையோடு அபிவிருத்தி செய்துகொள்ளுங்கள். தைரியமாகப் பாடுங் கள்" என்றார்.

"சில மாதங்களுக்குப் பின் எங்கள் ஊர்ப் பக்கத்தில் உள்ள பெருமொழிஞ்சி என்ற ஊரிலிருந்து கச்சேரி செய்ய வென்று எனக்கு ஓர் அழைப்பு வந்தது. கல்யாணக் கச்சேரி. அத்துடன் திருமண அழைப்பிதழும் இருந்தது. பெரிய பிரமுகர் வீட்டுக் கல்யாணம் என்று தெரிந்தது. நான் பிரமித்தேன். இது யாருடைய ஏற்பாடு என்று புரி யாமல் திகைத்தேன். பிரமிப்பையும் திகைப்பையும் மீறிக் கொண்டு சந்தோஷம் பொங்கிற்று. குறிப்பிட்ட நாளில் புறப்பட்டு அங்கே சென்றேன். அவ்விடத்தில் என் னுடைய நண்பர்கள் சிலரைக் கண்டேன். அவர்கள் மூலம் விவரம் அறிந்தேன்.

"அங்கே கல்யாணம் நடத்தும் பிரமுகருக்கு ராஜ மாணிக்கம்பிள்ளை நெருங்கிய நட்பு உடையவர். அந்தக் கல்யாணத்தில் முசிரி ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர், செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாச ஐயர் இவர்களில் ஒருவருடைய கச்சேரியை அமைக்க வேண்டும் என்று பிரமுகருக்கு விருப்பம். ராஜ மாணிக்கம் பிள்ளையிடம் கலந்து ஆலோசித்தார். அவர் சொன்னார்:

" 'நீங்கள் குறிப்பிடுகிற இரண்டு வித்துவான்களுக் கும் அந்தத் தேதியில் கச்சேரி இருக்கிறது. ஒருவருக்கு நானே வாசிக்கப்போகிறேன். ஆகவே நீங்கள் அவர்களில் எவரையுமே எதிர்பார்ப்பதற்கு இல்லை.'

" 'அப்படியானால் வேறு யாரை ஏற்பாடு செய்யலாம்? நீங்களே ஒரு யோசனை சொல்லுங்கள்.'

" 'சொல்கிறேன். ஆனால் நான் சொல்வது, யோசனையின் அளவிலேயே இருந்துவிடக்கூடாது. சொல்கிறபடி நடந்துகொள்ள வேண்டும்.'

" 'அப்படியே நடந்து கொள்கிறேன்.'

" 'நீங்கள் குறிப்பிட்ட வித்துவான்களின் கச்சேரிக்குச் செலவிடக்கூடிய தொகையில் இளம் வித்துவான்கள் இருவருடைய கச்சேரிகளைச் சிறப்பாக நடத்தி முடிக்கலாமே?'

" 'என்ன!'—

பிரமுகர் நிமிர்ந்து பார்த்தார்.

" 'ஏன்? ஏன் இப்படித் திடுக்கிட்டுப் போகிறீர்கள்? அது ஏதாவது செய்யத் தகாத காரியமா? பிரபலமான பெரிய வித்துவான்களுக்கே திரும்பத் திரும்பச் சந்தர்ப்பம் அளித்துக்கொண்டிருந்தால் முன்னேறி வரும் இளம் வித்துவான்கள் சந்தர்ப்பம் பெறுவது எப்போது? பெரிய வித்துவான்கள் கிடைக்க இருக்க, அவர்களை ஒதுக்கி இளம் வித்துவான்களை ஆதரிக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை. கலைக்கு உதவாத இளம் பிள்ளைகளைக் கண்மூடித்தனமாக ஆதரிக்கவேண்டும் என்றும் வற்புறுத்தவில்லை. பெரிய வித்துவான்கள் கிடைக்காத தருணத்திலாவது தகுதி உடைய இளம் வித்துவான்களை ஆதரிக்கலாமே என்பதுதான் என் வாதம்.'

"பிள்ளை அவர்கள் இவ்வளவு தூரம் ஆணித்தரமாக எடுத்துச் சொன்ன பிறகு பிரபு மறுத்துச் சொல்ல வகை ஏது?

" 'ஏற்றுக்கொண்டேன். மேலே ஆகவேண்டியவைகளுக்கு ஏற்பாடு செய்யலாம். நீங்கள் யார் யாரைக் குறிப்பிடுகிறீர்களோ சொல்லுங்கள்' என்றார்.

" 'களக்காடு ராம நாராயணன் என்று ஓர் இளைஞர்.'

"பிரபு இடை மறித்தார். 'களக்காடா.......?' என்று வியப்புத் தோன்றக் கேட்டார்.

" 'ஆமாம். எல்லாம் உங்கள் ஊர்ப் பேர்வழிதான். விவரம் விசாரித்தால் உங்களுக்குத் தெரிந்தவராகவும் இருக்கலாம். அதைப்பற்றிப் பின்னால் பார்ப்போம். அவர் காஞ்சீபுரத்தில் சில மாதங்களுக்கு முன் கச்சேரி செய்தார். நன்றாக இருந்தது. உமையாள்புரம் கல்யாண ராமையர் என்பவரும் சிறந்த தகுதி உடையவர். நாமக்கல் நரசிம்ம ஐயங்கார், தஞ்சாவூர் பொன்னையா பிள்ளை இவர்களிடம் குருகுல வாசம் செய்து முறையாக இசை பயின்றவர். இவர்கள் இருவரையும் முதல் நாளும் மறுநாளுமாகப் பாட ஏற்பாடு செய்துவிடலாம். இரு கச்சேரிகளுக்கும் வயலின் வாசிக்க என் மாணவன் மாயூரம் கோவிந்தராஜனைத் திட்டம் செய்துவிடலாம்' என்றார் ராஜமாணிக்கம் பிள்ளை.

"இந்த ஏற்பாட்டின்படி வந்ததுதான் எனக்கு அந்தக் கச்சேரி. முதல் நாள் உமையாள்புரம் கல்யாண ராமையரும் மறுநாள் நானும் அங்கே கச்சேரி செய்தோம். மாயூரம் கோவிந்தராஜ பிள்ளை இரு கச்சேரிகளுக்கும் பக்க வாத்தியமாக வயலினும் உமையாள்புரம் ஸ்ரீ கணேசையர் மிருதங்கமும் வாசித்துச் சிறப்பித்தார்கள்.

"ராஜமாணிக்கம் பிள்ளை தம் வாழ்நாளில் இப்படிச் செய்திருக்கும், செய்து வரும் நற்செயல்கள் மிகப் பல" என்று நன்றி உணர்வினாலும் மிகுந்த பக்தியினாலும் உள்ளமும் உடலும் ஒருங்கே சிலிர்க்கக் கூறுகிறார் சங்கீத கலா மாருதம் களக்காடு ராம நாராயண ஐயர்.

## நற்செயல்கள்

தமக்கென உரிமையுடன் கிடைத்த தம் மாமனாரின் சொத்து முழுவதையும் மாமனாரின் தம்பி பிள்ளைகளுக்கு மனமார வழங்கிவிட்ட பெருமகன் இவர். இவருடைய பேரன்பையும், பெருந்தன்மையையும் கணமும் மறவாத நிலையில் அவர்கள் வாராப்பூரில் சுகமே வாழ்ந்து வருகிறார்கள்.

ஆலயங்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளுக்கு அடிக்கடி ஆராதனை வழிபாடுகள் நடத்துவதில் இவருக்கு மிகவும் விருப்பம். தம் இல்லத்திலும் தம்மைச் சார்ந்தவர்கள் இல்லங்களிலும் எந்த வைபவம் நடைபெற்றாலும் முதற் காரியமாக ஆலய வழிபாடுகளை நிகழ்த்தச் செய்வார். அறிந்தவர் தெரிந்தவர்கள் நோய் நொடி என்றோ வேறு குறைகள் என்றோ தெரிவித்துக்கொண்டால் அவர்களை ஆலயத்திற்குச் செல்லும்படி விரட்டுவார். "அங்கே சென்று வழிபாடு செய்யுங்கள்; உங்கள் பிணி பறந்தே போகும்" என்பார்.

கும்பகோணம் நாகேசுவரர் ஆலயத்தில் அம்மன் சந்நிதியில் இவர் அமைத்து வைத்த சரவிளக்குகள் இன்றும் அமோகமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. துர்க்கை அம்மன் சந்நிதித் திருப்பணி இவருடையது; அந்தச் சந்நிதியிலே இவர் அமைத்துள்ள தீபம் ஜோதிமயமாய் ஜொலித்துக்கொண்டிருக்கிறது.

கும்பகோணம் நகரக் காங்கிரஸ் கமிட்டித் தலைவராகப் பல காலம் இவர் பணியாற்றி இருக்கிறார். ஆனால் அதன் மூலமும் சரி, வேறு எதன் மூலமும் சரி; எந்த முக்கியத் துவத்தையும் இவர் நாடியதே இல்லை.

திருச்சி ரேடியோ நிலையத்தில் 'பேனல்' நீதிபதிகளில் ஒருவராகப் பதவி வகித்து வருகிறார். நல்ல சங்கீதத்தையே மனமார வரவேற்றுத் தக்க முறையில் ஆதரவு அளிப்பதில் என்றுமே நாட்டமுடைய இவர் இந்தப் பதவி மூலம் ரேடியோவில் சிறந்த இசை, வளர்ச்சிபெறப் பாடுபட்டு வருகிறார்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை கும்பகோணத்தில் நடைபெறும் தென்னாட்டுப் பெருவிழாவான மகாமக உற்சவத்தின்போது அங்கே நிகழும் பொருட்காட்சிச் சாலையில் இசை விழாக்கள் சிறப்பாக வெற்றி பெற, இவருடைய ஒத்துழைப்பு எப்போதும் உண்டு.

திருவையாற்றில் ஆண்டுதோறும் நடைபெற்று வரும் தியாகப் பிரம்மோற்சவம் முன்பு பல சந்தர்ப்பங்களில் பல்வேறு பிரிவுகளாகப் பிளவுபட்டு நடைபெற்று வந்தது. சில சமயம் சில காரியங்கள் போட்டியின் உந்தலால் வெகுவாக முன்னேறிப் பிரமாதமான சிறப்பைப் பெற்று விடுவதும் உண்டு. என்றாலும் பிளவு பிளவுதானே? பிளவு உள்ள இடத்தில் அமைதி ஏது? பூசல்களைச் சற்றும் விரும்பாதவர் ராஜமாணிக்கம். வயலின் வித்துவான் மலைக்கோட்டை கோவிந்தசாமி பிள்ளையின் வழி பிரபல நாதஸ்வர வித்துவான்களான திருவீழிமிழலைச் சகோதரர்கள், சங்கீத மேதை சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர் வழியில் அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார், சங்கீத விதூஷி பங்களூர் நாகரத்தினம்மாள்—இப்படி மூன்று கூறுகள். ராஜமாணிக்கம் பிள்ளை பெரும் பிரயாசை எடுத்துக் கொண்டு சம்பந்தப்பட்டவர்கள் அனைவரையும் சந்தித்துப் பேசி மூன்றையும் ஒன்றாக்கிச் சமரசத்தை நிலவச் செய்தார்.

இந்தியாவெங்கும் இன்னிசை பரப்பி இணையற்ற புகழ் பெற்றுப் பாரத அரசினரால் 'பத்ம விபூஷணம்' என்ற சிறப்புப் பட்டம் அளித்துக் கொண்டாடப் பெற்ற சங்கீத விதூஷி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமிக்கும் ஸ்ரீ டி. சதாசிவத்திற்கும் திருமணம் நிகழ்ந்து, முதல் முறையாக அவர்கள் குடந்தைக்கு விஜயம் செய்தபோது, குடந்தை 'வாணி விலாச சபை', 'குடந்தை இசை வேளாளர் சங்கம்' இரண்டின் சார்பிலும் அவர்களுக்குச் சிறந்த வரவேற்பும் உபசாரமும் அளிக்கப் பெற்றன. அப்போது ராஜ மாணிக்கம் பிள்ளை அவர்களைக் கொண்டு சங்கத்தார், சபையார், மற்றுமுள்ள குடந்தைவாசிகள் ஆகியோர் ஸ்ரீமதி சுப்புலட்சுமிக்கு, 'இசை வாணி' என்ற சிறந்த பட்டத்தை அளித்துத் தங்கள் சந்தோஷத்தை வெளியிட்டுக் கொண்டார்கள்.

கலை நன்கு வளர்ந்து தழைத்தோங்க வேண்டும் என்பதில் ராஜமாணிக்கம் பிள்ளைக்கு அளவற்ற ஆர்வம். அதன் தூண்டுதலால் கும்பகோணத்தில் பல மாணவர் களுக்குத் தக்க வசதிகளைச் செய்துகொடுத்து இசைப் பயிற்சி அளிக்கும் பெருந் தொண்டை நிரந்தரமாகச் செய்து வருகிறார்.

# அபிப்பிராயங்கள்

ராஜமாணிக்கம் பிள்ளையின் உள்ளத்திலே உயர்ந்த அபிப்பிராயங்கள் பல பொதிந்து கிடக்கின்றன. சந்தர்ப்பம் கிட்டுகிறபோதெல்லாம் அவர் அவற்றை வெளியிடத் தவறுவதில்லை. கலையிலும் வாழ்க்கையிலும் நீண்ட நாளைய அநுபவ முதிர்ச்சி பெற்ற அவருடைய அபிப்பிராயங்கள் மிகவும் பயன் உடையனவாகும்.

## அழியாத செல்வம்

"கர்நாடக சங்கீதம் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன? உங்களுக்கு முந்தின தலைமுறையில் அதன் நிலை என்ன? உங்கள் காலத்தில் ஏற்பட்ட மாறுதல் என்ன? அடுத்த தலைமுறையில் நீங்கள் காண்பது என்ன?"

இந்தக் கேள்விக்கு அவர் அளிக்கும் விடை:

"கர்நாடக சங்கீதம் புனிதத் தன்மையை இழந்து வருகிறது என்ற குறைமொழி சில சமயம் என் காதில் விழுந்தது உண்டு. இதை நான் ஏற்க மாட்டேன். எந்தக் காலத்திலும் எந்த ஒன்றும் தானகக் கெட்டுப் போவதே இல்லை. மரம் சாய்ந்துவிடும்போல் இருந்தால், 'சாய்கிறதே! சாய்கிறதே!' என்று சொல்லிக்கொண்டு, அது சாய்வதைப் பார்த்துக்கொண்டு, அண்மையில் நின்றிருப்பது சரி அன்று. சட்டென்று கை கொடுத்துத் தாங்க வேண்டும். தனிமையில் முடியாவிட்டால் துணைவர்களைச் சேர்த்துக் கொண்டு தாங்க வேண்டும். காற்று மரத்தைச் சாய்க்க முயலலாம்; அறிவும், பலமும் அதனைத் தடுத்து நிறுத்தி

விட முடியும். காலம் கர்நாடக சங்கீதத்தின் மேன்மையைக் குறைக்க முயன்றால் அறிவிற் சிறந்த கலைஞர்கள், ரசிக மேதைகளின் துணைகொண்டு காப்பாற்றி விடுவார்கள்.

## கலையின் நிலை

"இரண்டாவதாக, கர்நாடக சங்கீதத்திற்கு முன்பெல்லாம் இருந்த ஆதரவு இப்போது இல்லை என்று ஒரு குறைபாடு. இதுவும் சரியல்ல. முன்பெல்லாம் மகா ராஜாக்கள், ஜமீன்தார்கள், வள்ளல்கள் மட்டுமே கலையை ஆதரித்தார்கள். இடைக்காலத்தில் ஊருக்கு ஊர் வாழ்ந்து வந்த தொழிற் பிரமுகர்களும், மிராசுதார்ப் பிரபுக்களும், கலையில் உள்ள சுவையாலும் கலையை ஆதரிக்க வேண்டுமென்ற பரந்த நோக்கத்தாலும், ஒரு சிலர் பெருமையை உத்தேசித்தும் (ஆக எந்த வகையாலோ கலையை) ஆதரித்தார்கள். எனவே இடைக்கால ஆதரவு இரட்டிப்பு மடங்கு. இன்றோ, எங்கே திரும்பினாலும் சங்கீத சபைகள், இன்னிசை விழாக்கள், மற்றும் பல அரிய நிகழ்ச்சிகளில் இசை அரங்குகள். இவ்வளவோடு அரசாங்கத்தாரும் கலைகளைப் போற்றி வளர்க்கத் தொடங்கி இருக்கிறார்கள். இந்தத் தலைமுறையினர் பாக்கியசாலிகள். அடுத்த தலை முறைகளில் வாழ்பவர்கள் அதியோகசாலிகள், என்பதில் தடையே இல்லை.

## தரம் குன்றாது

"மூன்றாவதாக, வட இந்திய சங்கீதம், மற்றும் உருப் புரியாத நூதனம் ஆகியவை கலந்து கர்நாடக சங்கீதத்தை நிலை குலையச் செய்கின்றன என்பது ஒரு முறையீடு. இதில் ஓரளவு உண்மை இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள் கிறேன். ஆனால் இரும்பைக் கறையான் அரிப்பது எவ்வளவு

உண்மையா, எளிதோ, அதைப் போன்றதுதான் கர்நாடக சங்கீதத்தை மற்ற சக்திகள் அழிக்க முயல்வதும். நூதனம் கலந்து பரவுவது என்பது இன்று ஏற்பட்டதன்று. இப்போது அதன் ஆட்சி சற்று வலுப் பெற்றிருக்கிறது என்று வேண்டுமானால் கொள்ளலாமே தவிர அதன் ஆதிக்கம் தலையெடுத்துப் பல ஆண்டுகள் ஆயின. அதே சமயத்தில் கர்நாடக சங்கீதத்தின் சிறப்பும் வளர்ந்துதான் வருகிறது. ஆகவே எத்தனை நூதனத்தைப் புகுத்தினாலும் கர்நாடக சங்கீதம் கெடவில்லை; கெடாது. அதன் ஜீவனை மாறவில்லை; மாறாது. தரம் குன்றவில்லை; குன்றாது."

## வளரும் பயிர்கள்

"இளம் வித்துவான்களைப் பற்றித் தங்களுடைய அபிப்பிராயம் என்ன? வருங்காலத்தில் அவர்கள் சிறப் பெய்துவார்களா? அவர்களால் இசைக் கலை முன்னேற்றம் பெறுமா?"

அவருடைய பதில்:

"இந்த இடத்தில் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். மாறிச் சுழலும் கால நிலைக்கு ஏற்ப எல்லாவற்றிலுமே மாறுபாடுகள் தோன்றி வருகின்றன. அவற்றை எதிர்க்க முயல்வது வீண் பிரயாசையாக முடியும். எல்லாருமே காலத்தை ஒட்டிப் போவதுதான் உசிதம். அப்படிப் போகும்போது கூடுமான வரையில் நன்மை பாதிக்கப் பெறாதவாறு கண்காணித்துக் கொள்வது புத்தி சாலித்தனம். 'புராதனம், புராதனம்' என்று சொல்லிக் கொண்டிருப்பதில் பயன் கிட்டாது. உதாரணமாக, குரு குல வாச முறை பல பல காரணங்களால் அருகி வருகிறது. அதற்காக இசைப் பயிற்சி நிற்கிறதா? அங்கங்கே புதுப்

புதுக் கலைஞர்களின் தோற்றந்தான் குறைகிறதா? இல்லை. இந்நிலையில் சூழ்நிலைக்கேற்றவாறு மாணவ மாணவிகளை உயர்ந்த முறையில் முன்னேறச் செய்வதில் பொறுப் பெடுத்துக் கொள்வதுதான் யுக்தம். பெரியவர்கள், 'நமக் கென்ன?' என்ற மனோபாவத்தை ஒதுக்கிவிட்டு, இளம் வித்துவான்களைக் கருணையோடு அக்கறை காட்டி முன் னுக்குக் கொண்டு வருவது என்பது முன்னெல்லாம் நாட்டில் மலிந்திருந்தது. வர வர அதில் குறை ஏற்பட லாயிற்று. இன்று அங்கங்கே ஒரு சில பெரியவர்கள் அந்நிலையில், அதாவது இளம் வித்துவான்களை முன்னேற் றும் மனோபாவம் உடையவர்களாக வாழ்ந்து வருகிறார்கள். அது போதாது. எல்லாருமே அந்த முறையைப் பின்பற்ற வேண்டும்.

## முயற்சி வேண்டும்

"வித்தியார்த்திகள் பெரியவர்கள்மீது முழுப் பொறுப்பையும் சுமத்திவிட்டுக் காலத்தை வீணடிப்பதோ, 'ஏனோதானோ' என்ற முறையில், ஒழிந்த நேரத்தில், வழி முறைகளைப் புரிந்துகொள்ளாமல், பெயரளவில் பயிற்சியில் ஈடுபட்டு, கலை, குரு, மற்றும் உள்ள பெரியோர்கள் அனைவ ருக்கும் இழுக்குத் தேடி வைக்கக் கூடாது. முயற்சி வேண்டும்.

"வீணை வாத்தியத்தில் குறிப்பிடக்கூடிய சிறந்த புள்ளியாக முன்னேறி வருபவர் இளைஞர் ஸ்ரீ எஸ். பால சந்திரன். அவருடைய வயசு, படிப்பு, மற்றத் துறை களில் அவர் கொண்டுள்ள ஈடுபாடு முதலியவற்றோடு அவருடைய இசை ஆற்றலையும் சேர்த்து நோக்குமிடத்துப் பிரமிப்புத்தான் ஏற்படுகிறது. அதிலும், அந்த ஆற்றல்

மிக மிக உயர்வுடையதாக இருப்பது நாமெல்லாம் பெருமைப்பட வேண்டிய விஷயமாகும். அவர் கையில் வீணையின் அபூர்வமான சக்திகள் வெகு அநாயாசமாகப் பளிச்சிடுகின்றன. 'தெய்வத்தின் அருளை முன்னிட்டு இப்படி அபூர்வமாகச் சிலர் செயலாற்றுவது உண்டு' என்று சொல்லி விடுவது சுலபம். சும்மா இருப்பவரிடம் தெய்வத்தின் அருள் சுரக்காது. முயற்சி வேண்டும். பாலசந்திரன் தம்முடைய மேதையால் ஞானத்தை வளர்த்துப் பக்குவப்படுத்திக்கொண்டிருக்கிறார்.

## சகிப்புத் தன்மை வேண்டும்

"பிரயாசைப்பட்டுக் கலையைப் பயின்றுவிட்டால் மட்டும் போதாது. அப்புறம் அதைப் பிரகாசிக்கச் செய்ய அரும்பாடு பட்டாக வேண்டும். பயிற்சிக் காலத்தில் பல பல சோதனைகள் குறுக்கிடுவது போலவே அரங்கில் வந்து செயலாற்றத் தொடங்குகிற காலத்தும் கடுமையான சோதனைகள் முன் நிற்கும். அவற்றைச் சமாளிக்க அளவு கடந்த சகிப்புத் தன்மை வேண்டும்.

"பொறுமையும் சகிப்புத் தன்மையும் ஒரே இனந்தான் என்றாலும் இரண்டின் தன்மைகளிலும் தாரதம்மியம் மிக உண்டு. சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருப்பது, சாதாரண விஷயங்களைத் தாங்கிக் கொள்வது முதலியன பொறுமை என்ற நிலையைச் சார்ந்தவை. கலை சம்பந்தமான நிந்தனைகள், பிழைகள் முதலியவற்றைப் பல்லைக் கடித்துப் பொறுத்துக் கொள்வது சகிப்புத் தன்மையைச் சார்ந்தது.

"நான் இதில் முழுகி எழுந்தவன். மேடை ஏறின புதிதில் என் செயலில் யாராவது ஏதாவது குற்றம் சொன்னால் உடனே அவர்களிடம் போர் தொடங்க மாட்டேன்.

குறை சொன்னவர்கள் எக்காரணங் கொண்டு சொன்னாலும், அதை நல்ல முறையிலேயே வரவேற்று நம் செயலில் குறை எங்கே என்று தேடுவேன். கிடைத்தால் திருத்திக் கொள்வேன். குற்றஞ் சொல்பவர்கள் நம் முன்னேற்றத்தின் உறுதுணையாளர்கள் என்று கொள்ள வேண்டுமே தவிர அவர்களிடம் பகைமை பாராட்டலாகாது; கோபத்திற்கு இடங் கொடுக்கக் கூடாது. கோபம் ஆரோக்கியத்தைப் பாதிக்கும், ஆயுள் வளர்ச்சியைத் தடைப்படுத்தும், செயல்களில் அதிகமான குறைபாடுகளைத் தோன்றச் செய்து நாலு பேர் சிரிக்க வைத்துவிடும். கோபமே மனிதனின் முதல் விரோதி.

"கலையாற்றலில் ஓரளவு தேர்ச்சி பெற்றவர்களும் சகிப்புத் தன்மையைப் பயில வேண்டியது அவசியம். மேடை நிகழ்ச்சியிலே கூட்டாளிகளாக உள்ள எல்லாருமே குறை அற்றவர்களாக இருந்துவிட முடியாது. எங்காவது ஏதாவது குறை தென்படும். அப்போது செவிடு போலவும் குருடு போலவும் இருப்பது மிக மிக உயர்ந்த செயல். மாறாக, அவையோர் பக்கந் திரும்பி முகத்தைச் சுளித்தால் குற்றம் புரிந்தவர்களைக் காட்டிக் கொடுத்த பாவம்; பிழை செய்தவர் பக்கந் திரும்பி முகம் சுளித்தாலோ அவர் மனம் புண்படும். கொஞ்ச நஞ்சம் அவரிடம் இருக்கிற சிறப்புகளும் உடனே நலிந்து போம். தவிர, அவ்வாறு முகஞ் சுளுக்குபவர் நாளடைவில் எல்லாராலுமே 'ஒருமாதிரி' யாகக் கருதப் பெறுவர். ஆகவே எவ்வகையிலும் சகிப்புத் தன்மை மிக மிக அவசியம்.

## மேடை நிகழ்ச்சியில்

"மேடையில் அமர்ந்து செயல் ஆற்றுகிற கலைஞன் பளிச்சென்று தேய்த்து ஏற்றி வைத்த குத்து விளக்கைப்

போல் சுடர்விட்டுப் பிரகாசிக்க வேண்டும். அழுக்கடைந்த கை விளக்கைப் போல் இருக்கக் கூடாது. கலைஞனின் பார்வை அவையில் உள்ள ரசிகர்களின் பக்கமே இருக்க வேண்டும். பூமியிலோ மற்ற இடங்களிலோ செல்லலாகாது. பார்வை மூலம் கலைஞர்களுக்கும் ரசிகர்களுக்கும் இடையே, செயலாற்றுகிறபோது ஏற்படுகிற தொடர்பினல் கலைஞர்களுக்குப் பல நன்மைகள் உண்டு. ரசிகர்கள் எந்த அம்சத்தை நன்றாக ரசிக்கிறார்கள் என்பதை உணர்ந்து, பின்னர் அந்த அம்சத்தை, அம்மாதிரி அம்சங்களை மேலும் நன்றாக அபிவிருத்தி செய்துகொள்ளலாம். அதே மாதிரி ரசிகர்கள் எந்த அம்சத்தை வெறுத்து முகம் சுணங்குகிறார்கள் என்பதைத் தெரிந்து பிறகு அத்தகைய அம்சங்களை நீக்கித் தங்கள் கலையில் உயர்வு மட்டுமே நிலைத்திருக்கச் செய்யலாம். தவிர, சாமானியமான இடத்தைச் சுமாராக ரசிக்கும் ரசிகர், செயல் புரியும் வித்துவானைப் பார்த்தபடி ரசிக்கிறபோது, சற்று அதிகமாகவே ரசிப்பார். அதைப் பார்த்து மற்றவர்களும் அவரைப் பின் பற்றுவர். இதனல் கலைஞருக்குப் பெருவாரியான ஆதரவு சேரும். இதேபோல, குறை தோன்றும் இடத்து ஏற்படக்கூடிய கண்டன பாவமும் அளவில் குறையும். ஆக, இரு வகையிலும் கலைஞர்களுக்கு நன்மை உண்டு.

"'செட்டியார் மிடுக்கோ, சரக்கு மிடுக்கோ' என்று ஒரு வசனம் உண்டு. கலைஞர்களைப் பொறுத்த வரையில் இரண்டு அம்சங்களிலுமே 'மிடுக்கு' வேண்டும். ஆற்றல் சுமாராக இருந்தாலும், பவ்வியம், சரள பாவம் முதலிய அம்சங்களினல் ரசிகர்களின் உள்ளத்தைக் கவர்ந்து மேலுக்கு வரும் வழியைத் தேடுவது போலவே மேடையில் அமர்ந்து செயல் ஆற்றுகிற

போதும் முக்கியமான சில வழிகளை ஆளவேண்டியது அவசியம். அவற்றுள் மேலே குறிப்பிட்ட பார்வை அம்சமும் ஒன்று. அடுத்து, மேடையில் அமரும் முறை. நிமிர்ந்து அமரவேண்டும். நிரடான இடங்களை ஆளும் போதும் முகமலர்ச்சியில் குறைவு தோன்றலாகாது.

'ஆற்றலில் இவர் இப்போது மிகுந்த சிரமத்தை அநுபவிக்கிறார்' என்று பிறர் கருத இடந்தரவே கூடாது. கண்ணை மூடிக்கொண்டும் முகத்தைத் தாழ்த்திக் கொண்டும் செயலாற்றினால், செயல் மிகப் பிரமாதமாக இருந்தாலும் கலைஞர்களின் பராமுகமும் சேட்டைகளும் அவர்களுடைய உயர்ந்த ஆற்றலையும் சோபை அற்றதாக ஆக்கிவிடும்.

"எடுப்பான உடல் அமைப்பு ஆண்டவனின் அருளால். கலையாற்றலில் மேன்மை மனிதனின் உழைப்பால்; பரிமளிப்புக்கான மற்ற அம்சங்கள் புத்தியின் சக்தியால். ஆக, உயர்ந்த கலைஞர்களாகப் பிரகாசிக்க விரும்புகிறவர்கள் கலையோடு ஒட்டிய ஒவ்வோர் அம்சத்திலும் நன்கு கவனத்தைச் செலுத்த வேண்டும்; எப்போதும் விழிப்புடன் இருக்கவேண்டும். எந்த ஒரு சிறு விஷயத்திலும் அலட்சியம் உதவாது. கலையில் பக்தி வேண்டும். பக்தியோடு கலையை உபாசிக்கிறவர்களிடம் அயர்ந்து மறந்தும் அலட்சிய புத்தி தலை நீட்டாது. அதனால் கலையின் உயர்வுக்கேற்ற சிறப்பம்சங்கள் அத்தகையோரிடம் நாளடைவில் சிறுகச் சிறுகச் சேர்ந்துவிடும். அவர்கள் சிறந்த கலைஞர்களாகத் திகழ்வார்கள் என்பதில் தடையே இல்லை.

"நான் மேடை ஏறின நாள் முதல் இன்றளவும் மேற் கூறிய அம்சங்களைக் கடைப் பிடிப்பதில் கூடிய வரையில்

கண்ணும் கருத்துமாக இருந்திருக்கிறேன். கலை உபாசனையில் பக்தி, மேடை நிகழ்ச்சியில் விழிப்புடன் கூடிய நிலை, முகமலர்ச்சி, அவையோருடன் பார்வைத் தொடர்பு, சக கலைஞர்களோடு ஒத்துழைப்பு—முதலியவற்றில் என்றுமே எனக்கு நிறைந்த கருத்து உண்டு. சக கலைஞர்களும் ரசிகர்களும் விமரிசகர்களும் முழு மனத்தோடு ஆதரித்து அன்பு செலுத்தினால்தான் கலைஞன் கலைவாழ்க்கையில் சோபிக்க முடியும்; அதனால் தனி வாழ்க்கையிலும் சுகம் பெற முடியும்.

## சரியான விமரிசனம் வேண்டும்

"**வி**மரிசனம் சிறந்த கலை. அதன் சக்தி மகத்தானது; ஆக்கம், அழிவு இரண்டையும் செய்ய வல்லது. நம் நாட்டில் அது சீரான நிலையில் இல்லை. இன்றுமட்டுமல்ல; துர்ப்பாக்கியவசமாக நீண்ட காலமாகவே அந்தக் கலை இங்கே முழு உருப் பெறவில்லை. ஒன்று, 'ஓகோ' என்ற பாராட்டு; அல்லது, 'மோசம், மோசம்' என்ற வசை புராணம். இரண்டுமே சரி அன்று. முன்னுக்கு வந்து பிரகாசித்துக்கொண்டிருப்பவர்களைத் திரும்பத் திரும்பப் புகழ்வதைக் குறைத்துக்கொண்டு முன்னுக்கு வரத் துடி துடிக்கும் இளம் கலைஞர்களிடம் உள்ள திறமையை அளவிட்டுக் கூறி நாடறியச் செய்வதில் நலம் உண்டு. சிறப்பு இருந்தால் அதை உள்ளபடி கூற வேண்டும்; குறை இருந்தால் அதை மறைமுகமாகக் கண்டிக்க வேண்டும். பாராட்டு, கண்டிப்பு இரண்டும் எங்கே கலந்து காண்கின்றனவோ அங்கேதான் உண்மையும், உயர்வும் உயிர்பெற்று வளரும். இளம் வித்துவான்களிடம் அன்பாக நடந்து கொண்டு மனம் புண்ணாகாதவாறு குறைகளைக் கண்டித்து அரவணைத்து ஆதரித்தால் அவர்கள் செயலில் நாளடைவில்

சிறப்பைக் காணலாம். 'நமக்கு நல்ல சந்தர்ப்பம் இருக்கிறது; அதற்குத் தக்கபடி நம்மிடம் உள்ள கலையை வளர்த்துக்கொள்ள வேண்டும்; நற்பண்புகளைப் பெருக்கிக் கொள்ள வேண்டும்' என்ற எண்ணம் இளம் வித்துவான்களின் உள்ளத்திலே ஒருபோதும் சோர்வடையக் கூடாது. 'நமக்கு நல்ல பலம் இருக்கிறது; நம்மிடம் உள்ள கலையும் பண்பும் குறைவு உடையனவாக இருந்தாலும் பரவாயில்லை' என்கிற நினைவு தலை நீட்டவே கூடாது. இத்தகைய முறையில் அவர்களைக் கொண்டு செலுத்துவது கலைப் பெரியோர்கள், ரசிக மேதைகள், விமரிசகர்கள் ஆகியோரின் கடமையாகும்.

இப்படி, குரு, மாணவர், பெற்றோர், பெரியோர், கலை அறிஞர்கள், ரசிக மேதைகள், விமரிசகர்கள் அனைவரும் ஒன்று கூடிக் கலையின் வளர்ச்சி ஒன்றையே நாடி அதற்காகப் பாடுபட்டால் விளையும் பயிர்கள் நன்கு வளர்ந்து நல்ல பலனைத் தரத் தடை என்ன?"

## நலமும் கேடும் நம் வசப்பட்டவை

"நாடகம், சினிமா முதலியவற்றால் நலமா, கேடா?"

"நலம், கேடு இரண்டுமே நம் கைவசப்பட்டவைதாம். நாடகத்திலோ, சினிமாவிலோ கதை அம்சம், உடை அம்சம், இசை அம்சம், நடிப்பு அம்சம் முதலியன சிறந்தனவாக, நோக்கம் நல்லனவாக இருந்தால் நாட்டுக்கு நலம்தான். அத்தகைய செயலைப் பாராட்டி வளர்க்கலாம். மாறாக உள்ளவற்றை நாம் நம் அறிவைக் கொண்டு சீர்தூக்கி அறிந்து புறக்கணித்துவிட்டால் கெட்டது ஆதரவற்று நாளடைவில் அழிந்துவிடும்; நல்லது மட்டுமே நிலைத்து நிற்கும்.

"பேச்சுக்கூட அப்படித்தான். கூடுமான வரையில் கெட்ட பேச்சுக்களை ஒதுக்க வேண்டும். உபயோக மற்றவை, துவேஷத்தைத் தூண்டுபவை, பிறரை இகழ் பவை, ஒழுக்கத்தைப் பாதிப்பவை ஆகியவற்றைப் புறக் கணிக்க வேண்டும். நல்ல பேச்சுக்களில் எனக்குச் சுவை உண்டு. அதிலும் மறை பொருளாக, நகைச் சுவை ததும்ப யார் பேசினாலும் விருப்பத்தோடு செவி சாய்ப்பது உண்டு. எதுவும் நல்ல அம்சமாக இருப்பதே நலம்.

## உயர்வு எங்கே?

"**மே**லும், ஜாதி, மதம் என்பன போன்ற பூசல்கள் பொருள் அற்றவை. என் வாழ்நாளில் எனக்குப் பெரும் பாலும் தொடர்பு உள்ளவர்கள் அந்தணர்களே. வயலின் குருபரம்பரைப் பெரியோர்கள், தொழில் முறையில் ஆதரவு அளித்த பிரமுகர்கள், தொழில் துறையில் ஈடுபாடு உடைய வித்துவான்கள், ஞானம் வளர எனக்கு உதவிய சங்கீத மேதைகள், நெருங்கின நட்புடன் நான் பழகுபவர் கள், என்னிடம் குருகுல வாசம் செய்ய வந்த மாணவர்கள் ஆகியோரில் பெரும்பான்மையோர் பிராம்மணர்களே. எங்கள் அன்பையும் நட்பையும் பரஸ்பர மதிப்பையும் மேற்குறித்த பூசல் குறுக்கிட்டுத் தடுத்து நிறுத்தவில்லை. பிறப்பினால் உயர்வு தாழ்வுகளை வரையறுப்பது சரியன்று. நேர்மை உள்ளவர்களும் புத்திசாலிகளுமே பிரத்தியட்ச தெய்வங்கள். தூய உள்ளமும் நல்ல ஒழுக்கமும் உடைய வனே பெரியவன். அத்தகையோரை நான் சிரந் தாழ்த்தி வணங்குகிறேன்.

## லலித கலைகள்

"**ல**லித கலை உயர்ந்ததுதான்; ரசிகர்களுக்கு மிகமிக இன்றியமையாததுதான். ஆனால் அதில் ஓரளவாவது பாகு

பாடு வேண்டும். உதாரணமாக இசைக் கலை இருக்கிறது. அதில் விவகாரம் கூடுமா, கூடாதா என்பது ஒரு கேள்வி. விவகாரம் இருப்பது நலமே என்பது என் அபிப்பிராயம். ஆனால் எப்படி? சம்பிரதாய விரோதமாக, இசைக் களத்தைப் போர்க் களமாக்கும் முறையில், ரசிகர்கள் வெறுப்புக் கொள்ளும் நிலையில், கரடுமுரடான வழியில் புரியும் விவகாரம் வேண்டவே வேண்டாம். இசையோடு ஒட்டினதாக, அமைதிக்குப் பங்கமில்லாத முறையில், சாமான்யரும் புரிந்துகொண்டு ரசிக்கத்தக்க வகையில் லலிதமாக ஆற்றப் பெறும் செயல் வரவேற்கத் தக்கது.

"அதே மாதிரி, நடனக் கலையில் பெண்கள் பருவம் அடைந்த பின்னரும் திருமணம் ஆகாமல் ஆடுவது விரும்பத் தக்கதல்ல. மொத்தத்தில் நம் பண்பினால் நல்ல கலைகளை வளர்க்க வேண்டும்; அக்கலைகளினால் நற்பண்புகள் மேலும் மேலும் வளர வேண்டும்"—இவ்வாறு கூறிவிட்டு விலை மதிப்பற்ற ஒரு புன்னகையைப் புரிந்தார் ராஜமாணிக்கம்.

# இயல்புகள்

இயல்புகளில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவை மனிதத் தன்மையை உயர்த்திக் காட்டும் நடவடிக்கைகள். ராஜமாணிக்கம் உயர்ந்த நடவடிக்கைகள் உடையவர். அவருடைய உள்ளத்திலே நிறைந்து கிடக்கும் பல்வேறு எண்ணங்களைப் பற்றி உண்மையாக அறிந்தவர் அபூர்வம். அப்படி அவர் தம் இருதயத்தை மூடி மறைத்துக்கொண்டு உலகத்தோடு ஒட்டிப் பழகி வருகிறார். விருப்பு, வெறுப்பு முதலிய உணர்ச்சிகளுக்கு அவர் உள்ளத்திலும் இடம் உண்டு. ஆனால் அவற்றைப் பிறர் அறியவே முடியாது. பிடிக்காதவர்களைப் பார்க்கிறபோதும், அவர்களோடு பேசுகிறபோதும், பழகுகிறபோதும், தொழில்துறையில் ஈடுபடுகிறபோதும் அவர் உள்ளத்து உணர்ச்சியின் நிழலை கூட வெளியே தலை நீட்டாது. மாறாக, அத்தகையோரிடம் அனைவரினும் அதிக அன்பு உடையவர் போலவே நடந்து கொள்வார். இப்படி ஒருநாள் அல்ல, சில நாள் அல்ல; அரை நூற்றாண்டுக்கு அதிகமான காலத்தை இவ்வாறு ஓட்டியவர் அவர். இப்போது அவரே நினைத்தாலும் அத் தகைய இயல்பிலிருந்து அவர் தம்மை மாற்றிக்கொள்ள இயலாது. அந்த அளவுக்கு அவரிடம் ஊறி நிலைத்து விட்டது அந்த இயல்பு. இதனால் அவர் அடைந்துள்ள நன்மை: 'ராஜமாணிக்கத்திற்கு வேண்டாதவர்களே இல்லை; ராஜமாணிக்கத்தை வேண்டாதவர்களே இல்லை' என்று உலகம் ஒரு முகமாக, உறுதியாகக் கூறுவதுதான். இது சாமானியமான விஷயம் அன்று; லகுவில் அனைவருமே

பழகிக்கொண்டு விடக் கூடியதன்று; ஆனால் அவசியம் அனைவரும் பழகிக்கொள்ள வேண்டிய ஒன்று.

'நம்மிடம் உள்ள கலைக்காக மற்றவர்கள் நம்மிடம் அன்பு செலுத்துகிறார்கள் என்று அவர்களை அன்பு முறையாலேயே இம்சிக்கலாகாது; அவர்களிடம் உள்ள பொருள்களை இலவசமாகப் பெறக்கூடாது'—இது அவர் கொள்கை.

'சங்கீத கலா மணிகள்' என்ற நூலை நான் விலை கொடுத்து வாங்கியிருந்தேன். அதில் ராஜமாணிக்கம் பிள்ளையின் வரலாற்றுச் சுருக்கம் வெளியாகியிருந்தது. அது அவருக்குத் தெரியாமல் இருந்தது. அவரைக் காணக் கும்பகோணம் சென்றிருந்தபோது அந்த நூலையும் கொண்டு போயிருந்தேன்.

"இது எனக்கு வேண்டுமே" என்றார் அவர்.

"எடுத்துக் கொள்ளுங்கள்" என்று புத்தகத்தை அவரிடம் நீட்டினேன். உடனே அவர் அதை வாங்கிக்கொள்ளவில்லை. "விலை என்ன?" என்று வினவினார்.

நான் சிரித்துக்கொண்டே, "நான் புத்தக வியாபாரி அல்ல" என்றேன்.

"அது எனக்கும் தெரியும். ஆனால் இதை நீங்கள் விலை கொடுத்துத்தான் வாங்கியிருப்பீர்கள் என்பதும் தெரியும். ஆகவே விலையைச் சொல்லுங்கள்."

"இரண்டு ரூபாய்."

அவர் பையனை அழைத்தார். பீரோவிலிருந்து இரண்டு ரூபாய் கொண்டு வரச் சொன்னார். அதை வாங்கி என்னிடம் கொடுத்துவிட்டுப் பிறகே புத்தகத்தைப் பெற்றுக் கொண்டார்.

"ஒருவரிடம் மிகுதியாய் உள்ள பொருள்களில் ஒரு சிறிது, அதுவும் தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில்

மற்றவர்கள் இலவசமாகப் பெறலாம். விலை கொடுத்து வாங்கிய பொருளேயோ, தமக்கென்று பிரயாசையுடன் தேடிய பொருளேயோ அப்படிப் பெறுவது சரி அன்று.

"நீங்கள் என்னிடமிருந்து அபூர்வமாக எப்போதாவது ஓரிருமுறை இசைத் தொண்டை இலவசமாக எதிர்பார்க்கலாம். அதேபோல உங்களிடமிருந்து நான் உங்கள் எழுத்துக் கலை சம்பந்தப்பட்ட செயல்களை எப்போதாவது எதிர்பார்க்கலாம். இதைவிட்டு, நினைத்ததை யெல்லாம், பார்த்ததையெல்லாம் ஒருவரிடமிருந்து மற்றவர் இலவசமாகப் பெறுவதென்பது விரும்பத்தக்க செயல் அன்று. தவிர, மற்றப் பொருள்களை விலை கொடுத்து வாங்க வேண்டும்; அல்லது இரவலாக வாங்கினால் நாணயமாகத் திருப்பித் தரவேண்டும் என்றெல்லாம் கருதி, அதன்படி நடந்துகொள்கிறபோது, புத்தக விஷயத்திலே மட்டும் அந்த நியதி நம்மிடையே இல்லாதது வருந்தத்தக்க விஷயம். இப்போது இதை என்னிடம் கொடுத்துவிட்டு நீங்கள் மறுபடி வேறு பிரதி வாங்கிக் கொள்ளும் சிரமத்தை உங்களுக்கு அளித்திருப்பதே அதிகம். 'ராஜமாணிக்கத்தைக் காணக் கும்பகோணம் சென்றேன்; இரண்டு ரூபாய் நஷ்டம்' என்று உங்கள் மனக் கணக்கில் பதிவு ஆகாமல் கண்காணித்துக் கொள்வது என் பொறுப்பு அல்லவா?" என்று கூறிச் சிரித்தார் அவர்.

மணம் மிகுந்த சந்தனம், அத்தர், புஷ்பம், வத்தி, பன்னீர், தைலம்—முதலிய வாசனைப் பொருள்களுக்கும், கொழுந்து வெற்றிலை, கொட்டைப் பாக்குச் சீவல், வாசனைப் புகையிலை முதலிய உல்லாசப் பொருள்களுக்கும் பெயர் போன ஊர் கும்பகோணம். அங்கே பிறந்து வளர்ந்து வாழ்ந்து வரும் ராஜமாணிக்கம் பிள்ளை சிறப்பான

எதையும் நன்கு ரசித்து அநுபவிக்கும் சுகபுருஷராக இருப்பதில் வியப்பு ஏதும் இல்லை. உடல், உடை, இருப்பிடம், ஆளும் பொருள்கள் அனைத்தையும் மிகவும் சுத்தமாக, துப்புரவாக வைத்துக் கொள்வதில் அவருக்கு விருப்பம் அதிகம். இசையிலும் விவசாயத் தொழிலிலும் மோகம் அதிகம். நல்ல தயிர், நெய், பால், சத்துள்ள காய் கறிகள், முருங்கைக்காய் சாம்பார், உருளைக்கிழங்குக் கறி முதலியவற்றில் அவருக்கு விருப்பம் அதிகம். உணவுப் பொருள்கள் சுசி ருசியாகத் தயாரிக்கப் பெற்றவை என்றால் அவருக்குப் பெரு மகிழ்ச்சி. 'உணவு பசிக்காக மட்டும் அல்ல; யாக யக்ஞங்களைப் போன்ற ஒரு புனிதமான செயல் உணவு கொள்வது. அதில் சுசி, ருசி, பயம், பக்தி எல்லாமே மிக அவசியம்' என்பது அவர் கருத்து.

அவருக்குத் தமிழில் ஆர்வம் அதிகம். "பழைய சாகித்தியங்களில் பல மிகச் சிறந்தவை. புதியனவாக உருவாகிக் கொண்டிருப்பவற்றிலும் சிறப்பம்சங்கள் இருக்கின்றன. சங்கீதம், சாகித்தியம் இரண்டையும் நன்கு அறிந்தவர்கள் இயற்றும் சாகித்தியங்களே மிகச் சிறப்பைப் பெறும் என்பது என் அபிப்பிராயம். அத்தகைய சாகித்தியங்களே எனக்குப் பிடித்தவை"-என்கிறார் அவர்.

பிறருக்கு உதவி செய்வதில் பிள்ளை அவர்களுக்குப் பேரின்பம். உதவி நாடி வரும் உறவினர், நண்பர்களுக்கு அவர் இல்லை என்றதே இல்லை. ஜன சமூகத்திற்கு உதவுவதிலும் மிகுந்த விருப்பம் உண்டு. அவர் மனத்தில் மருத்துவத் துறைக்கு அல்லது கல்வித் துறைக்கு உதவ வேண்டும் என்கிற ஆசை புதைந்து கிடக்கிறது.

அவருக்கு வாத்தியங்களில் மிகப் பிடித்தது கோட்டு வாத்தியம். அது, கோட்டு வாத்திய மேதை சகா ராமராவ்

அவர்களிடம் உயர்தரமான முறையில் அந்த வாத்தியத்தை அதிகமாகக் கேட்டதன் விளைவாக இருக்கலாம். தாள வாத்தியங்களுள் அவருக்கு மிகப் பிடித்தமானது சாஸ்திரீய அடிப்படையில் தோன்றிய மத்தள வாத்தியம்தான்.

அனைத்திலும் அவருக்கு மிகப் பிடித்தவை நெஞ்சிலே தூய்மை, பார்வையில் நேர்மை, நடத்தையில் நல்ல ஒழுக்கம், பேச்சில் புத்திசாலித்தனம், செயலில் மேன்மை, கடவுள் பக்தி, தேசப் பற்று—ஆகியன.

இப்போது அவர் அறுபதாவது படியில் அடி வைத்திருக்கிறார். இன்றும் அவரிடம் கலையின் சக்தி வாலிப மிடுக்குடன் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. வாழ்க்கையில் மிக அவசியம் என்று சொல்லக்கூடிய எல்லா வசதிகளிலும் அவர் நிறைவு பெற்றிருக்கிறார். தாம் முன்னுக்கு வருவதற்கு அரும் பாடுபட்ட பெரிய தாய், குரு இவர்களின் வாக்குப்படி அன்று முதல் இன்றளவும் கலைக்குத் தொண்டாற்றுவதையே தம் வாழ்க்கை லட்சியமாகக் கொண்டிருக்கிறார். தம் கண்பார்க்க, தம்முடைய மாணவர்கள் கலையில் பிராபல்யம் அடைந்து நன்கு பிரகாசிக்கத் தாம் ஆற்ற வேண்டிய கடமைகளைப் பெரும்பாலும் ஆற்றிவிட்டார்; இன்னமும் ஆற்றி வருகிறார்.

முதற் பெண் ஜீவரத்தினம், இரண்டாவது பெண் கோமளவல்லி இருவருக்கும் இடையே ஓர் ஆண் சந்ததியையும் ஆண்டவன் அவர் கண்ணில் காட்டினார். உடனேயே மறைத்து விட்டார். அந்தக் குறையை நிவர்த்தி செய்துகொள்ளும் முறையில் மாப்பிள்ளைமார் இருவரையும் தம் அருமைப் புதல்வர்களைப் போலவே பாராட்டி வருகிறார். மூத்த மாப்பிள்ளை அப்பாசாமியை இவரே படிக்க வைத்தார். அவர் கல்வி கேள்விகளில்

தேர்ந்து போலீஸ் இலாகாவில் உத்தியோகம் ஏற்றுத் தற்போது திருவாரூரில் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டராகப் பணியாற்றி வருகிறார். இப்போது அவருடைய மூத்த குமாரன் கணேசன் கும்பகோணத்தில் பாட்டனார் வீட்டில் வளர்ந்துகொண்டு, இண்டர் வகுப்பில் படித்து வருகிறான். பிள்ளை அவர்களின் மற்றப் பேரன்மார்களும் பேத்திமார்களும் பாட்டனாரிடமேதான் சீரும் சிறப்புமாய் வளர்ந்து வருகின்றனர்.

இளைய புதல்வி கோமளவல்லியின் கணவர் சுப்பையா மாயூரம் இந்தியன் பாங்கியில் அலுவல் புரிந்து வருகிறார். பூர்விக சொத்துடன் போதிய வருமானமும் உடைய அவர்களின் இல்லற வாழ்க்கை இன்ப வாழ்க்கையாகவே நடைபெற்று வருகிறது. அவர்கள் மகிழ்ச்சியை வளர்க்க ஒரு பெண் குழந்தை தோன்றி வளர்ந்து வருகிறது. பிள்ளை அவர்களின் ஏனைய உறவினரும் நண்பர்களும் அங்கங்கே சுகமாக வாழ்ந்து வருகின்றனர்.

இந்த வரலாற்றைத் தொடங்குகிறபோது ராஜமாணிக்கம் பிள்ளை அவர்களின் உடல் நிலை பார்வை அளவில் அவ்வளவாகத் திருப்திகரமாக இல்லை. அதை முன்னுரை அறிமுகத்திலேயே குறிப்பிட்டிருக்கிறேன். ஆனால் இன்று, வரலாற்றை நிறைவேற்றும் தருணத்தில் அவருடைய உடல்நிலை பரிபூரண ஆரோக்கியத்துடன் விளங்குவதைக் கண்டு என் உள்ளம் ஆனந்த உணர்வினால் நிறைந்திருக்கிறது. அந்த ஆனந்த உணர்வோடு, 'ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமுமாக நீடூழி காலம் நல்வாழ்வு வாழ்ந்து கர்நாடக இசைக் கலைக்குப் பணியாற்ற வேண்டும்' என எல்லாம் வல்ல இறைவனை மனமார வேண்டுகிறேன்.

